பேராசிரியர் முனைவர்

## ந சுப்பு ரெட்டியார்

# நாவுக்கரசர்

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்



1916 2016

ந சுப்பு ரெட்டியார் 100

Centenary Committee Publication

# நாவுக்கரசர்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

திருநாவுக்கரசர் வரலாற்றையும், அவர்தம் தேவாரத் திறத்தையும் தம் தெளிந்த நடைத் தேனில் குழைத்து விருந்தாகவும், மருந்தாகவும் வழங்கியுள்ளார் பேராசிரியர் இந்நூலில். இந்நூல் பல்துறை நாட்டமுடைய வாசகர்களுக்கும், அவரவர் சுவைக்கும் நிலைக்கும் ஏற்றவாறு இன்புறுத்தி இதந்தரும் ஒன்றாக இயற்றப்பெற்றுள்ளது.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939502-4-1

eBOOK ~ மின் நூல்



# நாவுக்கரசர்


அருங்கலைக்கோன், சடகோபன் பொன்னடி, சேவா ரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல், கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

பேராசிரியர் முனைவர்

**ந சுப்பு ரெட்டியார்**

**முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்**

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்








1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*



திரு. S. R. நாக ரெட்டியார்

தோற்றம் : 12 - 7 - 1916

*திருச்சி மாவட்டம் வைரிசெட்டிப் பாளையம் பண்டகுலத் தோன்றல் ஈத்துவக்கும் இன்பம் கண்ட பெருந்தகை சிவனேசச் செல்வர்* திரு. எஸ். ஆர். நாக ரெட்டியார் *அவர்கட்கு*

## அன்புப் படையல்

செந்தமிழ்க் கன்பர்; பண்பினில் உயர்ந்தோர்;
திருந்துமெம் குலக்கதி ரானோர்;
சிந்தனை வளர்க்கும் விருந்தருள் அறிஞர்;
சீரிய வள்ளலார்க் கன்பர்;
நந்தலில் லாத நாமகள் பொலிய
நங்கலைக் கோவிலைப் படைத்தோர்;
சந்தமார் நாக ரெட்டியார்க் கிந்நூல்
சால்புறு காணிக்கை யாமால்.

# அப்பூதி அடிகட்கு இன்பம் தந்த பெருந்தகை

தேர்ந்தஉளத் திடைமிகவும் தித்தித் தூறும்
செழுந்தேனே சொல்லரசாம் தேவே மெய்ம்மை
சார்ந்துதிகழ் அப்பூதி அடிகட் கின்பம்
தந்தபெருந் தகையேஎம் தந்தை யேஉன்
கூர்த்தமதி நிறைவேஎன் குருவே எங்கள்
குலதெய்வ மேசைவக் கொழுந்தே துன்பம்
தீர்ந்தபெரு நெறித்துணையே ஒப்பி லாத
செல்வமே அப்பனென் திகழ்கின் றோனே![1]

—இராமலிங்க அடிகள்

1. *திருஅருட்பா — ஐந்தாம் திருமுறை — ஆளுடைய அரசுகள் அருள் மாலை—10.*

# சிறப்புப் பாயிர மலர்

பேராசிரியர் க. வெள்ளை வாரணனார்
(முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர், அண்ணாமலைப்
பல்கலைக் கழகம், தமிழ்ப் பல்கலைக் கழகம்)

1. நன்றுடையான் வீற்றிருக்கும் சிராப்பள்ளி
வட்டத்து நல்லோர் வாழும்
தொன்றுமுதிர் பதியின்கண் இரட்டியார்
தொன்மரபில் வந்த தோன்றல்
குன்றெனுஞ்சீர்ப் பெருங்குணத்தான் குறைவிலா
நல்லுளத்தான் கோதொன் றில்லான்
தென்றமிழ்தேர் பேராசான் சுப்புரெட்டி
யாரென்னும் செல்வ னாவான்.

2. ஊக்கமுடன் கல்விபயில் உரனுடையான்
தமிழார்வ முடையான் என்றும்
ஆக்கம்வளர் பணிபுரியும் ஆற்றலும்நல்
ஆர்வமுமே உருவாக் கொண்டான்

நோக்கமெலாம் கல்விநலம் வளர்ப்பதுவே
　　யெனக் கொளுநுண் ணுணர்வின் மிக்கான்
ஏக்கமென்ப தறியாதான் இவனெனச்சொல்
　　எழில்நலத்தான் இனிய நண்பன்.

3. பலகலையும் பயின்றுணர்ந்த பண்பாளன்
　　அன்பாளன் பாரோர் போற்றும்
நிலையுடைய **சான்றாண்மைக் கிலக்கியமாய்**
　　நிலவுபுகழ்க் குரிசில் நெஞ்சின்
நலமொன்றே பெருஞ்செல்வ மெனக்கொண்டு
　　நாடுமகிழ் நலத்தால் நாளும்
புலவருள மகிழ்கூர வேண்டுவன
　　புரிந்துவக்கும் புலமைச் செல்வன்.

4. ஆங்கிலமும் செந்தமிழும் **அறிவியலும்**
　　**பயின்றுணர்ந்த** அறிவன் கல்வி
ஓங்கிவளர் **துறையூரில்** உயர்நிலைப்பள்
　　ளியின்தலைமை யாசா னாகி
பாங்கினுளார் பாராட்ட மாணவர்கள்
　　நன்முறையிற் பயிலச் செய்தான்
யாங்குமிவன் அறிவியல்நூல் பயிற்றவல்லான்
　　எனப்புகலும் ஏற்றம் பெற்றான்.

5. ஆசிரியப் பயிற்சிபெற விழைவோருக்
காமுறையின் அறிவு நூல்கள்
மாசிரியப் பயிற்றிவளர் மாணவர்கள்
மதிநலத்தால் வளம்பெற் றோங்கத்
தேசுமிகு நூலியற்றித் தேர்ச்சிபெறச்
செய்துவக்கும் திறத்தான் 'யார்க்கும்
ஆசிரியன் இவன்' என்ன அறிஞரெலாம்
பாராட்டும் ஆற்றல் வாய்ந்தான்.

6. நகரத்தார் எனும்வணிகர் வாழ்காரைக்
குடியின்கண் நாடு வாழப்
பகரருஞ்சீர் அழகப்பர் நிறுவுசெழுங்
கலைநியமம் பலவுள் ஒன்றாய்த்
திகழ்தருநல் லாசிரியப் பயிற்சிதரு
கல்லூரி யாசா னாகித்
தகவுடனே தமிழ்பயிற்றும் முறையிதெனப்
பயிற்றுவிக்கும் தகைமை பெற்றான்.

7. பிறமொழியில் தோன்றிவளர் மேனாட்டின்
அறிவியல்நூ லனைத்தும் பேணி
முறைமைபெற வுணர்ந்திடநம் தாய்மொழியில்
மொழிபெயர்த்தல் முதற்றொண் டாமென்(று)

உறுதிபெற வுணர்ந்தமையால் ஆங்கிலநூல்
பலவற்றைத் தமிழின் கல்வித்
துறைவளர மொழிபெயர்த்தான் சுப்புரெட்டி
யெனும்பெயர்கொள் தோன்றல் மாதோ.

8. மானிடவுடலும் அணுக்கரு அமைப்பும்
வயங்குவா னொலித்தொலைக் காட்சி
ஏனைய பிறவும் உலகியல்வாழ்வில்
இற்றைநாள் உலவுபல் புதுமை
நானிலத்தமிழர் நாடொறும் உணர
நல்லன அறிவியல் நூல்கள்
தான்வரைந் தளித்தான் தமிழ்வழிஞானம்
தழைத்திட வேண்டுமென் றிவனே.

9. தொல்காப் பியரும் திருக்குறளும்
தொன்மை வளஞ்சேர் தொகைநூலும்
ஒல்காப் பெருமை இளங்கோவின்
சிலம்பும் ஒளிசேர் கம்பர்பிரான்
பல்காப் பியத்தின் வளங்கெழுமப்
பாடும் இராம காதையுடன்
நல்லோர் பயிலும் திருத்தொண்டர்
புராண முதலாம் நற்றமிழும்;

10. திருந்தப் பயின்றான் தமிழ்நடையின்
செப்ப முணரப் பலநூல்கள்
பொருந்த வரைந்தான் புகழுடனே
வாழ்ந்த புனிதர் அருள்வாழ்வும்
வருந்தி யுழைத்தே நாடுயர
வாழ்ந்த பெரியோர் வரலாறும்
அருந்தும் அமிழ்தாம் எனத் தமிழின்
அழகு திகழ வரைந்தனனால்,

11. நாடும் மொழியும் உரிமைபெற
நல்ல தமிழ்தேர் பாரதியார்
பாடும் பனுவல் முதலாகப்
பல்லோர் பயிலும் இலக்கியமும்
பீடு பெறுமவ் இலக்கியத்தின்
பெற்றி காணும் திறனாய்வும்
தேடி யரிதிற் கற்போர்க்குத்
தெவிட்டா விருந்து படைத்தனனே.

12. காலமும் கவிஞர் வாழ்வுங்
கருதுறு பொருளுந் தேர்ந்தே
ஏலவே இலக்கி யங்கள்
இயல்பினால் தோன்றும் மாட்சி

ஞாலத்தார் உணரும் வண்ணம்
நல்லன பலநூல் செய்தான்
சீலத்தால் மாந்தர் வாழ்வு
செம்மையிற் றிகழு மாறே.

12. தமிழ்பயிற் றும்முறைதந்த
தண்டமிழின் ஆசிரியன்
அமிழ்தனைய கவிதையையும்
பயிற்றும்முறை அறிவித்தான்
இமிழ்திரைசூழ் ஞாலத்தின்
இயல்புணர்த்தும் அறிவியலை
அமைதிபெறப் பயிற்றுமுறை
யிதுவெனவும் அறிவித்தான்.

14. திருவேங் கடவன் திருப்பெயரால்
திகழ்பல் கலைதேர் கழகத்துத்
தெளிதீந் தமிழின் துறைவளர்க்குஞ்
சீரார் தலைவ னாகியங்கே
உருவார் புலமைப் பணிகள்பல
ஊக்க முடனே செய்துவந்தான்
உயர்ச்சி பெறநன் மாணவரை
யுருவாக் கிடுநற் பேராசான்,

அருள்சே ருளத்தின் ஆழ்வார்கள்
அருளிச் செயலில் உளந்தோய்ந்தே
ஆய்வின் திறத்தால் முனைவர்பட்டம்
அளிக்கப் பெற்றான் அறிவியலின்
பொருள்சேர் கலைகள் தமிழ்மொழியிற்
பொலிந்து விளங்க மொழிபெயர்த்தே
புதிய நூல்கள் பலவியற்றிப்
புலமைப் பணிசெய் புகழாளன்.

15. மக்கள் வாழ உலகியல்நூல்
மட்டும் போதா வென்றுணர்ந்து
மன்னு தமிழில் முன்னோர்செய்
அருள்நூல் வழக்கும் வேண்டுமெனத்
தக்க வகையில் ஆழ்வர்கள்
அருளிச் செயலின் தகையுணர்ந்தே
தலத்தின் பெருமை நனிவிளங்க
நூல்செய் தளித்த தாளாளன்.
நக்கன் அருள்சேர் நாயன்மார்
நவிலும் திருப்பாட் டருள்நலத்தை
நாடுமகிழ விரித்து ரைக்கும்
நல்ல பணியுஞ் செய்வனென
மிக்க நாவுக் கரசர்தமிழ்
வீறு விளங்க நூல்செய்தான்
மேன்மை திகழும் சுப்புரெட்டி
யெனும்சேர் பெற்ற வித்தகனே.

16. சீரார் காழிப் பிள்ளையார்
திகழ்பே ரன்பால் அப்பரெனச்
செப்பும் திருநா வுக்கரசர்
சீர்த்தி மிக்க வரலாறும்
பாரோர் வாழ நாவரசர்
பரிவால் திருவாய் மலர்ந்தருளும்
பதிகப் பாடற் பொருள்நலமும்
பண்பார் தலத்தின் வரலாறும்
ஆர்வ முடனே கற்போர்கள்
அறிந்து மகிழத் தக்கவண்ணம்
அறமார் நாவுக்கரசரெனும்
ஆய்வு நூலை அளித்ததனால்;
சோர்வி லாமல் தமிழ்ப்பணிசெய்
தோற்ற முடையான் கற்றோர்கள்
சுப்பு ரெட்டி யாரெனும்பேர்
செப்ப விளங்கும் தூயோனே.

17. மாலோன் அருளின் ஆழ்வார்கள்
மூழ்கித் திளைத்து வாய்மலர்ந்த
நாலா யிரமும் முன்னோர்கள்
நவின்ற உரையின் நயப்பாடும்
ஏல வுணர்ந்தே கற்போர்கள்
இன்ப முறவே உரைநடைநூல்
சால வரைந்தான் திருத்தலத்தின்
பெருமை பலவுஞ் சாற்றினான்.

18. ஞாலமெலாம் உய்யவரும்
நம்பியா ரூரரெனும்
ஆலால சுந்தரனார்
வரலாறும் அம்மைமுலைப்
பாலார்ந்த பிள்ளையார்
தேவாரப் பாநலமும்
மேலாய வாசகத்தேன்
சுவைநலமும் விரித்துரைத்தான்.

19. பெருமை சிறுமை கருதாது
பேரன் புடனே யாவரொடும்
நெருங்கிப் பழகும் நீர்மையினான்
நின்ற சொல்லும் நேர்மையினான்
கருமை விரவா நெஞ்சத்தான்
கற்றோர் தமக்கே தன்பணியை
உரிமை செய்யும் உவப்புடையான்
உயிரோ ரன்ன கேண்மையினான்.

20. அயரா முயற்சி யாலறிவால்
வறுமை அகற்றும் ஆற்றலான்
செயிர்தீர் நட்பால் அன்பரொடு
சேர்ந்து பழகும் தெளிவுடையான்
மயர்வில் மனத்தான் மதிநலத்தால்
மக்கள் சுற்றம் மகிழ்கூரத்
துயர்தீர்ந் துலகம் வாழச்செய்
தூயோன் நேயம் மிக்குடையான்.

21. வையத்தின் வாழ்வாங்கு மனையறத்தில்
இன்பமுற வாழ்ந்து மக்கள்
செய்யத்தகும் அறங்கள் விருந்தோம்பல்
முதலாகச் செய்யும் சீரான்
தெய்வத் திருத்தலங்கள் பலவணங்கி
அருளாளர் செய்யும் வாய்மை
உய்வைத் தரவுரைந்தான் மனைமக்கள்
சுற்றமுடன் உவந்து வாழி!

22. வாழிசுப்பு ரெட்டியார் மனைமக்கள் சுற்றமுடன்
வாழிதமிழ் வளர்த்து வாழியரோ—ஏழிசைநேர்
நல்லதமிழ் நுகர்ந்து நாடு வளம்பெறவே
செல்வமுடன் வாழி சிறந்து.

*142, கனக சபை நகர்*
*சிதம்பரம் - 608 001*
*3-6-1986*

க. வெள்ளைவாரணன்

# அணிந்துரை

டாக்டர் அ. மா. பரிமணம் எம்.ஏ.,எம்.லிட்.,பிஎச்.டி.
(பதிப்பாசிரியர், வாழ்வியற் கலைக் களஞ்சியம்,
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை-613005)

சிறந்த இசையைக் கேட்கும் ஒருவன், தன்னையும் மறந்து அதன் இன்பத்தில் திளைக்கின்றான். அழகுமிக்க ஓவியத்தைக் காணும் ஒருவன், அக்காட்சியில் ஈடுபட்டு, இன்பமடைந்து மெய்மறந்து நிற்கின்றான். அந்த இசையும் ஓவியமும் அகன்றுவிட்டால், அவற்றைக் கேட்டும் கண்டும் இன்பத்தில் திளைத்தவர்கள், அவ்வின்பத்தை நினைவுகூர்ந்து மகிழ முடியுமே தவிர, அப்போது பெற்ற இன்பத்தினைப் பெற முடியாது. ஆனால் ஓர் அழகு மிக்க கவிதையை - இலக்கியத்தைப் பயின்றவர்கள் அது தம்மை விட்டு நீங்கிவிட்டாலும், அதனை மீண்டும் நினைவிற் கொண்டு, அதே இன்பத்தை எய்தலாம். முன்பு எய்திய இன்பத்தினும் மிக்க இன்பத்தை எய்தவும் கூடும்; தாம் பெற்ற அவ்வின்பத்தை மற்றவர்களும் பெறுமாறு செய்யவும் கூடும். இது கவிதைக் கலைக்கு - இலக்கியக் கலைக்கு- அமைந்த தனிச் சிறப்பாகும்.

அஞ்சிறைத் தும்பியாகி இலக்கிய இன்பம் நுகர்ந்தோர் வேறு இன்பத்தினை விரும்பார். புலவர் பலர் கூடி, உரை

யாடிப் பெறும் இன்பம் மறுமையில் அடையும் வீட்டின்பத்தினும் மேலானது என்பதனை,

'தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முள் குழீஇ
நகலின் இனிதாயின் காண்பாம் அகல்வானத்து
உம்பர் உறைவார் பதி'

—நாலடி. 137

என்னும் நாலடியார்ச் செய்யுள் நாடகப் பாங்கில், கவிதை நயம்படக் காட்டியுள்ளது. இலக்கியத்தில் போலவே, சமயவாழ்வில் குறிப்பாகப் பக்தித் துறையில் ஈடுபட்டிருப் போரும் தாம் போற்றும் இறை நலத்தைத் துய்ப்பதைவிட மேலான இன்பம் இல்லை என்றே கருதுவர். தாம் ஏற்றுப் போற்றும் தெய்வத்தை உளமார நினைத்து, வாயார வாழ்த்தி, உடலார வழிபட்டு அடையும் இன்பத்தினும் உயர்ந்த இன்பம் இல்லை என்பதனைப் பக்தி வழி நின்ற சான்றோர்களின் வாழ்வாலும் வாக்காலும் உணரலாம். திருமாலடியாராகிய தொண்டரடிப் பொடியாழ்வார், அரங்கப்பெருமானை, அச்சுதா, அமரர் ஏறே, ஆயர்தம் கொழுந்தே என்பனவாகக் கூறி வாயினிக்கப் புகழ்ந்து பாடும் இன்பத்திற்கு வேறாக இந்திரப் பெரும் பதமும் வேண்டியதில்லை என்று உறுதி கூறுகின்றார். அப்பாசுரம் வருமாறு:

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரர் ஏறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகரு ளானே.

—திருமாலை-1

சிவனடியாராகிய திருநாவுக்கரசர் தாமுகந்த சிவபெருமான் திருக்கோலத்தைக் கண்ட கண்களால் காண்பதற்கு வேறொன்றுமில்லை என்று தெளிவுபடுத்தியுள்ளார். அவர் அருளிய திருப்பாடல் வருமாறு:

பாளை யுடைக்கமு கோங்கிப் பன்மாடம் நெருங்கியெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயல் தில்லை தன்னுள்
ஆள வுடைக்கழல் சிற்றம்பலத்தரன் ஆடல் கண்டால்
பீளை யுடைக்கண் களாற்பின்னைப் பேய்த்தொண்டர்
காண்பதென்னே.

—அப்பர் தேவாரம் 4.81; 1

ஆழ்வார்களும் நாயன்மார்களுமாகிய அருட்சான்றோர்கள் இவ்வாறு தாம் வணங்கும் தெய்வத்தைப் பரவியும் பார்த்தும் பெற்ற அருளார் இன்ப அநுபவங்களை, இசை நலஞ் சான்ற பாடல்களில் தேக்கி வழங்கியுள்ள பக்திப் பனுவல்களே திவ்வியப் பிரபந்த, தேவார திருவாசகங்களாகும்; இலக்கிய நயமும் பக்தி நலமும் ஒருங்கே திகழும் அருட் கருவூலங்களாகும்; இயலும் இசையும் கூத்தொடு கலந்து களிநடம் புரியும் வண்ண மலர்ச் சோலைகளாகும்.

மாணிக்கவாசகர் சிற்றம்பலப் பெருமானைக் குறிப்பிடும் போது, அவன், நினைத்தாலும் பேசினாலும் கண்டாலும் அவ்வாறு செய்யும ஒவ்வொரு தடவையிலும் உலப்பிலாத ஆனந்தத் தேனை அளிக்கவல்ல கூத்துடையவன் என்று கூறுகின்றார். வண்டினை விளித்துக் கூறும் பாங்கில் அமைந்த அந்த அமுதவாசகம் வருமாறு:

தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும்பு உள்நெக ஆனநதத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ !

—திருவாசகம் - கோத்தும்பி-3

குனிப்புடையானின் சிறப்பாகக் கூறப்பட்ட 'நினைத் தொறும் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும் அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும்' இயல்பு, அவன் புகழ் பேசும் திருவாசகத்திற்கும், அதனை

ஒத்த அருட்பனுவல்களுக்கும் உண்டு. அந்த இயல்பினை நன்குணர்ந்த இராமலிங்க வள்ளலார் திருவாசக மாட்சி கூறுங்கால்,

:வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவைகலந்து
ஊன்கலந்து என்உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.

—திருவருட்பா - 3263 (ஐந்தாம் திருமுறை)

என இயம்பியுள்ளார். திருவாசகப் பாடலின் மாட்சி கூறிய இப்பாடலில், பொதுவாக இலக்கியப் பாடல்களைப்-குறிப்பாகப் பக்திப் பாடல்களைப் - பயின்று இன்பங் காண முற்படுவோர் தவறாது மேற்கொள்ள வேண்டிய கருத்து ஒன்றினைக் குறிப்பிட்டுள்ளார். அது 'நான்கலந்து பாடுதல்' என்பதாகும். பக்திப் பனுவல்களின் பயன் கொள்வதற்கு படித்தலோ பாடுதலோ மட்டும் போதா; படிக்கும் போதும் பாடும்போதும் 'நான்' கலக்கப் பெறுதல் வேண்டும்!

'நான்' கலத்தல் என்னும், பக்தி இலக்கிய அநுபவ உத்தியினை இக்கால இலக்கியத் திறனாய்வாளர் வேறு வகையாக விளக்குவர். கவிதை அநுபவம், பாடியோர், பாடுபொருள், பயில்வோர் என்னும் மூன்று கூறுபட்டதாகும். பாடுபொருள்பற்றிய உணர்ச்சியும், பாடியோர் உணர்ச்சியும் ஒன்றுபட அமைவதே கவிதை. அந்த இரு உணர்ச்சிகளும் ஒன்றுபட்டு விளங்கும் கவிதையில் பயில்வோரின் உணர்ச்சி ஒன்றுபடப் பயின்றால் அங்குக் கவிதை இன்பம் அநுபவமாகும். கவிதை இன்பத்திற்கு அடிப்படையாகிய முக்கூற்று உணர்ச்சிகளுள் கவிதையில் இரு உணர்ச்சிகள் நேர்பட்டு நிற்கின்றன. அவற்றோடு கற்போன் உணர்ச்சியும் இயைந்து நேர்படுதல் வேண்டும். மூன்று உணர்வுகளும் நேர்படுவதனையே 'நான் கலந்து

பாடுதல்' என்று வள்ளலார் குறிப்பிட்டார். முக்கோணம் பட அமைந்த உணர்வுகள் நேர்படும்போது எய்தும் கவிதை - இலக்கிய - இன்பம், கோதிலா இன்பமாக - குறைவிலா நிறைவாக - அமைகின்றது.

'நான் கலந்து பாடுதல்' என்னும் 'உணர்வு நேர்பாடு' பக்திப் பனுவல் அநுபவத்திற்கு மிக மிக இன்றியமையாத தாகும். அவ்வகையில் பக்திப் பனுவல்களைப் பயிலுதலும் பயின்றவற்றைப் பயில்வோர் உளங்கொளப் பகர்தலும் ஓர் அரிய கலையாகும். தமிழில் அந்த அரிய கலை கைவரப் பெற்றவர்களுள் குறிப்பிடத்தக்கவர் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர். ந. சுப்புரெட்டியார் அவர்கள் ஆவார்கள். பழந் தமிழ் இலக்கியங்களும், ஆழ்வார் அமுதும் அளிக்கும் இன்பத்தில் ஆழங்கால் பட்டு விளங்கும் இரெட்டியார வர்கள் 'நாவுக்கரசர்' என்னும் பெயரில் அவர்தம் வாழ்வை யும் வாக்கையும் தமிழ் கூறும் நல்லுலகிற்கு வழங்க முற்பட் டுள்ளது பாராட்டத்தக்க ஒன்றாகும்.

பேராசிரியர் டாக்டர். ந. சுப்புரெட்டியாரவர்கள் 'பிறந்து மொழி பயின்ற' நாளெல்லாம், பிறமொழிக் காழ்ப்பின்றித் தமிழ் நாட்டங்கொண்டு கற்றவராவர். அதனால், உயர் கல்வி நிலையங்களில் 'தமிழ் கற்பிக்கும் முறையினை' வகுத்து நூலுருவில் வழங்கிய பெருமை அவருக்குண்டா யிற்று. அறிவியல் கற்று அதனைப் பயிற்றும் தொண்டினை மேற்கொண்ட அவர்தம் வாழ்வு, தமிழ் இலக்கியம் பயின்று, சமயக் கல்வியில் மேம்பட்டு, 'வேத சிகையும் விரிகலையும், மெய்யன்பர் போதமும் போய்த் தீண்டாப் பூரணமாய்' விளங்கும் பரம்பொருளை உணர்ந்து அநுபவிக்கும் அருள் வேட்கைமிக்கு விளங்குகின்றது. தம் டாக்டர் பட்ட ஆராய்ச்சிக்கு இவர்கள் நம்மாழ்வாரின் அருளிச் செயல் களை ஆய்வுப் பொருளாகக் கொண்டார்கள். அயராத ஆய்வாலும், தணியாத அருள் ஞான வேட்கையாலும், தளராத போதனையாலும் தாம் பெற்ற அருளநுபவ இன்பத்தினைத் தமிழ் வையகம் பெற வேண்டும் என

விரும்பி அதனைப் பல அரிய நூல்களாக வெளியிட்டுள்ளார். திருமகள் கேள்வனாகிய பெருமாள் உகந்தருளப் பட்டனவும், ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப் பெற்றனவுமாகிய திவ்விய தேசங்களுக்குத் தமிழ் மக்களை இலக்கிய வழியில் ஆன்மிகப் பயணமாக அழைத்துச் சென்ற பெருமை டாக்டர் இரெட்டியாரவர்களுக்குண்டு.

சைவ வைணவ சமய வேறுபாடு கருதாமல் இருசமய அடியார் பனுவல்களிலும் ஈடுபட்டு இன்புற்றுத் திளைக்கும் மனநலத்தினைத் திரு. இரெட்டியாரவர்கள் வளர்த்துக் கொண்டுள்ளார்கள். தமிழகத்தின், சமயக் காழ்ப்பின்றிச் சைவ வைணவ இலக்கியச் செல்வங்களை ஆரத்துய்த்து அவற்றின் நலங்களைத் தமிழ் மக்களுக்குத் தம் பேச்சாலும் எழுத்தாலும் வரையாது வழங்கிய சிறப்பு இன்று அமரராக விளங்கும் தமிழ்க்கடல், சிவமணி, சிவம்பெருக்கும் சீலர் இராய. சொ. அவர்களைச் சாரும். உழுவலன்பினராய் அவர்களோடு பல ஆண்டுகள் உணர்வு ஒன்றப் பழகிய திரு. இரெட்டியாரவர்கள்பால், சமய வேறுபாடின்றித் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களையும், தேவார, திருவாசகப் பாக்களையும் நலமுணர்ந்து சுவைக்கவும் தாம் சுவைத்தவாறே மற்றவர்களைச் சுவைக்கச் செய்யவும் அமைந்த திறம் குறிப்பிடத்தக்கது. சைவ சமய குரவர்களாகத் திகழும் நால்வர் பெருமக்களின் வரலாற்றையும், அருளிச் செயல்களையும் தம்முடைய பாணியில் தமிழ் மக்களுக்கு வழங்க வேண்டும் என்று விரும்பிய டாக்டர் இரெட்டியாரவர்களின் வேணவா 'தம்பிரான்தோழர்' என்னும் பெயரில் அவ்வரிசையின் முதல் நூலாக வெளிவந்துள்ளது. அதனை அடுத்துத் நாவுக்கரசர் என்னும் பெயரில் இந்நூல் வெளிவருகிறது. எஞ்சிய இரு நூல்களும் விரைவில் அடுத்தடுத்து வெளிவரும் என்னும் நம்பிக்கை உண்டு. ஆழ்வார் பாசுரங்களுக்கு அமைந்துள்ள ஈடு முதலிய வியாக்கியானங்களை நன்கு கற்றுணர்ந்து அநுபவித்ததால், டாக்டர் இரெட்டியாரவர்கள், நாயன்மார்களின் பதிகங்

களை நோக்கும் கோணத்தில் புதுமையும் பொலிவும் திகழ்கின்றன. இரெட்டியாரவர்கள், அருட்பாசுரங்களைச் சுவைக்கும் பாங்கினை, அச்சுவையினைப் புலப்படுத்தும் பாணியை இந்நூலின் பக்கந்தோறும் காணமுடிகின்றது.

சைவ சமய குரவர் நால்வருள் ஒருவராகிய திருநாவுக்கரசர், உலகில் இதுகாறும் தோன்றியுள்ள இறையருட் செல்வர்களின் வரிசைகளில் முதல்வரிசையில் இடம்பெறத் தக்க மாட்சியுடையவர். அவர், தம் இளமையை, மெய்ப்பொருள் நாட்டங் கொண்டு அதனைத் தேடிக் கண்டடையும் முயற்சியிலும், முதுமையைத் 'தாம் தேடிக் கண்டு கொண்ட' மெய்ப்பொருள் அநுபவ இன்பத்தினை மக்களுக்கு எடுத்துக் கூறி அவர்களை நெறிப்படுத்தும் முயற்சியிலும் கழித்த நடையறாப் பெருந்துறவி. அவருடைய வாழ்க்கை, ஒரு சராசரி மனிதனால் முயன்றடைய முடியாதவாறு, வானத்து மதியமாய், வளர் இமயச் சிமயமாய்க் காணப்படுவதின்றித் தம்முடைய வாழ்க்கையொடு ஒத்தும் உறழ்ந்தும் கண்டு, நெருங்கிச் சென்று போற்றிக் கொள்ளத்தக்க எளிமையும் ஏற்றமும் கொண்டு விளங்குகின்றது. அது மனித சமுதாயத்தை விடுத்து, விலகி விலகிச் செல்வதாக அமையாமல், அதன்பால் நெருங்கி நெருங்கி வந்து, அணைத்து ஆறுதல் அளிக்கும் பாங்கில் அமைந்து திகழ்கின்றது! ஆன்ம ஈடேற்றம் விரும்பும் மக்களுக்கு அவர் வாழ்க்கை, ஒரு கலங்கரை விளக்கம்; அவர்தம் வாக்கு, வழுக்கு நிலத்திற் கிடைத்த ஊன்றுகோல்! தென்னக மக்களின் - குறிப்பாகத் தமிழ் மக்களின் - ஆன்ம ஞான வெளியீடாகத் திகழும் சித்தாந்த சைவ சமயத்தின் கோட்பாடுகள், சாத்திரம் வடிவம் பெறுவதற்கு உதவியாக அமைந்த கருத்துக் கருக்கள் திருநாவுக்கரசர் திருவாக்கில் - தேவாரத்தில் - இலை மறை காயாக இலங்குகின்றன. சிவபெருமான் சாத்திரமும் தோத்திரமுமாக அமைந்து விளங்கும் இயல்பினைத் திருநாவுக்கரசர் அழகுறக் காட்டியுள்ளார். அவர்தம்

பாடல்களும் அவ்வாறே சாத்திரமும் தோத்திரமுமாக அமைந்து சிவம் பெருக்கும் ஞானச் செல்வமாகத் திகழ் கின்றன.

சுந்தரமூர்த்தி சுவாமிகளால் தொகுத்தும், நம்பி யாண்டார் நம்பியவர்களால் வகுத்தும் கூறப்பெற்ற சிவனடியார் வரலாறுகளைச் சேக்கிழார் விரித்துப் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டத் திகழும் திருத்தொண்டர் புராணமாக - பெரிய புராணமாக - இயற்றியுள்ளார். சோழ மன்னரின் முதலமைச்சராகத் திகழ்ந்த சேக்கிழார் தமக்கு முந்திய சிவனடியார்களின் வரலாறுகளுக்கான கல்வெட்டு, இலக்கியம், மரபுகள் பற்றி அமையும் சான்றுகளைத் திரட்டி, அவற்றைக் கவிதைச் சுவையுடன் கலந்து வரலாற்றுக் காவியமாகத் தந்துள்ளார். அவர் கூறிய அடியார் வரலாறுகளின் உண்மைகளை மாற்றவோ மறுக்கவோ முற்படாமல் சைவ உலகம் ஏற்றுக் கொண்டு போற்றி வருகின்றது. இது சேக்கிழார் பெற்ற பெருஞ்சிறப் பாகும். சுந்தரர், நாவுக்கரசர், ஞானசம்பந்தர் ஆகிய தேவார மூவர்களைப் போலவே சமய வாழ்வும், இறையருளநுபவமும் சிறந்து, சைவ சமய நால்வருள் ஒருவராய்த் திகழும் மாணிக்கவாசகரின் வரலாறு சேக்கிழார் சுவாமிகளால் அருளப்படாமை சைவ உலகினுக் கோர் தவக்குறையேயாகும். அவர்தம் வரலாற்றை விளக்கும் புராணங்கள் கூறும் வரலாற்றுச் செய்திகளில் சில வேறுபாடுகள் அமையக் காண்கின்றோம். சேக்கிழார் சுவாமிகளால் ஐயந்திரிபுகட்கு இடமின்றி அமைக்கப் பட்டுள்ள திருநாவுக்கரசர் வாழ்க்கை வரலாறு, அவர்தம் வாழ்வையும் வாக்கையும் பாவும் ஊடுமாய் இணைத்து வழங்கும் கவின்மிக்க கலைவண்ண ஓவியஎழினியாகத் திகழ் கின்றது. இதற்கு முன்னர்த் திருநாவுக்கரசர் வாழ்க்கை யினைப் பலர் வடித்துத் தந்துள்ளனர்; சிலர், சோதனைக் குழலில் இட்டுச் சோதித்து அதன் மாற்றுயர்ந்த மாண் பினைப் புலப்படுத்தியுள்ளனர். சேக்கிழார் சென்னெறி

யினைப் பருந்தும் நிழலுமாய்ப் பின்பற்றிச் சென்று டாக்டர் ந. சுப்புரெட்டியாரவர்கள் திருநாவுக்கரசர் வரலாற்றையும், அவர்தம் தேவாரத் திறத்தையும், தம் தெளிந்த நடைத் தேனில் குழைத்து விருந்தாகவும் மருந்தாகவும் வழங்கியுள்ளார்.

தொண்டைமண்டலத் திருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரில் வேளாண்குடியில் புகழனாருக்கும் மாதினியாருக்கும் பிறந்த திலகவதியாருக்குப் பின்னர்த் திருமகனாக மருள் நீக்கியார் என்னும் பெயரில் திருநாவுக்கரசர் தோன்றினார். பெற்றோர் திலகவதியாருக்குக் கலிப்பகையாரை மணஞ்செய்ய இசைந்திருந்த நிலையில் அவர் போரில் உயிர் கொடுத்துப் புகழ் பெற்றார். பெற்றோரும் இறந்த நிலையில் மருள்நீக்கியார் வேண்டுதலால் திலகவதியார் 'அம்பொன்மணி நூல் தாங்காது அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி' மனைத்தவம் புரிந்து, தம்பியாரைப் புரந்து வந்தார். தம் குடும்பத்தில் நேர்ந்த இறப்புகளால் 'நிலையாமை உணர்ந்து, அறம்பல புரிந்து, மெய்ப்பொருள் நாட்டங் கொண்டு' விளங்கிய மருள்நீக்கியார், 'சமயங்கள் ஆனவற்றின் நல்லாறு தெரிந்துணர நம்பன் அருளாமையால்' கொல்லாமை மறைந்துறையும் சமண சமயம் சார்ந்து, தருமசேனராகி விளங்கினார். திலகவதியாரின் வேண்டுதலால் இறைவன் தருமசேனருக்குச் சூலைநோய் அளிக்க, அதனை நீக்கும் இறுதி முயற்சியாகத் தமக்கையார் அளித்த 'திருவாளன் திருநீறு' கொண்டு, நோய் நீங்கப் பெற்றுச் சைவ சமயத்திற்கு மீண்டார். பொய்யமணர் தூண்டுதலால், நீற்றறையிலிடல், நஞ்சூட்டல், களிற்றால் இடறச் செய்தல், கடலில் பாய்ச்சுதல் என்று அரசன் செய்த கொடுமைகளிலிருந்து, திருவருள் துணையால் உய்ந்து, சிவம் பெருக்கும் தொண்டினைத் தொடங்கித் தொடர்ந்தார். 'எழுந்திரீர் பணி செய்வீர்' என்று தம் தமக்கையார் திருமொழிகளையே குருமொழியாகக் கொண்டு கையில் உழவாரமும் மெய்யில் திருநீறும்

கொண்டு, 'கூற்றாயினவாறு' எனத் தொடங்கிக் கோதில் திருப்பதிகம் பாடிச் சிவத்தொண்டு புரியலானார். 'திருநாவுக்கரசு' என இறைவனால் அன்போடு அழைக்கவும் பெற்றார்.

திருப்பதிகள் பலவும் சென்று உழவாரப் பணி செய்தும், ஒண்தமிழ்ப்பதிகங்கள் பாடியும் வந்த நாவுக்கரசர் திருஞான சம்பந்தரால் 'அப்பர்' என அழைத்துப் போற்றப் பெற்றார். இறைவனை வேண்டி அவன் திருவடி சூட்டப் பெற்றார். தமிழகத்திலுள்ள தலங்கள் தோறும் அடியார் குழாத்துடன் சென்று பதிகத் திருத் தொண்டு புரிந்து வந்த திருநாவுக்கரசர் சிவபெருமான் கைலாயத்தில் இருக்கும் காட்சி காண விரும்பி வடநாடு சென்று இமய மலைமீது ஏறிச் செல்லுகையில் சிவபெருமான் அருளால் திரும்பப் பெற்றுத் திருவையாற்றில் தாம் விரும்பிய கயிலைக் காட்சியைக் கண்டின்புற்றார். மீண்டும் தமிழகத்தில் தம் பதிகத் தொண்டினைத் தொடர்ந்த நாவுக்கரசர் திருப்புகலூரில் இருந்தபோது, உழவாரம் இட்ட இடங்களிலெல்லாம் பொன்னும் மணியும் பொலிந்து தோன்ற, அவற்றை உழவாரத்தால் ஏந்திப் பொற்கமல வாவியுள் புக வீசினார். அகப்பற்றும் புறப்பற்றும் அற்று விளங்கிய அப்பரடிகள் 'என்னை இனிச் சேவடிக்கீழ் இருத்தியிடும்' என்று வேண்டித் தம் முடிவினை முன்னுணர்ந்து 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன், பூம்புகலூர் மேவிய புண்ணியனே' என்று கூறி ஒரு சித்திரைச் சதய நன்னாளில், 'அண்ணலார் சேவடிக்கீழ்' அமர்ந்தார். திருவாமூரில் தோன்றி மெய்ப்பொருள் நாட்டத்தில் பல் சமய நெறிகள் கற்றும், சமணம் சார்ந்தும், பின்னர்ச் சைவம் திரும்பியும், தம் உழவாரத்தாலும் தேவாரத்தாலும் உயர் சைவம் பெருக்கியும், சிவபெருமான் திருவடிக்கீழ் ஓர் 'தலைமறைவினை' அருளப்பெற்றுத் திருப்புகலூரில் நிறைவெய்திய நாவுக்கரசரின் எண்பத்தோராண்டு வாழ்வுச் சுருக்கம் இதுவாகும். ஆமூரில் முகிழ்த்த தவ வாழ்வு, புகலூரில் பூரணம் எய்திப் பொலிவுற்றது!

தேவார மூவர்களின் தொண்டு, பதிகள் பலவற்றிற்கும் அடியார்களோடு சென்று பதிகம் பாடி ஆங்காங்குள்ள மக்களை இறையுணர்வில் தோயச் செய்து அவ்வகையில்

சைவம் தழைக்கச் செய்தமையே யாதலின் அவர்களுடைய வரலாறுகளைக் கூறவந்த சேக்கிழார், அச் சான்றோர்கள் மேற்கொண்ட திருத்தலப் பயணங்களையும், ஆங்காங்கே நிகழ்ந்தனவற்றையும் முறைப்பட எண்ணி முந்து நூலாகப் படைத்துள்ளார். பிறப்பு, வளர்ப்பு, சமண் சமயம் புகுதல், சூலை நோயால் தடுத்தாட்கொள்ளப்பெறுதல், சமணர் சூழ்ச்சி, திருவதிகை ஈடுபாடு என்னும் தலைப்பு களில் நாவுக்கரசர் சைவ சமயத்திற்கு மீண்டு, பதிகப் பெருவழி அமைத்துச் சிவத்தொண்டு தொடங்கும் வரையி லான வரலாற்றைச் சேக்கிழார் வாக்கை இடைமிடைந்து கூறியுள்ளார் இந்நூலாசிரியர். அடுத்துத் திருநாவுக்கரசர் மேற்கொண்ட புனிதப் பயணங்களை வகைப்படுத்திக் கொண்டு விரிவாக விளக்கியுள்ளார். அப்பயணங்களை நாடுகள் அடிப்படையில் சோழ நாட்டுத் திருத்தலப் பயணம், தொண்டை நாட்டுத் திருத்தலப் பயணம், திருக் கயிலாயத் திருப்பயணம், பாண்டிநாட்டுத் திருத்தல வழிபாடு என வகுத்து விவரித்துள்ளார். இடையே, நாவுக்கரசர் திருஞானசம்பந்தரோடு இணைந்து சென்றமை, அப்பூதி அடிகளோடு அமைந்த அற்புதத் தொடர்பு, திருவாரூர் நிகழ்ச்சிகள், திருப்பூந்துருத்தியில் திருமடம் அமைத்திருந்தமை போன்ற நிகழ்ச்சிகளைச் சிறப்புறத் தொகுத்துள்ளார். நாவுக்கரசர் திருப்புகலூரில் எய்திய திருவடிப்பேற்றோடு வரலாற்றினை நிறைவு செய்து, அவர்தம் வாக்கினைப் பல்வேறுபடத் திகழும் பொதுப் பதிகங்களை விளக்குவதாலும், அருளிச் செயல் களை விளக்குவதாலும் ஆய்ந்து காட்டியுள்ளார்.

ஒரு தலத்திற்கு சென்று திருப்பதிக வழிபாடு ஆற்றிய பின்னர் அப்பர் பெருமான் அடுத்த தலம் செல்வதனைத் திரைக்காட்சி போலக் காட்ட முற்படும் திரு. இரெட்டியாரவர்கள், அதனைச் சுருக்கமும் தெளிவும்படக் காட்டுகின்றார். 'திருவேட்களம்' என்னும் திருத்தல வழிபாட்டினைப் பின்வருமாறு (பக்-63) காட்டியுள்ளார்.

> "'தில்லையிலிருந்து 'திருவேட்களம்' என்னும் திருப்பதிக்கு வருகின்றார். நன்று நாள் (4. 42) என்ற முதற்குறிப்புடைய பதிகம் பாடி, வேட்களத் திறைவனைவழிபடுகின்றார்.

அல்லல் இல்லை; அருவினை தானில்லை
மல்குவெண் பிறைசூடும் மணாளனார்
செல்வனார் திருவேட்களம் கைதொழ
வல்லராகில் வழியது காண்மினோ (4)

என்பது இப்பதிகத்தின் நான்காவது பாடல். அடுத்துத் திருக்கழிப் பாலைக்கு எழுந்தருளுகின்றார். 'வனபவள வாய்திறந்து' (4.6) என்ற பதிகம் பாடிக் கழிப் பாலை இறைவனை வழிபடுகின்றார். இது நாயகி நிலையில் 'தாய்ப்பாசுரமாக' அமைந்துள்ளது. அதாவது, தாய் காதல் வயப்பட்ட தன்மகள் நிலையை எடுத்துக் கூறுவதாகப் பாசுரம் நடக்கின்றது''.

தலப் பயணங்களை விளங்குங்கால், திரு. இரெட்டியார வர்கள் அமைத்துக் கொண்ட முறை இதுவாகும். இதில், எந்த ஊரிலிருந்து எந்த ஊருக்குச் செல்கின்றார், வழி பாட்டிற்குப் பின்னர் எந்த ஊருக்குப் பயணத்தைத் தொடர்கின்றார், பாடிய பதிகத்தின் தொடக்கம் என்ன, அப்பதிகத்தில் இடம் பெற்ற நயமிக்கதொரு பாடல் ஆகியன போன்ற விவரங்களைக் கொடுத்து விடுகின்றார். பதிக முதற் குறிப்பினைச் சுட்டும்போதும், பாடலை எடுத்துக் காட்டும்போதும் திருமுறையில் அவை அமைந் துள்ள இடத்தைக் கண்டறியும் வகையில், உரிய எண்ணினை, திருமுறை - பதிகம் - பாடல் ஆகியவற்றின் எண்களைப் பிறைக் கோட்டினுள் தந்துள்ளார். குறிப் பிட்ட ஒரு பாடலின் இருப்பிடத்தை அறிய விரும்பும் ஆய்வாளருக்கு இந்த விவரம், மூலத் திருமுறை நூலினுள் தேடவேண்டாது காண உதவும் அருங்குறிப்பாகும். ஒவ்வொரு பதிகத்திலிருந்தும் எடுத்துக்காட்டாகக் காட்டப் பெறும் முழுப்பாடல், தேவாரப் பதிகப் பாடலைச் சுவைக்க விரும்பும் இலக்கிய விரும்பிகளுக்கு நல்ல தீனியாக அமைகின்றது. 'தாய்ப் பாசுரமாக அமைந்துள்ளது' என்பது போலக் காட்டப்படும் பதிகக் கருத்து விளக்கம் இலக்கியச் சுவைஞர்களுக்கு அளித்த சுவைக் குளிகையாகும்.

தலங்களைப் பற்றிய விவரங்களை நூலின் ஊடே தந்து நூலோட்டத்திற்கு ஊறு விளைக்காமல், அவ்வப் பதிகத்தின் அடியில் அடிக்குறிப்பெண் இட்டுக் கொடுத் திருப்பது இந்நூலின் சிறப்பாகும். ஊர்பற்றிய விவரங் களைத் தேவைப்படுவோர் தேடிச் செல்ல வேண்டாது ஆங்காங்கே அறிந்து கொள்ள வாய்ப்பாக அமைந்த இம்

முறை செம்முறையாகும். வேட்களம், கழிப்பாலை ஆகிய இருதலங்கள்பற்றிய திரு. இரெட்டியாரவர்களின் குறிப்புகள் (பக். 62, 63) வருமாறு:

> "வேட்களம் : சிதம்பரம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 1 கல் தொலைவு. பேருந்து வசதியுண்டு. அண்ணாமலைப் பல்கலைக் கழக வளாகத்தின் கீழ்க்கோடியில் உள்ளது. அருச்சுனன் பாசுபதாஸ்திரம் பெற்ற தலம். சம்பந்தர் இத்தலத்தைத் தம் தங்குமிடமாக வைத்துக் கொண்டு தில்லைக்கு அவ்வப்போது வழிபடச் செல்வார் என்று பெரிய புராணம் கூறும்.
>
> கழிப்பாலை : சிதம்பரம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 3 கல் தொலைவிலுள்ளது. பழைய தலத்தை கொள்ளிட நதி வெள்ளம் அடித்துச் சென்றது. இப்போதுள்ள கோயில் நெல்வாயில் ஆகிய சிவபுரியில் ஒரு தனிச் கோயிலாக உள்ளது."

பேச்சாளர் பற்றி, சில சொல்லல் தேற்றாதவரே, பல சொல்லக் காமுறுவர் என்னும் வள்ளுவர் கணிப்பு எழுத்தாளருக்கும் பொருந்துவதாகும். எதுகை மோனைச் சொல்லலங்காரப் புனைவுகளில் கருத்தினைப் புதைத்து விடும் இயல்பு திரு. இரெட்டியாரவர்களிடம் இருந்ததில்லை. இவர் காவியமாயினும், கவின்கலையாயினும், அறநூலாயினும் அறிவியலாயினும் தாம் கூறும் செய்திகளை எளிமையும் தெளிவும் பெற விளக்குவார். வேட்களம் கழிப்பாலை ஆகிய இரண்டு தலங்களையும் பற்றிய செய்திகள் சில வரிகளில் அமைந்துள்ளனவேனும், அவற்றின் இருப்பிடம், பண்டைநலம், அண்மைக் காலச் சிறப்பு ஆகியவற்றைத் தக்க சான்றுடன் காட்டுவனவாக அமைந்துள்ளன. சமயம், தத்துவம், இலக்கியம், வரலாறு, முதலிய பல்துறை நாட்டமுடையவர்க்கும் பெரிய புராணம் அவ்வவ்துறைச் சிறப்புமிக்க நூலாக விளங்கி இன்பஞ் செய்வது போல, திரு. இரெட்டியாரவர்களின் நாவுக்கரசர் நூலும், பல்துறை நாட்டமுடைய வாசகர்களுக்கும் அவரவர் சுவைக்கும் நிலைக்கும் ஏற்றவாறு இன்புறுத்தி இதந்தரும் ஒன்றாக அமைந்துள்ளது. நாவுக்கரசர் வரலாற்று வழித் தமிழகத்திலும் தமிழகத்திற்கு அப்பாற்பற்ற இடங்களிலும், சைவப் பயிர் வளர்க்கும் பக்திப் பண்ணைகளாகத் திகழும் திருத்தலங்களுக்குப் பயணஞ்

செய்ய விரும்புவோருக்கு அரியதொரு வழிகாட்டியாய் - விளக்க ஏடாய் — இந்நூல் விளங்குகின்றது.

சுந்தரர் முற்பிறப்பு வரலாறு சேக்கிழாரால் வெளிப் படப் கூறப்பட்டுள்ளமைபோல, நாவுக்கரசரின் முன்னை வரலாறு பெரிய புராணத்தில் கூறப்படவில்லை. எனினும் அதுபற்றிச் சில கதைகள் வழங்கி வருகின்றன. இந்நூலா சிரியர், 'உடன்பிறந்தான் முன்னமே முனியாகி எமை யடையத் தவ முயன்றான்' என்று இறைவாக்காக வரும் தொடரும், 'பண்டுபுரி நற்றவத்துப் பழுதின் அளவு இறை வழுவும் தொண்டர்' என்ற தொடரும் இப்புனைவுகளுக்கு வித்துக்களாக அமைகின்றன என்று சுட்டி, அக்கதைகளை யும் இந்நூலில் காட்டியுள்ளார் (பக். 8, 9.). அக்கதை ஒன்றில், 'இராவணன் அநுபவித்து எஞ்சிய துன்பத்தை நீ அநுபவித்து எம்மை அடைவாயாக' என்பது இறைவன் கட்டளையாக அமைகின்றது'' என்று இவ்வாசிரியர் காட்டியிருப்பது 'பொருந்தப் புனைவு' வகையினைச் சார்ந்ததாகும்.

பதிகப் பாடலின் கருத்தினை விளக்கிச் செல்லுகையில், மரபான விளக்கத்தோடு, இன்றைய உலகியலுக்குப் பொருந்தும் வகையில் விளக்கிச் செல்வது திரு. இரெட்டி யாரவர்களிடம் காணப்படும் ஒரு சிறப்பாகும். கடம்பூர்ப் பதிகத்தினைச் சுட்டி அதிலமைந்துள்ள, 'நங்கடம்பனைப் பெற்றவன் பங்கினன்' என்னும் பாடல் இக்கால நிலைக்குப் பொருந்துமாற்றை விளக்கிக் காட்டியிருப்பது அதற்கோர் சிறந்த எடுத்துக்காட்டாகும் (பக். 92). அப்பாடலில் ''தன்கடன் அடியேனையும் தாங்குதல் என்கடன் பணி செய்து கிடப்பதே'' என வரும் அடிகளை இக்காலக் குடியரசு ஆட்சிக்குப் பொருந்துமாறு விளக்கியுள்ளார்.

அகத்துறைக் கருத்தமைந்த பாடல்களை விளக்கும் போது, அப்பாடலுக்கேற்ப 'வண பவள வாய் திறந்து' எனத் தொடங்கும் பாடல் நாயகி நிலையில் தாய்ப்பா சுரம்' (பக். 63) என்றும், 'வஞ்சித் தென் வளைகவர்ந் தவன்' எனத் தொடங்கும் பாடல் 'மகள் பாசுரம்' (ப. 118) என்றும் குறிப்பிட்டுச் செல்வது, ஆழ்வார் பாசுரங்களுக்கு அமைந்துள்ள வியாக்கியானங்களை ஆசிரியர் பயின்றதன் பயனாகும். ஆழ்வார் பாசுரங்களைப் பயின்ற சுவை முதிர்ச்சியால் இவர், 'உருகுமனத் தடியவர்

கட்கு ஊறும் தேனை' என்னும் திருத்தாண்டகத்தைக் குறிப்பிடும்போது, 'உளங்கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்தில் ஊறும் தேனை' என்ற திருமங்கையாழ்வார் பாசுரத் தொடரினை எடுத்துக்காட்டுவது (பக். 140) இன்பம் பயப்பதாக உள்ளது. ''திருக்குறுந்தொகைச் செந்தமிழ் மாலையால் சேவிக்கின்றார்' (பக் 192) என்று கூறியிருப்பது வைணவ மரபில் ஊறிய ஆசிரியர் தம் சொல்லாட்சிச் சிறப்பாகும்.

'உயிராவணம்' எனத் தொடங்கும் பதிகத்தில் இடம் பெற்றுள்ள 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்னும் பாடலின் பொருளை விளக்கிப் பின், 'பாசத்தை நீக்கிப் பதியை அடையும் உயிரின் தன்மை கூறுகிறது என்று கருத்துரைக்கும் ஆசிரியர், 'தனியாக ஓர் அகப்பாடல் எப்படி வந்து இப்பதிகத்தில் ஏறியது என்பதை அறியக் கூடவில்லை'. (பக். 154) என்று கூறியிருப்பது எண்ணத் தக்கது. பொதுவாக ஒரு பதிகப் பாடல்கள் அனைத்தும் ஒரு போக்குடையனவாகும். அரிதாகச் சில பதிகப் பாடல்கள் பல் போக்குடையனவாக அமைதல் உண்டு. அவ்வகையிலமைந்த 'உயிராவணம்' என்னும் தொடக்கப் பாடல் கொண்ட பதிகத்தின் இடையே பொருளால் வேறுபட்ட பாடல் - அகப்பாடல் - ஒன்று இடம் பெற்றுள்ளதெனக் கொள்ளுவது ஏற்புடையதாகும்.

திருமறைக் காட்டில் அப்பரும் சம்பந்தரும் ஆலயக் கதவினைத் திறக்கவும் மூடவும் பாடிய பாடற் சூழலை விளக்கும்போது, 'இந்த அற்புத நிகழ்ச்சி பண்டை நான் மறைகட்கும் திருநாவுக்கரசர் அருளிய தேவாரத் திருமுறைகட்கும் சிறிதும் வேற்றுமை இல்லை என்பதனைத் தெளிவாக வலியுறுத்தலைக் காண்கின்றோம்' என்று கருத்துக் கூறியிருப்பது, குறிப்பிடத்தக்கது (பக். 173). அவ்வாறே அப்பரும் சம்பந்தருங் கண்ட 'வாய்மூர்க் காட்சி' பற்றிய விளக்கமும் சிறப்பாக உள்ளது (பக். 177).

'சிவபெருமானின் திருவடிப்புகழ்ச்சி இப்பதிகத்தின் தனித்தன்மையாகும்' என்று ஒரு பதிகக் கருத்துரைத்த ஆசிரியர், 'கலம்பகம் போன்ற சிற்றிலக்கியங்களில், 'புயவகுப்பு, திருவடி வகுப்பு' போன்ற உறுப்புகளில் பாடல்கள் அமைவதற்குத் திருமுறை வித்திட்டிருக்கலாம்

என்பதற்கு இப்பதிகம் நல்லதொரு சான்று' என்று கூறியிருப்பது (பக். 200) ஏற்கத் தக்கதாகும்.

அப்பரடிகள் ஐயாற்றில் கண்ட கயிலைக் காட்சிக் கருத்தினை ஆசிரியர், கண்ணாற் காணும் உலகின் பன்மை யோனிகளில் இறைவன் உடனாகி நின்ற காட்சி முதற் காட்சி; இறைவன் காணப்படும் உலகினோடு உடனாகி நிற்பதேயில்லாமல் தனித்து வேறாகியும் நிற்பான்; இந்தக் காட்சியே இரண்டாவது காட்சி' எனத் தத்துவ நிலையில் சிறப்பாக விளக்கியுள்ளார் (பக். 246).

தலைப் பதிகங்களாக அல்லாமல், பொதுப் பதிகங் களாக அமைந்துள்ள சில பதிகங்களின் சிறப்பு, பெயர்க் காரணம் போன்றவற்றை விளக்கிய ஆசிரியர், திருநாவுக்கரசர் அருளிச் செயல்கள், அப்பர் தேவார யாப்பமைதி, பதிகங்களின் சிறப்புகள் போன்ற செய்தி களை இறுதியில் விளக்கியுள்ளார்.

நம் காலத்தில் காந்தியடிகள் அரசியலில் ஆன் மிகத்தைக், கலந்து மேற்கொண்ட உண்ணாநோன்பு, சத்தியாக்கிரகம் ஆகியவற்றின் முன்னோடியாய் விளங்கிய வராய் தயாமூலதன்மம் என்பதனை வாழ்க்கை நெறி யாகவும், தத்துவமாகவும் கண்டு காட்டிய பெருமை மிக்கவராய் விளங்கிய திருநாவுக்கரசரின் வாழ்வினையும் வாக்கினையும் அழகிய வரலாறாகத் தொகுத்து வழங்கிய பேராசிரியர் டாக்டர் சுப்புரெட்டியாவர்கள் தமிழ் மக்களின் பாராட்டிற்கு உரியவராகின்றார்.

தமிழ்ப் பல்கலைக் கழகம்<br>தஞ்சை - 613005<br>22 - 6 - 1986

அ. மா. பரிமணம்

# நூல் முகம்

இடையறாப் பேரன்பு மழைவாரும்
இருவிழியும் உழவா ரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்.[1]

— சிவஞானமுனிவர்.

'திருவருட் செல்வர்கள்' - என்ற வரிசையில் இரண்டாவதாக வர வேண்டிய நூல் இரண்டாவதாகவே வெளி வருகின்றது. 'தம்பிரான் தோழர்' என்ற நூலை எழுதி முடித்த உற்சாகத்தில் அப்பர் பெருமானின் அருளிச் செயல்களில் ஆழங்கால்பட்டு அநுபவித்தேன். இவர்தம் தமிழ்பாடல்கள் திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந் தொகை, திருத்தாண்டகம் என்ற நான்கு வகை யாப்பு களில் அமைந்துள்ளன. அதிகாலையில் (4 மணிக்கு) எழுந்து உலகம் முழுவதும் உறங்கிய நிலையில் இருக்கும் போது இவர்தம் திருப்பாடல்களை வாய்விட்டு படித்தால் நம் ஒலியே நம் காதின் மூலம் சென்று நம் மனத்தை உருக்கும்; கண்ணீர் ஆறாகப் பெருகும். இதை அநுபவத்தில் கண்டு மகிழ்கிறேன். உடனே இப்பெருமான் பற்றியும் நூல் எழுதத் துணிந்தேன்.

---

1, காஞ்சிப் புராணம் - காப்புப் பகுதி.

சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் காட்டியுள்ள வழியைக் கடைப்பிடித்துக் கொண்டு அவருடன் மேற்கொண்ட கற்பனைப் பயணத்தின் விளைவாக இந்நூலும் உருவாகியது. இதற்குப் பேராசிரியர் க. வெள்ளைவாரணனின் பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு பகுதிகள்) என்ற நூலும், பூம்புகார்ப் பேரவைக் கல்லூரி வெளியீடாகிய 'அப்பர் பெருமான் வாழ்வும் வாக்கும்' கை கொடுத்து உதவிப் பெருந்துணை புரிந்தன. இப்பெருமானின் வாழ்க்கை வரலாறு என் நெஞ்சை உருக்குகின்றது. இந்த நூலின் அடிக்குறிப்புகளில் சேவித்த தலங்கள் பற்றிய விவரங்களையும் நூலில் அவர் பாடியுள்ள பதிகங்களின் ஒவ்வொரு பாடலையும் தந்துள்ளேன். மேலும் அறிய வேண்டுவோர் 'தேவார அடங்கன் முறையை,ப் படித்து அறிந்து கொள்ளலாம். இந்த நூலைக் கொண்டு அப்பர் பெருமான் வழிபட்ட திருத்தலங்களைச் சேவிக்கவும் அவர் பாடியுள்ள திருப்பதிகங்களை அநுபவித்து மகிழவும் இது வாய்ப்பாகவும் அமையும். படிப்போரின் மனநிலை, பக்தியில் வளர்ச்சி, இறைவனிடம் ஈடுபாடு இவற்றிற்கேற்பச் 'சிவாநுபவம்' பெறத் துணை செய்யும். இஃதெல்லாம் கைகூடுவதற்கு 'அவனருளாலே அவன் தாள் வணங்கும்' பேறும் பெற்றாக வேண்டும்.

சீமானுக்கு அழகு செழுங்கிளை தாங்குதலாகும். இவ்வுலகில் ஒரே செல்வச் சீமானாக இருப்பவன் ஏழுமலையான்; 'அகலகில்லேன் இறையும்' என்று அவன் மார்பை விட்டு அகலாதிருக்கும் செல்வச் சீமாட்டியைத் தாங்கிக் கொண்டிருப்பவன். இந்நிலையில் நாடோறும் எண்ணற்ற பக்தர்கள் அவனுடைய கருவூலத்தை நிரப்பி வழியச் செய்து கொண்டிருக்கின்றனர். ஆகவே, இந்த உறுபெருஞ் செல்வத்தைச் செழுங்கிளையைச் சேர்ந்த பக்தர்கள் எழுதும் சமய வெளியீடுகளுக்கு வரையாது வழங்கும் நிதி உதவித் திட்டத்தில் இந்நூலும் நிதி உதவி பெற்று வெளி வருகின்றது. இந்த உதவி பெறாது போயின் 40 ஆண்டுகள் கல்வித் தொண்டாற்றி ஓய்வு ஊதியம் (Pension) பெறாது தவிக்கும் அடியேனால் இந்த நூலை வெளியிட்டிருக்க முடியாது. இந்த வேங்கடத்தெம்மான் மேலும் வெளிவர இருக்கும் ஞானசம்பந்தர், தாயுமான அடிகள்,மாணிக்கவாசகர் வடலூர் வள்ளல், பட்டினத்தடிகள் போன்ற பக்திப் பனுவல்கட்கும் உதவுவான் என்ற நம்பிக்கை என்பால் உண்டு. இவனது கருவியாக இயங்கி வரும் தேவஸ்தானத்தாருக்கும்

குறிப்பாகத் திரு. K. சுப்பாராவ், திரு. N. S. இராமமூர்த்தி ஆகிய இருவருக்கும் என் அன்பு கலந்த நன்றியைப் புலப் படுத்திக் கொள்கின்றேன்.

இந்த நூலைச் செவ்விய முறையில் அழகுற அச்சிட்டு உதவிய சாலை அச்சக உரிமையாளர் டாக்டர் சாலை இளந்திரையனுக்கும், எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக்கட்டை தயாரித்து மூவண்ணத்தில் அச்சிடும் வரையில் பொறுப்பேற்று உதவிய ஓவிய மன்னர் திரு P. N. ஆனந்தன் அவர்கட்கும் லாமினேஷன் போட்டு உதவிய மாருதி லாமினேஷன் உரிமையாளர் திரு பார்த்திபன் அவர்கட்கும் இவ்வளவும் ஆன நிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத் தவழச் செய்த நாவுக்கரசரின் பெயர் தாங்கிய திருநாவுக்கரசுக்கும் என் இதயம் கலந்த நன்றி யைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்த நூலுக்குச் சிறப்புப் பாயிரம் நல்கிய பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் (அண்ணாமலைப் பல்கலைக் கழக முன்னாள் தமிழ் ஆராய்ச்சிப் பேராசிரியர்) என் நெடு நாளைய நண்பர். கருந்திட்டைக் குடித் தமிழ்க் கல்லூரியில் பணியாற்றிய நாள்தொட்டு நன்கு அறிவேன். அடிமை நாட்டில் இராஜாஜி சென்னை மாகாணப் பிரதமராக இருந்த காலத்தில் இந்தியைப் புகுத்த முயற்சி செய்தபோது இவர் அவருக்கு மறுத்து எழுதிய 'காக்கை விடு தூது' இன்னும் என் நினைவில் பசுமையாகவே உள்ளது. அதன் பிறகு துறையூரில் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரிய னாகப் பணியாற்றியபோதும், காரைக்குடியில் அழகப்பர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியனாக இருந்த போதும் நல்ல பழக்கம் இருந்தது. திருப்பதி சென்ற பிறகு நெருங்கிய பழக்கம் தொடர்ந்தது. பல கருத்தரங்குகளில் பங்கு கொண்டார். தொடக்கத்திலிருந்தே தமிழில் என் வளர்ச்சியைக் கண்டவர். தமிழில் ஆழ்ந்த புலமையுடைய வர்; தனித் தன்மை வாய்ந்த ஆய்வாளர். பழகுவதற்கு இனியர்; அடக்கம் இவரது தனிச்சிறப்பு. இத்தகைய பெருமகனார் 'நாவுக்கரசர்' என்ற இந்நூலுக்குச் சிறப்புப் பாயிர மலர் நல்கி வாழ்த்தியமைக்கு என் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலுக்கு அணிந்துரை நல்கிய டாக்டர் அ. மா. பரிமணம் நான் காரைக்குடியில் இருந்த நாள் தொட்டே நெருங்கிய பழக்கம் உடையவர். அப்போது அழகப்பா கல்லூரியில் தமிழ்த் துணைப் பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். கடுமையான உழைப்பாளி. தமிழ் இலக்கியத்தை ஆராய்ச்சிக்கண் கொண்டு பயின்றவர்; ஆராய்ச்சியில் ஆழங்கால்பட்டவர். காரைக்குடியிலிருந்து பழனி பழனியாண்டவர் பண்பாட்டுக் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராக இருந்த போது தான் அப்பர் பெருமானின் அருளிச் செயல்களை ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றவர். பின்னர்த் தஞ்சை புஷ்பம் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராகப் பணியாற்றி தமிழ் எம். ஏ கற்பித்து பல நல்ல மாணவர்களை உருவாக்கியவர். டாக்டர் பட்டத்திற்குப் பலரை வழிகாட்டி நடத்தியவர். நான் திருப்பதி சென்ற பிறகு இருவருக்கும் ஆய்வில் நெருங்கிய உறவு இருந்தது. தஞ்சையிலிருந்த போதிலும் இவரைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் தாமதமாக பயன் படுத்திக் கொண்டது வியப்பிற்குரியது. இத்தகைய நண்பர் இந்நூலுக்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்தமைக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

வைரிசெட்டிப் பாளையம் (துறையூர் வட்டம், திருச்சி மாவட்டம்) திரு எஸ். ஆர். நாகரெட்டியார் என் நெடு நாளைய நண்பர். என்னை விட இரண்டு திங்கள் மூத்தவர். பிறந்த இடம் பெரிய குடும்பம்: அகவை இரண்டில் தத்துப் பிள்ளையாகப் புகுந்த இடமும் பெரிய குடும்பமே. இரண்டு குடும்பங்களும் ஒட்டிய உறவுடன் ஒன்றாகவே இருந்து வந்தன. இரண்டு குடும்பங்கட்கும் ஒரே பிள்ளையாக இருந்தமையால் சீரும் சிறப்புமாக வளர்க்கப்பெற்றார். இப்படிச் செல்வமாக வளர்க்கப்பெறுபவர்களில் பெரும் பாலோரின் வாழ்க்கை சரியாக அமைவதில்லை. ஊரிலேயே எம். சபாபதி அய்யர், நம்பெருமாள் ரெட்டியார், சுப்பிரமணிய அய்யர் இவர்கள் ஆசிரியர்களாக அமைந்து நன்முறையில் உருவாக்கப் பெற்றார். தமிழ், தெலுங்கு, ஆங்கில மொழிகளைக் கற்றுத் தேர்ந்தார். வெளியூர் சென்று உயர் கல்வி பெறாமற்போனது இறைவனது திருக் குறிப்பே. ஊரில் பெற்ற தமிழ்க் கல்வியே தரமானது; பண்பாட்டை வளர்ப்பது; அதனின்றும் வழுவாமல் காப்பது. சிறுவயது முதற்கொண்டே சாதுக்களின்

கூட்டுறவும் பெரியோர்களின் தொடர்பும் இவரைச் சிறந்த மனிதராக்கின. ஒருவிதத்தில், இது ஊரின் தவப்பயனே எனலாம்.[2]

சிறுவயது முதற்கொண்டே நற்பழக்கமும் நற்சிந்தனையும் கொண்டவராதலால் இறைவன் இவரைப் பொதுத் தொண்டுகளில் ஈடுபடுத்தினான். இதனால் அப்பர் பெருமான் அருகில் வர அருகதையுடையவராகின்றார். தந்தையார் சுந்தர ரெட்டியாரால் தொடங்கப் பெற்ற விவேகநந்தர் வாசக சாலையைத் திறம்பட நடத்திச் சிற்றூர் மக்களிடம் கல்வியையும் பொது அறிவையும் பெருக்கினார். இதுவே பிற்காலத்தில் இவரது அயராத முயற்சியால் உயர்நிலைப் பள்ளியாக வளர்ந்து மேல்நிலைப் பள்ளியாகவும் உயர்ந்தது (நான் துறையூரில் இருந்தபொழுதும் காரைக்குடி சென்றபிறகும் இப்பள்ளியின் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் அடியேனுக்கும் சிறிது பங்கு உண்டு). திருப்பராய்த் துறை இராம கிருஷ்ணத் தபோவன முனிவர் சித்பவாநந்த அடிகளின் கூட்டுறவும் ஆசியுமே இப்பள்ளி தோன்றவும் வளரவும் முதற் காரணமாக அமைந்தன. தபோவனத்தின் நிர்வாக உறுப்பினராகவும் சில ஆண்டுகள் பணியாற்றியதால் அடிகளின் ஆசியும் அருளும் இவர்மீது பாய்ந்தன.

கூட்டுறவு நிறுவன வளர்ச்சியில் இவருக்குச் சிறந்த பங்கு உண்டு. சில ஆண்டு முசிறிக் கூட்டுறவு ஒன்றியத்தின் தலைவர், துறையூர் கூட்டுறவு ஒன்றியத்தின் தலைவர், திருச்சி கூட்டுறவு மத்திய வங்கியின் இயக்குநர், இதன் நிர்வாக இயக்குநர் பதவிகளில் தூய்மையான உள்ளத்துடன் பணியாற்றிப் பொதுமக்களின் அன்பையும், பாசத்தையும், மதிப்பையும் பெற்றவர்.

**மங்கலம் என்ப மனைமாட்சி; மற்றதன்**
**நன்கலம் நன்மக்கட் பேறு**

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப இவருக்கு இல்லத்தரசியாக அமைந்த செந்தாரப்பட்டி கமலம்மாவினால், மனைமாட்சி சிறப்பாகத் திகழ்கின்றது. இறைவன் திருவுளக்

---

2. இவரைப்பற்றிய விவரம் நினைவுக் குமிழிகள் - (2) என்ற என் நூலில் அதிகமாகக் காணலாம்.

குறிப்பின்படி ஆண்மக்களில் மூத்தவர் பள்ளித் தாளாளரா கவும், இளையவர் பள்ளித் தலைமையாசிரராகவும், பெண் மக்களில் ஒருவர் திருச்சி மகளிர்க் கல்லூரியொன்றில் பொருளியல் பேராசிரியையாகவும் பணியாற்றி வரும் நன் மக்கட் பேற்றையும் பெற்றுத் திகழ்கின்றார். இராமகிருஷ்ணர், விவேகாந்தர், இராமலிங்க அடிகள் இவர்களது கொள்கை களைப் பரப்பியும், உள்ளூர் அருள்மிகு கற்பக விநாயகர் திருக்கோவில், அருள்மிகு வரதராசப் பெருமாள திருக் கோயில் இவற்றின் வழிவழி அறங்காவலராக இருந்து இறைப் பணியில் ஈடுபட்டும் வரும் இப்பெரியாருக்கு இந் நூலை அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். அப்பர் பெருமான் ஆசியால் இவர்தம் தொண்டுகள் மேன்மேலும் சிறந்து வளரும் என்பதற்கு ஐயம் இல்லை.

இந்நூலை யான் எழுதி வெளியிட என்னுள்ளே தோன்றாத் துணையாக, அந்தர்யாமியாக, எழுந்தருளி யிருக்கும் 'வேங்கடம் மேவிய விளக்கை' மனம் மொழி மெய் களால் வணங்கி வாழ்த்திச் சரண் அடைகின்றேன். மற்றும் அப்பர் பெருமானின் இணையடிகளையும் முடிமீது வைத்துக் கொள்ளுகினறேன்.

அறப்பெருஞ் செல்வி பாகத்
    தண்ணலஞ் செழுத்தால் அஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறா
    வஞ்சகர் ஈட்ட நீல
நிறப்பெருங் கடலும் யார்க்கும்
    நீந்துதற் கரிய வேழு
பிறப்பெனும் கடலும் நீத்த
    பிரானடி வணக்கம் செய்வாம்![3]

— பரஞ்சோதி முனிவர்

'வேங்கடம்'
AD-13 (பிளாட் 3354)
அண்ணாநகர்
சென்னை-600 040
தொ.பே. 61 55 83
30-6-1986

ந. சுப்புரெட்டியார்

3. திருவிளையாடல் புராணம்—பாயிரம்-19.

# பிழை-திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| vi | 10 | அப்பனென் | அப்பனெனத் |
| 18 | 2 | புலர்வதற்கு | பொழுது புலர்வதற்கு |
| 53 | 13 | காணப்பேரும் | கானப்பேரும் |
| 57 | 13 | உள்ளது | உள்ளன |
| 63 | 25 | கதிர்ப்பாலை | கழிப்பாலை |
| 112 | 2 | கில | சில |
| 125 | 27 | வலஞ்சுலி | வலஞ்சுழி |
| 136 | 5 | ஐம்பதாவது | ஐந்தாவது |
| 140 | 3 | செல் | செல்வனை |
| 147 | 15 | ஏம்பொழிலும் | ஏழ்பொழிலும் |
| 148 | 27 | சேர்வாகுந் | சேர்வாருந் |
| 209 | 8 | ஒன்ற | ஒன்றை |
| 213 | 26 | மலையில் | மலை |
| | 27 | மலையில் | மலை |
| 228 | 13 | மற்த்தன் | மற்றதன் |
| 231 | 15 | பழநை | பழன |
| 275 | 15 | டாறாங்க | டாறங்க |
| 289 | 7 | அவருடைய | இவருடைய |

குறிப்பு : நூலைப் படிக்கத் தொடங்கும் முன்னர் பிழைகளைத் திருத்திக்கொண்டு படிக்கவும்.

# உள்ளுறை



**பின்னிணைப்புகள்:**

# 1. பிறப்பும் வளர்ப்பும்

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு. இவற்றுள் நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளை அருளியவர் திருநாவுக்கரசர். இவர் சிவன் என்னும் திருநாமத்தைச் சிறப்பினும் செம்பொருளாகக் கொண்டு ஒழுகிய தெளிந்த சிந்தையுடையவர். இவரை நம்பியாரூரர்,

**திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட**
**திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்**[1]

என்று பாராட்டிப் போற்றுவர். இதுவே,

**சிவனென்னும் ஓசை யல்ல தறையோ**
**உலகில் திருநின்ற செம்மை உளதே**[2]

என்ற இவரது வாய்மொழியாலும் உணரப்படும்.

வடக்கே திருவண்ணாமலையும், கிழக்கே கடலும், தெற்கே நிவா, கொள்ளிடம் ஆறுகளும், மேற்கே மலைகளு மாகப் பரந்திருந்த நாடுதான் திருமுனைப்பாடி நாடு. இது சோழ நாட்டிற்கும் தொண்டை நாட்டிற்கும் நடுவில் அமைந்ததால் நடுநாடு என்றும் வழங்கப் பெறுகின்றது. இந்த நாட்டை முனையரையர் என்ற வீரம் செறிந்த சிற்றரசர்கள் ஆட்சி புரிந்தமையால் முனைப்பாடி என்றும்

---

1. சுந்த. தேவாரம். 7.39:4 (திருத்தொண்டத்தொகை)
2. அப்பர். 4.8:1

வழங்கப்பெறுகின்றது. நடு நாட்டின் ஒரு பகுதிதான் முனைப்பாடி நாடு என்றொரு கருத்தும் உண்டு[3]. இராஜேந்திர சோழன், முதற் குலோத்துங்கன் காலக் கல்வெட்டுகளால் இந்நாடுபற்றிய குறிப்புகளை அறியலாம். இந்நாட்டைச் சேக்கிழார் பெருமான்,

**சென்னிமதி புனையவளர்**
**மணிமாடச் செழும்பதிகள்**
**மன்னிநிறைந் துளதுதிரு**
**முனைப்பாடி வளநாடு[4]**

என்று காட்டுவர். சிவபெருமானைச் சென்னியில் வைத்துப் போற்றும் செழுங்குடிகளையுடையது இந்நாடு. நீர் வளத்தாலும், நிலவளத்தாலும் சிறந்தது.

இத்திருநாட்டில் திருவாமூர் என்பது ஒரு சிற்றூர். இவ்வூரில் வேளாண் மரபில் குறுக்கையர் குடியில் புகழனார் என்ற பெரியார் ஒருவர் வாழ்கின்றார். இவர்தம் வாழ்க்கைத் துணைவியார் மாதினியார் என்ற திருப் பெயரினர். இவர்கள் இருவரும் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து மனையறம் நிகழ்த்தி வந்த நாளில் அவ்விருவர்க்கும் திருமகளாகத் தோன்றியவர் திலகவதியார் என்பவர். திலகவதியார் பிறந்த சில ஆண்டுகட்குப் பின்னர் அவர்க்குத் திருத்தம்பியாராகத் தோன்றியவர் மருள் நீக்கியார் என்பார். இவர் பிறந்ததைச் சேக்கிழார் பெருமான்,

**திலகவதி யார்பிறந்து**
**சிலமுறையாண் டகன்றதன்பின்,**
**அலகில்கலைத் துறைதழைப்ப**
**அருந்தவத்தோர் நெறிவாழ**

3. தென்னார்க்காடு மாவட்டப் பகுதியைச் சார்ந்தது.
4. பெ. பு. திருநாவுக். 2

உலகில்வரும் இருள்நீக்கி
ஒளிவிளங்கு கதிர்போற்பின்
மலருமருள் நீக்கியார்
வந்தவதா ரஞ்செய்தார்[5]

என்று சிறப்பிப்பர்.

இவரைப் பெற்று வளர்த்த பெரியோர்கள், இவர்தம் இளங்குழவிப் பருவம் கடந்தபின்னர் உரிய நாளில் பள்ளியில் அமர்த்திக் கலை பயிலச் செய்கின்றனர். பெற்றோர்கள் மகிழும் வண்ணம் செழுங்கலையின் திறங்களெல்லாம் நன்று பயின்று 'மறு ஒழிந்த இளம் பிறைபோல்' வளர்ந்து வருகின்றார். இந்நிலையில் திலகவதியாருக்கும் பன்னிரண்டு வயது தொடங்கி நடைபெறுகின்றது. பெற்றோர்கள் இவர்தம் திருமணத்தைப்பற்றிச் சிந்திக்கின்றனர்.

இந்நிலையில், உருவும் திருவும் உயர் பேரொழுக்கமும் வாய்ந்த கலிப்பகையார் என்னும் வேளாண்குடித் தலைவர், திலகவதியாரை மணம் புரிந்துகொள்ள விரும்புகின்றார். தம் மரபுப்படி புகழனார்பால் சில பெரியோர்களை மணம் பேசிவர அனுப்புகின்றார்[6]. குணமும் குலமும் ஒத்தமை கேட்டுக் கோதில் சீர்ப் புகழனார் தம் அருமைத் திருமகளார் திலகவதியாரைக் கலிப்பகையாருக்கு மணம் செய்து கொடுப்பதாக உடன்பாடு தெரிவிக்கின்றார். மணம் பேசி வரச் சென்ற பெரியோர்களும் புகழனாரின் இசைவினைக் கலிப்பகையாருக்குத் தெரிவிக்கின்றனர்.

இங்ஙனம் இருதிறத்தாரும் உறுதி செய்த திருமணம் நடைபெறாது போகின்றது. என் செய்வது? இறைவனின் திருவுள்ளக் குறிப்பை யார்தான் அறியவல்லார்? வடநாட்டிலுள்ள பகை மன்னரின் சேனை தமிழ் நாட்டின்

5. பெ. பு; திருநாவுக். 18
6. ஷை. ஷை. 23.

மேல் போர் குறித்துப் புறப்படுகின்றது. இந்தப் பகைவரின் படையெழுச்சியை முன்னதாகவே குறிப்பா லுணர்ந்த தமிழக வேந்தன் பேராற்றல் மிக்க கலிப்பகை யாரைத் தானைத் தலைவராக நியமித்துத் தம் படை களுடன் வடபுலத்திற்கு அனுப்புகின்றான்.

இங்ஙனம் வடபுலம் சென்ற கலிப்பகையார் நீண்ட நாட்கள் அங்கேயே தங்கிவிட நேரிடுகின்றது. பகைவரைப் பொருது வெல்லுந் தொழிலில் தொடர்ந்து ஈடுபட்டு வினைபுரிந்து வருகின்றார்.

> **நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்**
> **பெருமை உடைத்திவ் வுலகு**[7]

என்பது வான்மறை வள்ளுவம் அன்றோ? புகழனார் நோய்வாய்ப்பட்டு இறந்து விண்ணுல கெய்துகின்றார். இந்நிலையில் அவர்தம் இன்னுயிரனைய குலக்கொடி மாதினியாருங் "கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்"[8] என்ற உண்மையினை உணர்ந்து சுற்றமுடன் மக்களையும் துகளாக எண்ணி உயிர் நீத்துக் கற்புநெறி வழுவாது கணவருடனேயே சென்று விடுகின்றார். இவ்வாறு தந்தையாரையும் அன்னையாரையும் ஒரு சேர இழந்த திலகவதியாரும் மருள்நீக்கியாரும் ஆற்றொணாத் துயரில் அழுந்துகின்றனர். அறிவும் அநுபவமும் மிக்க பெரியோர்கள் உலகியல்பினை எடுத்துக் காட்டி அவர் களைத் தேற்றுகின்றனர். இதனால் ஒருவாறு இவர்கள் மனம் தெளிந்து தம் தாய் தந்தையர்க்குச்செய்ய வேண்டிய ஈமக் கடன்களைச் செவ்வனே செய்து முடிக்கின்றனர்.

**திலகவதியாரின் தவ நிலை:** இவர்கள் நிலை இங்ஙனம் இருக்க, வட புலத்தில் போர் புரியச் சென்ற

---

7. குறள்-336 (நிலையாமை)
8. சிலம்பு. 2.20:80

கலிப்பகையார் பகைவரது போர்க்களத்தில் தம் மாவீரத்தைப் புலப்படுத்தி மாற்றாரையழித்துத் தம் உயிரைக் கொடுத்துப் புகழுடம்பை நிறுத்தி வீரர் உலகம் எய்து கின்றார். இத்துன்பச் செய்தி திலகவதியாரின் செவிக்கு எட்டுகின்றது. அவர், "என் தந்தையும் அன்னையும் என்னைக் கலிப்பகையார்க்குக் கொடுப்பதாக இசைந்தனர். அந்த முறையால் நான் அவர்க்குரிய பொருளாகின்றேன். ஆதலால் இந்த உடம்பைத் துறந்து என்னுயிரை அவர் உயிரோடு இசைவிப்பேன்" எனத் தம் உயிரைவிடத் துணிகின்றார். அப்பொழுது அவர்தம் தம்பியார் மருள் நீக்கியார் தமக்கையாரின் இணையடிகளில் வீழ்ந்து புலம்புகின்றார்: "அன்னையும் அத்தனும் அகன்றபின்னர் தமக்கையாராகிய உம்மை வணங்கப் பெறுதலினால் யான் இதுகாறும் உயிர் தரித்துள்ளேன். இந்நிலையில் ஒன்றும் அறியாத என்னைக் கைவிட்டுச் செல்வீராயின் யானும் உமக்கு முன்னே உயிர் துறப்பேன்" எனக் கூறி வருந்துகின்றார்.[9]

தம்பியார் இவ்வாறு ஆதரிப்பாரின்றிக் கலங்கும் இடர் நிலையைக் கண்டு திலகவதியார் மிகவும் கவலையுறு கின்றார். தம் திருத் தம்பியார்—பின்னால் சைவ சமயம் தழைக்க வாழப் போகின்றவர்—இவ்வுலகில் புகழுடன் நிலைபெற்று வாழவேண்டுமெனத் தாம் கொண்ட பேரருள் தாம் உயிர் துறத்தலை விலக்கி விடுகின்றது. தம்பியின் பொருட்டு இவ்வுலகில் உயிர்தாங்கியிருப்பதாக உறுதி கொள்கின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

**'தம்பியார் உளராக**
**வேண்டும்' என வைத்தயா**
**உம்பருல கணையவுறு**
**நிலைவிலக்க 'உயிர் தாங்கி'**

9. பெ. பு. திருநாவுக். 32, 33.

**அம்பொன்மணி நூல்தாங்கா**
**தனைத்துயிர்க்கும் அருள்தாங்கி**
**இம்பர்மனைத் தவம்புரிந்து**
**திலகவதியா ரிருந்தார்**[10]

*என்று காட்டுவர். பொன்னினும் மணியினுமாகிய அணிகலன்களைப் பூணாது அனைத்துயிரையும் வாழ் விக்கும் அருளையே அணிகலனாக மேற்கொண்டு மனையின்கண் இருந்தே தவப் பெருஞ் சீலராய்த் தம்பியைப் பேணி வளர்க்கின்றார் திலகவதியார்.*

*இங்ஙனம் இளம் பருவத்தினராகிய மருள் நீக்கியார் தாயும் தந்தையுமின்றி வருந்திய பொழுது அவர் தமக்கையார், "தம்பியார் உளராக வேண்டும்" எனக் கொண்ட பெருங் கருணையால் அவரைத் தாய்போல் பேணி வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டமை இறைவனின் திருவருட் செயலேயாகும் என்பதை நாம் சிந்தித்தல் வேண்டும். இந்த நுட்பமான பேருண்மை யினை, மருள் நீக்கியாரே, தாம் சமணந்துறந்து சிவநெறி யினை மேற்கொண்டு நாவுக்கரசராகத் திகழ்ந்த காலத்தில் அருளிய,*

**எம்மை யாரிலை யானும் உளேனலேன்**
**எம்மை யாரும் இதுசெய்ய வல்லரே**
**அம்மை யாரெனக் கென்றென் றரட்டினேற்**
**கம்மையாரைத் தந்தார் ஆரூர் ஐயரே** *(5.7:6)*

*என்னும் திருவாரூர்க் குறுந்தொகையில் தெளிவாகக் குறிப் பிட்டுள்ளதைக் கண்டு மகிழலாம். "எம்மைப் பெற்ற தாயும் தந்தையும் இறந்தனர்; அவர்களின்றி யான் இவ்வுலகில் உயிரோடு உள்ளேன் அல்லேன் என்று எண்ணும் நிலையில் ஆதரவு அற்றிருந்தேன். இங்ஙனம்*

*10. ஷெ. ஷெ. - 34*

யாதொரு பற்றுக்கோடும் இன்றி வருந்திய என்னை உயிர்க்குயிராகிய இறைவனையன்றி வேறு யாரும் இவ்வுயர் நிலையில் இருக்கச் செய்ய வல்லரோ? தாய் நிலையிலிருந்து எளியேனை வளர்ப்பார் யார்? என்று தம்மை நோக்கி அழுதரற்றிய என் பொருட்டு ஆரூரில் அமர்ந்தருளிய இறைவன் என்னைப் பாதுகாத்தற்குரிய அம்மையாரைத் தந்து அருள் புரிந்தார்'' என்பது இத் திருக்குறுந்தொகையின் பொருளாகும்.

இத்திருப்பாடலின் நுண் பொருளை ஆழ்ந்து காண்பது மருள் நீக்கியாரின் ஆதரவற்ற நிலையைத் தெளிவாகப் புலப்படுத்துவதாக அமையும். இளமைக் காலத்துத் தம் முடைய பெற்றோர் இறந்துபோயினர் என்ற செய்தியை 'எம்மையாரிலை' என்ற தொடர் காட்டுகின்றது. இந் நிலையில் பாதுகாப்பாரின்றித் தாம் வருந்திய நிலைமை யினை 'யானும் உளேன் அலேன்' என்ற தொடர் உணர்த்து கின்றது. தம் தமக்கையாராகிய திலகவதியார் தமக்குரிய கணவர் இவர் எனப் பெற்றோரால் உறுதி செய்யப்பெற்ற கலிப்பகையார் போரில் இறந்தமை கேட்டு உயிர்விடத் துணிந்த நிலையில், 'என்னைப் பேணி வளர்க்கும் அன்னை யார் வேறு யாருளர்?' என்று தாம் அழுதரற்றிய செய்தியை 'அம்மையார் என்று அரற்றினேற்கு' என்ற தொடர் புலப்படுத்துகின்றது. இந்நிலையில் கருணையே வடிவுடைய சிவபெருமான், திலகவதியார் உயிர்துறத் தலைத் தவிர்த்து இவ்வுலகில் வாழச் செய்து, தம்மைப் பேணி வளர்க்கும் அம்மையாராகத் தம் பொருட்டுத் தந்தருளினார் என்பதை 'அம்மையாரைத் தந்தார் ஆரூர் ஐயரே' என்ற தொடர் தெளிவாக்குகின்றது. 'அம்மையா ராயினார் ஆரூர் ஐயரே' என்று குறிப்பிடாமல் 'அம்மையா ரைத் தந்தார் ஆரூர் ஐயரே' என்று குறிப்பிடுதலால் இறை வனால் மருள்நீக்கியாருக்குப்பாதுகாப்பாகத் தரப்பட்டவர் அம்மையார் திலகவதியாரே என்பது நன்கு புலனாகின்ற

தன்றோ? மருள்நீக்கியாரைப் பெற்ற தாயும் தந்தையும் இளம் பருவத்தில் இறந்து போயினர் எனவும், இந் நிலையில் உயிர் துறக்க எண்ணிய திலகவதியார் தம்பியைப் பாதுகாத்தற் பொருட்டு உயிர் தாங்கியிருந்தார் எனவும் மேற்காட்டிய 'தம்பியார் உளராக வேண்டும்' என்ற பாடலில் சேக்கிழார் பெருமான் உணர்த்தும் செய்தியை இக் குறுந்தொகைப் பாடல் அகச் சான்றாக உறுதிப்படுத்து வதைக் கண்டு மகிழலாம்.

**முற்பிறப்பின் வரலாறு :** இவரது முற்பிறப்பைப்பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. இவை பின் வந்தவர்களால் புனையப் பெற்றவை என்பது தமிழ் முனிவர் திரு. வி. க. அவர்களின் கருத்து. ''முன்னமே முனியாகி எமையடையத் தவம் முயன்றான்''[11] என்ற தொடரும் ''பண்டு புரி நற்றவத்துப் பழுதினளவிறை வழுவும் தொண்டர்''[12] என்ற சேக்கிழார் வாக்கும் புனைகதைகட்கு வித்துகளாக அமைகின்றன.

**வாகீசர்** என்பது திருநாவுக்கரசரின் முற்பிறப்பின் திருப்பெயர். இப் பெயர் கொண்ட முனிவர் ஒருவர் கயிலை மலைச்சாரலில் தவம் செய்கின்றார். ஆணவமே வடிவெடுத்த இராவணன் ஒரு நாள் வடதிசை நோக்கித் தன் தேரை வான் வழியாகச் செல்லுமாறு கட்டளை யிடுகின்றான். கயிலை மலையை நெருங்கியவுடன் தேர் செல்லாததை உணர்கின்றான் வலவன். ''இனி நம் தேர் ஏகாது இறைவா'' என்கின்றான். இராவணன் காரணத்தை வினவ, ''விண்வழி கயிலை மலையால் அடைபட்டுக் கிடக்கின்றது'' என்று மறுமொழி கூறுகின்றான் வலவன். சினம் மிக்க இராவணன், ''இக் கயிலை மலையை என் புயவலியால் பெயர்த்தெறிவேன்'' என்கின்றான்.

---

11. பெ. பு. திருநாவுக். 43.
12. ஷை ஷை-49.

அதைப் பெயர்த்தெறியவும் முனைகின்றான். அப்பொழுது உமையம்மை அஞ்சியதுபோல் இறைவனை நோக்க, பரம் பொருளான கயிலை மலையப்பன் புன்னகை பூத்துத் தம் திருவடியின் விரல் நுனியால் மெல்ல ஊன்ற, மலையடியில் அகப்பட்டுச் சிக்கிய தசமுகனின் முடிகளும் தோள்களும் நைந்து நெரிபடுகின்றன. இராவணன்[13] வாய்விட்டு அலறு கின்றான்.

இராவணன் அரற்றிக் கொண்டிருத்தலை வாகீச முனிவர் காண நேரிடுகின்றது. அவன் படும் துன்பத்தைக் கண்டு மனம் இரங்குகின்றார். "சாமவேதம் ஓதின் சங்கர னார் அருள் பெற்றுய்யலாம்" என்று வழி கூறுகின்றார். இராவணன் தன் உறுப்புகளைக்கொண்டு வீணை அமைத்து கண்ணுதலப்பன் உள்ளம் குளிர **சாமவேதம்** பாடுகின்றான். இறைவனும் அவன் நிலைக்கு இரங்கி வாளும் முக்கோடி வாணாளும் ஈந்து வரம் அருளுகின்றார்.[14]

இராவணன் செய்த குற்றத்திற்கு அவன் எவ்வளவு காலத்திற்கு எத்தகைய துன்பத்தைப் புசிக்க வேண்டும் என்று அறியாமல் வாகீசமுனிவர் இறைவன் ஆணைக்கு மாறாக அவனுக்குத் தவறான வழிகாட்டியதால், "அவன் அநுபவித்து எஞ்சிய துன்பத்தை நீ அநுபவித்து எம்மை அடைவாயாக" என்பது இறைவனின் கட்டளையாக அமைகின்றது. இதனால்தான் வாகீசர் இப்பூவுலகில் மருள் நீக்கியாராகத் தோன்றிச் சூலை நோயால் துன்புற்றார் என்று பொருத்தமாகக் கதை புனைவர்.

இவரைப்பற்றிய இன்னொரு வரலாறும் உண்டு. ஒரு நாள் கோதாவரி நதித் தீரத்தில் சாந்திபத முனிவர் தவம் இயற்றிக் கொண்டிருக்கின்றார். அப்பொழுது அவரை

13. இராவணன்—அழுபவன்.
14. 'கடுகிய தேர் செல்லாது' என்ற தச புராணப் பாடல்தான் இக் கதையை உணர்த்துகின்றது.

யணுகிய முனிவர் சிலர் "உண்மைச் சமயம் யாது?" என வினவ, சிவஞானத் தவ முனிவராகிய அவரும் "சமண் சமயமே உண்மைச் சமயமாகும்" என்று தம் வாதத் திற மையால் எடுத்தோதுகின்றார். சினமுற்ற அம்முனிவர்கள் சாபம் இட, அவர் பிறவி எடுத்துச் சமணம் புகுந்து தரும சேனர் ஆனார் என்று கூறுவர். கோவை சிவக்கவி மணி சி. கே. சுப்பிரமணிய முதலியார்,

**மறப்படுமென் சிந்தை**
**மருள்நீக்கினான்காண்**[15] (6.30:5)

என்னும் திருவாரூர்த் திருத்தாண்டகப் பகுதியும்,

**பந்தமறுத் தாளாக்கிப் பண்கொண் டாங்கே**
**பன்னிய தமிழ்மாலை பாடு வித்தென்**
**சிந்தை மயக்கறுத்த திருவருளி னானை**[1] (6.84:4)

**நில்லாத நிணக்குரம்பைப் பிணக்கம் நீங்க**
**நிறைதவத்தை அடியேற்கு நிறைவித் தென்றும்**
**செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானை**[2] (6.84:8)

என்ற செங்காட்டாங்குடித் திருத்தாண்டகப் பகுதிகளும் நாவரசரின் முற்பிறவியைச் சுட்டும் தொடர்களாகக் குறிப்பிடுவர்.

இந்தச் சிறுநூல் திருத்தொண்டர் புராணத்திலுள்ள திருநாவுக்கரசர் புராணம், நாவுக்கரசர் பெருமான் அருளியுள்ள தேவாரப் பதிகங்கள் இவற்றைத் துணை கொண்டு ஆக்கப் பெறுகின்றது.

# 2. சமண் சமயம் புகுதல்

உளவியலார் குழந்தையின் வளர்ச்சிப் பருவங்களைக் குழவிப் பருவம் (0—3 வயது), முன்பிள்ளைப் பருவம் (3—6 அல்லது 7), நிலைமாறு பருவம் (6 அல்லது 7—8), பிள்ளைப் பருவம் (8—12), குமரப் பருவம் (12—18) என்று பிரித்து ஒவ்வொரு பருவத்திலும் உடல் வளர்ச்சி, மன வளர்ச்சி, இவற்றைப்பற்றி விரிவாக விளக்கியுள்ளனர். குமரப் பருவத்தில் விரைவான உடல்வளர்ச்சி இருக்கும்; மன வளர்ச்சியிலும் தொடர்ந்து வேகம் இருக்கும். பகுத்தறிவு விரைவாக வளர்வதைக் காணலாம். சமூகமனப்பான்மையும் புத்துயிர் பெறுகின்றது. இளைஞனின் வாழ்க்கையில் குடும்பச் சூழ்நிலை கணிசமான அளவுக்குப் பெரும் பங்கு பெறுகின்றது. எல்லாம், வெளியுலகில் அதிகமாகப் பழகும் வாய்ப்பு இருப்பதால் புறச் சூழ்நிலையால் பெருமாற்றம் ஏற்படுவதற்குக் காரணம் உண்டு. கீழ்ப்படியாமை, தன்னை முக்கியமாக நினைத்தல், பிறர் தன்னைப் பாராட்ட விரும்புதல், மடிமை, ஊக்கமின்மை ஆகியவையும் இப் பருவத்தில் காணப்பெறுபவை. குடும்பம், பள்ளி இவற்றை விடப் பரந்த சமூகம் ஒன்றின் உறுப்பினர் என்ற உணர்வு இப் பருவத்தினரிடம் எழுகின்றது. புதிய ஊக்கங்களும், உறவுகளும், நோக்கங்களும் ஏற்படுகின்றன. சமூகத்தை நாடுதல், தம்மையொத்த வயதினருடன் சேர விரும்புதல், கழகம் அமைத்தல், சமூகத்திற்காகத் தன்னை ஒடுக்கிக்

கொள்ளுதல், சமூகத்திற்கும் சங்கத்திற்கும் பாடுபடுதல் ஆகியவை இப்பருவத்தினரின் குறிக்கோள்களாக அமையும். சிறந்த குறிக்கோள்கள் மனத்தில் எழும்; அவற்றைச் செயற்படுத்தவும் மனம் துடிக்கும்.

திலகவதியாரால் சிறப்புடன் வளர்க்கப்பெற்ற மருள் நீக்கியாரின் மாசற்ற உள்ளத்தில் கவலை எழுவதற்கு வாய்ப்பில்லை. பருவத்திற்கேற்ற அறிவு வளர்ச்சி பெறு கின்றது. உலகியலறிவும் நன்கு வாய்க்கப்பெறுகின்றது. இளமையும், யாக்கையும், செல்வமும் நிலையுடையன அல்ல என்ற நிலையாமை உணர்ச்சி எழுகின்றது.

**நில்லாத வற்றை நிலையின என்றுணரும்**
**புல்லறி வாண்மை கடை**[1]

என்ற வள்ளுவரின் வாய்மொழியின் உண்மை நன்கு மனத்தில் படிகின்றது. இவை நீங்குவதற்கு முன்னரே நிலையுடைய நல்ல அறங்களைச் செய்ய எண்ணுகின்றார்.

**இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்**
**இனிய நீர்த்தண் சுனைக ளியற்றல்**
**அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்**[2]

என்பர் பாரதி. இத்தகைய கருத்துகள் மருள்நீக்கியார் சிந்தையில் எழுகின்றன. வெயில் வெம்மை நீங்கச் சோலைகளை அமைக்கின்றார். உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத நல்ல நீர் நிறைந்த குளங்கள் பலவற்றைத் தோண்டுகின்றார். வறுமையால் சென்று இரக்கும் இரவலர்கட்கு இல்லையென்னாது வேண்டுவன ஈந்து மகிழ் கின்றார். செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக் கின்றார். நாவலர்க்குப் பெரும் பொருளைப் பரிசிலாக

---

1. குறள் - 331.
2. பா. க: சரசுவதி தேவியின் புகழ் - 9

நல்குகின்றார். இங்ஙனம் உலகத்துள்ளார் யாவருக்கும் இல்லையென்னாது ஈந்து மகிழும் அருளாளராய்த் திகழ்கின்றார்[3].

**சமய மாற்றம்:** மருள்நீக்கியார் வாழ்ந்த காலத்தில் சமணத் துறவிகள் பலர் தமிழகத்தில் சமண் சமயத்தைப் பரப்ப வேண்டும் என்னும் பெருவிருப்பால் பாடலிபுத்திரம் முதலிய ஊர்களில் சமண் பள்ளிகளும், பாழிகளும் அமைத்துக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் தாம்கற்றுத் துறை போய அளவை நூல் (தருக்கம்) வன்மை யாலும் சீவகாருண்யத்தைப் போற்றியுரைக்கும் அறிவுரை களாலும் தமது சமயத்தைத் தமிழ்நாடெங்கும் பரப்பும் பணியில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்தம் கொள்கைகளால் ஈர்க்கப்படுகின்றார் மருள்நீக்கியார். எல்லாச் சமயங் களுள்ளும் சிறப்புடைய மெய்ச்சமயம் இதுவெனத் தெரிந்துணரும் ஆர்வம் இவரிடம் தலைதூக்கி நிற்கின்றது. சிவபெருமான் திருவருளும் இவருக்குக் கைகூடப் பெற வில்லை. கொல்லாமை என்னும் நல்லறப் போர்வையில் மறைந்துலவும் சமண் சமயத்தில் சேரக் கருதுகின்றார். பாடலிபுத்திரம் என்னும் ஊரையடைந்து சமண முனி வர்கள் வாழும் தவப் பள்ளிகளை நண்ணுகின்றார். 'பேரின்பமாகிய வீடுபேற்றினை அளிக்கவல்ல உண்மைச் சமயம் எங்கள் சமண் சமயமே' என மருள்நீக்கியாருக்கு எடுத்துரைத்து அவரைத் தம் சமயத்தில் ஈடுபடுத்த முயல் கின்றனர் முனிவர்கள். அவர்தம் அறவுரையில் உள்ளத்தைப் பறிகொடுத்த மருள்நீக்கியார் சமண் சமயத்தைத் தழுவி அச்சமயத்தின் அரிய பல நூல்களை யெல்லாம் கற்றுத் துறைபோய வித்தகராகின்றார். இவர் தம் திறமையைக் கண்டு மகிழ்ந்த சமண முனிவர்கள் இவரைத் தருமசேனர் என்ற சிறப்புப்பெயரால் பாராட்டிப் போற்றுகின்றனர். தருமசேனரும் புத்தரில் ஒரு சாரா

---

3. பெ. பு: திருநாவுக் - 36.

ராகிய தேரர்களை வாதில் வென்று 'அமண் சமயத் தலைமையினில் மேம்படுகின்றார்.'

நின்றுண்ணும் பழக்க முடையவர்களாகிய சமணர் குழுவிற் சார்ந்தவர் மருள்நீக்கியார். தேரர் என்ற புத்தரில் ஒருசாரரார் இருந்துண்ணும் பழக்கமுடையவர்கள். முற்குறிப்பிட்ட சமணர்கள் குண்டர், அமணர் என்று இரு பிரிவினராகத் தேவாரத் திருப்பதிகங்களில் குறிப்பிடப் பெறுகின்றனர். இந்த இரு பிரிவினருள் குண்டர் என்பார் குழுவிலேயே சார்ந்தொழுகினவர் நம் மருள்நீக்கியார். இதனை,

> குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார்
> நகைநாணா துழிதர்வேனை (4.5:4)

எனவும்,

> அறந்தெரியா ஊத்தைவாய் அறிவில் சிந்தை
> யாரம்பக் குண்டரோ டயர்த்து நாளும்
> மறந்தும்அரன் திருவடிகள் நினைய மாட்டா
> மதியிலியேன் (6.91:8)

எனவும்,

> பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாம்
> குண்டர்கள்தம் சொல்லே கேட்டு
> உருகுவித்து (4.5:3)

எனவும் வரும் இவர் தம் வாய்மொழிகளால் இனிது உணரலாம். இவை மருள் நீக்கியார் சமண் சமயத்தை விட்டு நீங்கித் திருநாவுக்கரசராய்த் திகழ்ந்தபோது பாடப்பெற்ற திருப் பாடல்களாகும்.

மற்றும், மருள்நீக்கியார் தாம் குண்டர் குழுவிற் சேர்ந்திருந்த காலத்தில் சமண் சமயத் துறவிகளாகிய

அமணர்களை ஆதரித்து அவர் பொருட்டுப் பெரும் பொருளையும் காலத்தையும் கொன்னே செலவிட்ட தன்மையினையும் குண்டர் குழுவினின்றும் தம்மைப் பிரித்து ஆட்கொண்ட பேரருளாளன் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் என்பதனையும் சில பாடல்களில் குறிப்பிடுகின்றார்.

குண்டாக்க னாயுழன்று கையி லுண்டு
குவிமுலையார் தம்முன்னே நாண மின்றி
உண்டியுகந்து அமணே நின்றார் சொற்கேட்டு
உடனாகி யுழிதந்தேன் (6.3:7)

எனவும்,

பல்லுரைச் சமண ரோடே
பலபல கால மெல்லாம்
சொல்லிய செலவு செய்தேன் (4.39:7)

எனவும்,

துறவியென் றவம தோரேன்
சொல்லிய செலவு செய்து
உறவினால் அமண ரோடும்
உணர்விலேன் (4.39:6)

எனவும்,

குண்ட ரோடு பிரித்தெனை
யாட்கொண்டார் போலும் (6.54:8)

எனவும்,

குண்டு பட்டுக் குறியறி யாச்சமண்
மிண்டரோடு படுத்துய்யப் போந்து (5.41:6)

எனவும் வரும் பாடற் பகுதிகளால் இவற்றைத் தெளியலாம்.

இங்ஙனம் தேவாரத் திருப்பதிகங்களால் அறியப் பெறும் குண்டர், அமணர் என்ற பெயர் வேறுபாடு இப் பொழுது கிடைக்கும் சமண் சமயத் தமிழ் நூல்களால் அறியக்கூடவில்லை. எனவே, இந்த இரு திறத்தார்க்கும் தனித்தனியே உரிய ஒழுகலாறுகளின் வேறு பாடுகளை அறிந்து தெளிய இயலவில்லை.

# 3. சூலை நோயால் தடுத்தாட்கொள்ளப்பெறுதல்

"தம்பியார் உளராக வேண்டும்'' என்ற பேரருளால் இல்லத்தின் கண் இருந்து மருள் நீக்கியாரை அன்புடன் போற்றி வளர்த்த தமக்கையார், திலகவதியார், தம்பி சமணர் சூழ்ச்சியில் அகப்பட்டுச் சமண் சமயத்தைச் சார்ந்தனர் என்பதைக் கேள்வியுறுகின்றார். இல்லத்தில் நல்ல சூழ்நிலையிருந்தும் புறச் சூழ்நிலையால், மருள்நீக்கியார் மனம் மாறிப் புறச் சமயத்தைத் தழுவும் நிலை வந்தமைகின்றது. இயற்கையிலேயே பாசத்தளையைக் களைந்து சுற்றத் தொடர்பும் அறவேண்டும் என்ற பெரு நோக்கத்தையுடைய திலகவதியாருக்கு அப் பற்றுறுதி இப்பொழுது தானே வந்து சேர்கின்றது. தூய சிவ நெறியைச் சாரும் நோக்கத்துடன் நாதன் திருவருளை நாடித் திருவதிகைத் திருவீரட்டானத் திருக்கோயிலை[1]

1. அதிகை வீரட்டானம்: (திருவதிகை) இத்தலம் பண்ணுருட்டியிலிருந்து 2 கல் தொலைவிலுள்ளது. சிவத் தலங்களுள் அதிகப்பட்டது (மேம்பட்டது). அதிகா, அதிகை. பழைய பல்லவ சிற்ப முறையில் கோயிலும் சிவலிங்க மூர்த்தியும் அமைந்துள்ளன. மகேந்திர வர்மப் பல்லவ மன்னன் சமண்பாழிகளை இடித்து அக்கற்களைக்

அடைகின்றார். சிவபெருமான் திருவருளை இறைஞ்சிச் சிவச் சின்னங்கள் அணிகின்றார். நாடோறும் புலர்வதற்கு முன்னர் கோயிலில் திருவலகிடுதல், நலமலி ஆன்சாணத் தால் நன்றாக மெழுகுதல், மலர் கொய்து மாலைகள் தொடுத்தமைத்தல் முதலிய திருப்பணிகளை விருப்புடன் செய்து இறைவனைப் போற்றுகின்றார்.

திருவதிகை இறைவனை நாடோறும் வழிபட்டிருக்கும் திலகவதியார் தம்முடைய தம்பியின் புறச்சமயப் பிடிப் பினை எண்ணிப் பெரிதும் வருந்துகின்றார். திருவதிகைப் பெருமானை இறைஞ்சி நின்று, "எம்பெருமானே, நீர் என்னை ஆண்டருளினீராகில், அடியேன் பின் பிறந்த வனைப் புறச் சமயப் படுகுழியினின்றும் எடுத்தாண்டு உய்விக்க வேண்டும்" எனப் பல முறையும் விண்ணப்பிக்கின் றார். சிவநெறியில் உறைப்புடைய திலகவதியாரின் கனவில் தோன்றுகின்றார் திருவதிகைப் பெருமான்[2]; "நீ உன் மனக் கவலையைத் தவிர்ப்பாயாக; நின் தம்பி முன்னமே முனியாகி எம்மையடையத் தவம் முயன்றான். அன்னவனுக்கு இனிச் சூலை நோயைத் தந்து ஆட்கொள் வோம்"[3] என்று அருள் செய்கின்றார். அவ்வண்ணமே. தருமசேனர் வயிற்றில் சூலை நோய் வந்து பற்றுகின்றது

---

கொண்டே எடுப்பித்த குணபரேசுவரம் இக் கோயிலுக்கு அருகிலுள்ளது. அப்பரும் திலகவதியாரும் சரியைத் தொண்டு செய்த அருமைத் தலம். சுந்தர மூர்த்திக்கு திருவடி தீட்சை செய்த திருவிளையாடல் நிகழ்ந்த சித்த வட மடம் கோயிலின் தெற்கு வீதியில் உள்ளது. அருகில் கெடிலநதி ஓடுகின்றது. அட்ட வீரட்டங்களுள் இது திரிபுரம் எரித்த வீரட்டம் (5.53;4). திரிபுர தகனஉற்சவம் சித்திரைப் பெருவிழாவில் திருத்தேரோட்டத்தன்று நடை பெறுகின்றது.

2. பெ. பு; திருநாவுக்கரசு - 44

3. ஷை. ஷை. 48

**தருமசேனர் படும்பாடு:** இறைவன் அருளால் தருமசேன ரைப் பற்றின சூலை நோய் வடவைப் பெருந்தீயும் ஆல காலவிடமும் வச்சிரப்படையும் கொடுமை விளைவிப்பன பிறவும் ஒன்றாகத் திரண்டு வருத்துதல்போல் குடரைக் குடைந்து வருத்துகின்றது. இந்த நோயின் துன்பத்தைத் தாங்க முடியாமல் பாழியறையில் மயங்கி வீழ்கின்றார். அவர் சமண் சமயத்தில் தாம் கற்ற மந்திரங்களையெல் லாம் கையாண்டு பார்க்கின்றார்; அது தணியவில்லை. மாறாக, அது முடுகி வருத்துகின்றது. தருமசேனர் படும் துன்பத்தைக் கண்ட சமணர்கள் பலருங் கூடி "உயிரைக் கவரும் கொடிய நஞ்சினை யொத்த சூலை நோய் இவரை வருத்துகின்றதே. இதற்கு நாம் என் செய்து இதனைத் தணிப்போம்?" எனப் பெரிதும் கவலைப்படலாயினர். தம் கையிலுள்ள குண்டிகை நீரை மந்திரித்துக் குடிப்பிக் கின்றனர்; மயிற்பீலி கொண்டு காலளவும் தடவுகின்றனர். இச் செயல்களால் சூலை நோய், நெய்யிட்ட நெருப்பு மேலும் பெருகி எரிவதுபோல், பன்மடங்கு அதிகரிக் கின்றது. இதனைக் கண்டு சோர்வுற்ற சமணர்கள் "ஐயோ, இனி நாம் என் செய்வோம்" என்று கலங்கிய உளத்தினராய், "இது நம்மாற் போக்கற்கரிய நோயாகும்" என்று சொல்லித் தருமசேனரைக் கைவிட்டு அகன்று போகின்றனர்.

இந் நிலையில் சூலை நோயால் அல்லலுற்றுச் சோர்வுற்ற தருமசேனர் தம்முடைய பழைய உறவினரை எண்ணுகின்றார். அப்பொழுது தம்முடைய தமக்கை யாரைப் பற்றிய நினைவு எழுகின்றது. தமக்கு அடிசிலமைப் பவனை அழைத்துத் தாம் படும் துன்பத்தைத் தமக்கை யாருக்குக் கூறி வரும்படி அனுப்புகின்றார். அவனும் திருவதிகையை அடைந்து, மலர் கொய்ய நந்தவனத்திற்குச் செல்லும் அருந்தவச் செல்வி திலகவதியாரைக் கண்டு வணங்குகின்றான். "நும்முடைய திருத் தம்பியாரின் ஏவலினால் யான் இவண் போந்தேன்" எனச் செப்பு

கின்றான். திலகவதியார் இதனைக் கேட்டு, ''தீங்குளதோ?'' என வினவுகின்றார். ''சூலை நோய் உயிரை மட்டும் போக்காமல் நின்று குடரை முடக்கித் துன்புறுத்துகின்றது. அமணர்கள் யாவரும் நும் தம்பியைக் கைவிட்டனர். இச் செய்தியை நும்பால் தெரிவிக்குமாறு சொல்லியனுப்பி னார். இருட்டோடு இருட்டாகத் திரும்பி வருமாறும் பணித்தனர்'' என்றுகூறுகின்றான், அட்டில் அமைப்போன். இதனைச் செவிமடுத்த திலகவதியார் ''நான் உன்னுடன் போந்து நன்றறியா அமண்பாழிக்கு வருவதற்கில்லை என்ற மறுமொழியைத் தம்பியின் திருச் செவியில் சாற்றுவாயாக'' என்று சொல்லியனுப்புகின்றார். அடிசிலாக்குவோனும் திலகவதியாரை விட்டு அகன்று தருமசேனரை அடைந்து தமக்கையார் கூறியதனைத் தெரிவிக்கின்றான்.

திருவதிகையை அடைதல்: அட்டிலமைப்போன் கொண்டு வந்த செய்தியை அறிந்த தருமசேனர், ''இனி இதற்கு யான் யாது செய்வேன்?'' என்று சொல்லி அயர் வுறுகின்றார். இந் நிலையில் சிவபெருமானின் திருவருளும் கைகூடப் பெறுகின்றது. ''இம்மைக்கும் மறுமைக்கும் ஒவ்வாத சமண் சமயத்தைத் துறந்து என் தமக்கையாரின் திருவடிகளை வணங்கி உய்வேன்'' என்று கூறிய வண்ணம் திடசித்தராகின்றார். இதனால் புதியதோர் உணர்ச்சி தம்மைப் பிடித்து உந்த ஒருவாறு சோர்வு அகன்று எழு கின்றார். உடுத்தபாய், பிடித்த குண்டிகை, தொடுத்த மயிற் பீலி ஆகியவற்றை வீசியெறிகின்றார். தூய வெள்ளாடை உடுத்துத் தமக்குப் பற்றுக் கோடாக வர உடன் பட்டாரைப் பற்றிக் கொண்டு சமணப் பள்ளியைக் கடந்து, நள்ளிரவில் ஒருவரும் காணா வண்ணம் பாடலி புரத்திலிருந்து திருவதிகையை நோக்கிப் புறப்பட்டு வரு கின்றார்; திலகவதியார் தங்கியிருக்கும் திருமடத்தை நண்ணுகின்றார்.

திருமடத்தை அடைந்த மருள்நீக்கியார் தம் தமக்கையாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்குகின்றார்.

"நமது குலம், செய்த நற்றவத்தின் பயன் அனையீர்" இவ்வுடம்பினைப் பற்றிய சூலை நோயினைத் தாங்க முடியாமல் நும் திருவடிகளைச் சரண் அடைந்தேன். இனி யான் அறியாமையில் ஆழ்ந்து மயங்காமல் துயர்க் கடலினின்றும் உய்ந்து கரையேறுதற்குரிய நன்னெறியினைப் புகட்டுவீராக" என்று விண்ணப்பம் செய்கின்றார். தம்பியாரின் மனநிலையினை உணர்ந்த தமக்கையார் சிவபெருமானின் திருவருளை நினைந்து உருகுகின்றார்; கைகூப்பித் தொழுகின்றார். தம்பியாரை நோக்கி, "உறுதிப் பொருள் கொண்ட தெய்வக் கொள்கையற்ற புறச் சமயப் படுகுழியில் வீழ்ந்து துயருழந்தீர்; இப்பொழுது எழுந்தீர்" என மொழிய, மருள் நீக்கியாரும் சூலை நோயுடன் நடுக்கமுற்றெழுந்து தமக்கையாரைத் தொழுகின்றார். தமக்கையாரும் தம்பியாரை நோக்கி, "நும்மைப் பற்றிய இந்நோய் இறைவனது திருவருளே என அறிவீராக. தன்னைச் சரண்புக்காரது பாசத்தளையை நீக்கி இன்னருள் புரியும் இறைவன் கழலடிகளைக் பணிந்து பணி செய்வீராக" எனப் பணிக்கின்றார்.

தம்பியாரும் தமக்கையாரது அருட்பணியை ஏற்றுக் கொண்டு இறைஞ்சி நிற்கின்றார். தம் தம்பியார் திருவதிகை வீரட்டானத் திருக்கோயிலிற் புகுவதற்குத் தகுதியுடையவராம்படி, திலகவதியார் கயிலைப் பெருமானின் கழலடிகளை நினைந்து அவனது திருவருள் வண்ணமாகிய திருநீற்றினைத் திருவைந்தெழுத்தினை ஓதிக் கொடுத்தருளுகின்றார். மருள் நீக்கியாரும் அவற்றைப் பணிந்து ஏற்று, பெருவாழ்வு வந்ததெனக் கருதி அ வெண்ணீற்றினை உடலெங்கும் பூசி அணிகின்றார். தமக் உய்யும் நெறி தரும் தமக்கையார்க்குப் பின்னே தாமு திருவதிகைத் திருக்கோயிலுக்குப் புறப்பட்டுப்போகின்றா

**சூலை நோய் தீர்த்து ஆட்கொள்ளப்பெறுதல்:** திரு அணிந்தவுடன் மருள் நீக்கியாரின் அகத்திருள் அக

பெறுகின்றது; விடியற்காலத்தில் உலகைக் கவித்துக் கொண்டிருந்த் புற இருளும் நீங்குகின்றது. இத்தகைய திருப்பள்ளி எழுச்சிக் காலத்தில் தவச் செல்வியாகிய திலகவதியார் திருவலகும் திருமெழுக்குங் கொண்டு திருக் கோயிலுக்குப் புறப்படுகின்றார். தம்பியாரும் உடன் செல்லுகின்றார். மருள் நீக்கியார் திருக்கோயிலைத் தொழுது வலங்கொண்டு நிலமிசை வீழ்ந்து திருவதிகை வீரட்டானத்து இறைவனை இறைஞ்சுகின்றார். இந் நிலையில் இறைவன் திருவருளால் செந்தமிழ்த் தமிழ் மாலைகளைப் பாடிப் போற்றும் உணர்வு அவருக்கு உண்டாகின்றது. இந்த உணர்வால் தூண்டப்பெற்றுத் தம்மை மயக்கத்தில் ஆழ்த்தும் சூலை நோய் நீங்கும் பொருட்டுத் திருவதிகைப் பெருமானை 'கூற்றாயினவாறு' (4. 1) என்ற முதற் குறிப்பினையுடைய செந்தமிழ்ப் பாமாலையை உள்ளத்தில் பேரன்பு பொங்கப் பாடிப் போற்றுகின்றார்.

கூற்றாயின வாறு விலக்ககிலீர்
கொடுமை பல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே
குடரொடு துடக்கி முடக்கியிட
ஆற்றே னடியேன் அதிகைக்கெடில
வீரட்டானத் துறையம் மானே (1)

என்பது இப்பதிகத்தின் முதற்பாடல். நிலை பெற்ற பெரு வாழ்வைத் தரும் இத்திருப்பதிகத்தைப் பாடிய பொழுது அவர்தம் வயிற்றில் புகுந்து வருத்திய சூலை நோய் விரை வில் நீங்கி விடுகின்றது. மருள் நீக்கியாரும் இறைவனின் கருணைக் கடலில் மூழ்கித் திளைகின்றார்.

இந்நிலையைச் சேக்கிழார் பெருமான் மிக அற்புத மாகக் காட்டுவர்.[4] 'இறைவனது திருவருள் அடியேற்கு

4. பெ. பு: திருநாவுக்கரசு- 72,73

உயிருடன் நலத்தையும் அருளியது' என மகிழ்ந்து முதல்வன் கருணைக் கடலில் மூழ்கி இன்புறுகின்றார்; மெய் மயிர் சிலிர்க்க, கண்ணீர் மழையெனப் பொழிய நிலமிசை வீழ்ந்து புரள்கின்றார்; 'என்றும் வெள்ளம் ஏறாத பெருந் திடர் என அமைந்த எளியேன்பால் இவ்வாறு நின் திரு வருள் பெருவெள்ளத்தைப் பெருக்கி விடுதல் தகுமோ?' என இறைவனை உளங் கசிந்து போற்றுகின்றார். 'பொய்ம்மை மிக்க புறச்சமயப் படுகுழியில் வீழ்ந்து எழுமாறு, இதுவென உணராது மயங்கி அவமே செய்து கிடக்கும் எளியேன் மாமலையாள் மணவாளன் திருக் கழலடிகளை அடைந்து உய்யும் வண்ணம் இத்தகைய நல் வாழ்வைத் தந்த சூலை நோய்க்குச் செய்யத் தக்க கைம்மாறு யாதுள்ளது?' என்று, தம்மை நல்வழிப் படுத்து வதற்குக் காரணமாயமைந்த சூலை நோய்க்கு நன்றி தெரி வித்து இறைவனைத் தொழுகின்றார்.[5] இந்த நிலையில், "செந்தமிழ்ப் பதிகம் பாடிய பான்மையினால் நின் பெயர் 'நாவுக்கரசு' என உலகேழினும் நிலைபெற்று வழங்கு வதாகுக" என்ற இறைவனின் திருவருள்வாக்கு யாவரும் கேட்கும் வண்ணம் வானின்கண் எழுகின்றது.

இத்திருவருள் மொழியினைச் செவிமடுத்த நாவுக்கரசர் "இவ்வளவு நெடுங்காலமாக இறைவனை மறந்திருந்த தீவினையாளனாகிய எளியேனால் இத்தகைய பெருவாழ்வு அடைதற்குரியதோ?" என வியப்புறுகின்றார். கயிலை மலை அண்ணலின் பேராற்றலை உணராமல் அம்மலையை எடுத்த இராவணனின் பெரும் பிழையைத் திருவுள்ளம் கொள்ளாமல் அவனுக்கு நீண்ட வாணாளையும் வாட் படையையும் வழங்கிய பெருமான் அல்லவா? இந்தப் பெருமானின் பெருங்கருணைத் திறத்தை உணர்ந்து

---

5. இறைவன் திருவருள் துன்பப் படுத்துவதிலும் வந்தடையும் என்பதற்கு இது நல்லதோர் எடுத்துக்காட்டு.

போற்றுவதனையே தமக்குரிய கடமையாகக் கொண்டு அதிகை வீரட்டானத்து இறைவனைத் துதித்துப் போற்று கின்றார்.

இங்ஙனம் மருள்நீக்கியார் புறச்சமய இருள் நீங்கிச் சிவநெறியை மேற்கொண்டு திருநாவுக்கரசராகத் திருவருள் பெற்ற செய்தியை அறிந்த திருவதிகைப்பெருமக்கள் 'உலகம் உய்ந்தது' என்று பெருமகிழ்ச்சி யுறுகின்றனர். முரசம் தண்ணுமை, யாழ், முழவு, துந்துபி, கண்டை, சங்கு இவற் றின் ஒலி முழங்கச் செய்து இந்நிகழ்ச்சி அடியார் பெரு மக்களால் ஒரு விழாவாகக் கொண்டாடப்பெறுகின்றது. தம் திருமேனியில் சிவச் சின்னம் விளங்கிட, திருக்கோயிலில் கைத் திருத்தொண்டு புரியவல்ல உழவாரப் படையை உடையவராய் திருநாவுக்கரசர் மனம் மொழி மெய் களால் சிவநெறித் தொண்டு புரியும் திருத்தொண்டராகத் திகழ்கின்றார். திலகவதியாரும் திருவதிகைப் பெருமானை வணங்கி "பொய்ம்மை மிக்க புறச் சமயத்தாரது சூழலில் அகப்பட்டு மயங்கிய என் தம்பியை அச்சமயப் பிடிப்பி னின்றும் மீளச் செய்து எங்களையும் ஒரு பொருளாக ஆண்டு கொண்டருளிய இத் திருவருட்பேற்றினை இவ்வுல கில் வேறு யார்தாம் பெற்றனர்?" என்று வியக்கின்றார்; நெஞ்சம் நெக்குருகிப் போற்றி மகிழ்கின்றனர்.

திருநாவுக்கரசர் இறைவன் அருளால் பாமாலை பாடிப் போற்றும் பயிற்சி பெற்று உய்ந்த நிகழ்ச்சிக்கு அவர்தம் திருப்பாடல்களே அகச்சான்றுகளாக அமை கின்றன.

**சந்தமலர்த் தெரிவையொரு பாகத் தானைச்**
**சராசரநற் றாயானை நாயேன் முன்னைப்**
**பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண் டாங்கே**
**பன்னியநூல் தமிழ்மாலை பாடுவித்தென்**
**சிந்தைமயக் கறுத்ததிரு அருளி னானை**

என்ற செங்காட்டங்குடித் தாண்டகத்தாலும் (6.84:4),

பத்தனாய்ப் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித் தானை

*என்ற திருமுதுகுன்றத் தாண்டகத் தொடராலும் (6 68:3) அறிந்து தெளியலாம்.*

*மேலும் 'கூற்றாயினவாறு' (4;1) என்ற முதற் குறிப் பினையுடைய செந்தமிழ்ப் பாமாலை தீராத வயிற்று நோயாகிய சூலை நோயால் வருந்திய நிலையில் பாடப் பெற்றதென்பதை, இப்பதிகத்தில் வரும்,*

சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர் (3)

உடலுள்உறு சூலை தவிர்த்தருளாய் (5)

வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர் (7)

*என்ற வேண்டுகோள் தொடர்களால் தெளிவாக அறிய லாம். தம்மை வருத்திய கடும்பிணியாகிய சூலை நோயினை இறைவன் விரைவிற் போக்கியருளிய அற்புத நிகழ்ச்சிக்கு*

சூலைதீர்த் தடியேனை ஆட்கொண்டாரே (3)

உடலுறுநோய் தீர்த்தென்னை ஆட்கொண்டாரே (6)

இடருறுநோய் தீர்த்தென்னை ஆட்கொண்டாரே (11)

*என்ற திருப்பதிகத் (6.96) திருப்பாடல்களின் தொடர்கள் அகச் சான்றுகளாக அமைகின்றன.*

# 4. சமணர்களின் சூழ்ச்சி

திருநாவுக்கரசர் சிவ நெறியைக் கடைபிடித்து வாழ்ந்து வருவதைப் பாடலிபுரத்திலுள்ள சமணர்கள் கேள்வியுற்று மனம் பொறாத நிலையினை அடைகின்றனர். "சமண் சமயத்திற்குப் புறம்பான பல சமயங்களையும் வாதில் வென்று நம் சமயத்தை நிலைநிறுத்திய தரும சேனர், தம்மைப் பற்றிய சூலைநோய் ஒருவராலும் போக்க முடியாமையால் உய்யும் நெறியை நாடித் திருவதிகைக்குச் சென்று முன்போலச் சைவராகிச் சூலைநோய் நீங்கி உய்ந் தனர். இனி நம் சமயம் அழிந்தது" என வருத்தமடைந்து ஓரிடத்தில் ஒருங்கு கூடுகின்றனர். இவ்வாறு ஒன்று சேர்ந் தவர்கள், "சூலை நோயை நம்மால் போக்க முடியாமை யால் தருமசேனர் மீண்டும் சிவநெறியைத் தழுவினார் என்ற செய்தியை நம் வேந்தன் அறிவானாயின், நம்மை வெகுண்டு தானும் சைவனாகி நமக்கு நாடோறும் நல்கி வரும் உணவு முதலிய வசதிகளையும் நிறுத்திவிடுவான். இனி இதற்கு நாம் யாது செய்வது?" என்று கூறித் தமக் குள்ளே ஆராய்ந்து வஞ்சனைச் செயல்களை மேற் கொள்ளத் துணிகின்றனர். "நம் சமயத் தலைவராகத் திகழ்ந்த தருமசேனர் தம் தமக்கையாராகிய திலகவதி யாரைப்போல் தாமும் சைவ நெறியைக் கடைப்பிடிக்க எண்ணித் தமக்குச் சூலை நோய் வந்ததாகப் பொய் புகன்று அந் நோய் நம்மால் தீர்க்க முடியவில்லை என்று நம்மீது

பழி சுமத்தி இங்கு நமக்கு இழிவு உண்டாகத் தம் தமக்கை யாரைச் சார்ந்து சைவராகி நம்மையும் நம் சமயக் கடவுளையும் இகழ்ந்தனர்'' என்றதொரு பொய் வழக்கினைப் புனைந்து வேந்தனிடம் முன்னதாகவே சென்று முறையிடுவதே தக்கது என்ற முடிவுக்கு வருகின்றனர்.

இங்ஙனம் சூழ்ந்து முடிவெடுத்த சமயத் துறவிகள் பல்லவ வேந்தனின் தலைநகரை அடைந்து, அரண்மனையினுள் புகுந்து அரசனை நோக்கி, ''மன்னனே, எங்கட்குத் தலைவராக இருந்த தருமசேனர் தமக்குச் சூலை நோய் வந்தது எனப் பொய்கூறிச் சைவராகி நம் சமயத்தைத் துறந்தார்'' என்று செப்புகின்றனர். இவ்வுரை கேட்ட பல்லவ வேந்தன் மிகவும் சினங் கொண்டு, ''குற்றம் மிக்க உள்ளத்தையுடைய தம் சமயத்தைச் சார்தற் பொருட்டுப் பொய்ப்பிணி கொண்டு புகழ்மிக்க நம் சமயத்தை அழிக்க முயல்வது முறையோ? அத்தீயோனை இவண் கொண்டு வாருங்கள்'' என்று பணிக்கின்றான்.

அரசனது ஆணையினை நிறைவேற்றத் துணிந்த அமைச்சர்கள் சேனை வீரர்களுடன் திருவதிகையை நோக்கி விரைகின்றனர். சிவனடியாராகிய திருநாவுக்கரசரை அடைந்து, ''பெரியீர் நும்மை அழைத்து வரும்படி எம்மை அரசன் ஏவினான்'' என்று உரைக்கின்றனர். இதனைக் கேட்ட திருநாவுக்கரசர்,

நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம்; நடலை இல்லோம்;
ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோ மல்லோம்;
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை;
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்மலர்சே வடியிணையே குறுகினோமே (1)

என்ற முதற்பாடலையுடைய திருப்பதிகத்தைப் (6.98) பாடுகின்றார். அரசன் ஆணைக்கு இது மறுமாற்றமாக அமைவதால் இது 'மறுமாற்றத் திருத்தாண்டகம்' என்னும் திருநாமத்துடன் வழங்குகின்றது.

இத் திருப்பதிகத்தின்கண் திருநாவுக்கரசர் தாம் இவ்வுலக வாழ்க்கையில் எத்தகைய தொடர்புமின்றித் தேவாதி தேவனாகிய சிவன் ஒருவனையே சிந்தித்து அவனடியார்கட்கு ஆட்பட்டு வாழும் உறுதிப் பாட்டினையும் எத்தகைய குற்றமுமற்ற தாம் மண்ணாள் வேந்தராகிய எவர்க்கும் அஞ்ச வேண்டியதில்லை என்பதையும் தெளிவாக அறிவுறுத்துகின்றார். விலையுயர்ந்த ஆடைகளை உடுத்துப் பொன்னாலும் மணியாலும் ஆன அணிகலன்களைப் பூண்டு இவ்வணியை ஆட்சிபுரிந்து பட்டத்து யானை மீது உலாப் போகும் மன்னன் சொல்வழியடங்கிப் பணிந்தொழுகும் கீழ்மை நிலை தம்மனோர்க்கு இல்லை என்பார்,

துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவோர் சொல்லும்
சொற் கேட்கக் கடவோமோ துரிசற் றோமே (2)

என்றும்,

பாராண்டு பகடேறி வருவார் சொல்லும்
பணி கேட்கக் கடவோமோ, பற்றற் றோமே (3)

என்றும் கூறுகின்றார்.

மேலும் அந்த அமைச்சர்களை நோக்கி, ''நும்மை அனுப்பினவன் தொண்டை நாட்டை ஆளும் பல்லவ வேந்தன். அவனேயன்றி இந்த நாவலந்தீவு முழுவதையும் தன்னடிப் படுத்திய மன்னர் மன்னனே நும்மை எம்பால் விடுத்தானாயினும் யாம் அவனைப் பொருளாக மதியோம்'' என்பார்,

நாவலந்தீ வகத்தினுக்கு நாத ரான
காவலரே ஏவி விடுத்தா ரேனும்
கடவமலோம்; கடுமையொடு களவற் றோமே(6)

என்றும் கூறுகின்றார். சமண் சமயத் தொடர்பினின்றும் நீங்கிச் சிவனருளில் திளைத்து நிற்கும் நாவுக்கரசர் உலகியல் தொடர்பினை அறவே மறந்த நிலையில் அமைச்சர்களை நோக்கி,

நின்றுண்பார் எம்மை நினையச் சொன்ன
வாசக மெல்லாம் மறந்தோ மன்றே
வந்தார் மன்னவ னாவான்றான் ஆரே(8)

என வினவுகின்றார். இன்னும்,

உம்மோடு மற்றும் உளராய் நின்ற
படையுடையான் பணிகேட்கும் பணியோம் அல்லோம்,
பாசமற வீசும் படியோ நாமே (9)

எனவும்,

தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான் தென்றிசைக்கோன் தானே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலும்
குணமாகக் கொள்ளோம்எண் குணத்து ளோமே(10)

எனவும் தமது நிலையைப் புலப்படுத்துகின்றார். இத்திருப் பதிகத்திலுள்ள இக்குறிப்புகளை ஆழ்ந்து நோக்கினால் மறுமாற்றத்திருத்தாண்டகமாகிய இப்பதிகம் அரசனது ஏவலினால் தம்மை அழைத்துப் போகப் படைவீரர்களுடன் வந்த அமைச்சர்களை நோக்கிப் பாடப்பெற்றது என்பது தெள்ளிதிற் புலனாகும்.

நாவுக்கரசரின் வீர மொழிகளைக் கேட்ட அமைச்சர்கள் அவருடைய திருவடிகளை வணங்கி நின்று "பெருந் தகையீர், அரசதண்டத்தினின்றும் யாங்கள் உய்யுமாறு தாங்கள் எம்முடன் எழுந்தருளவேண்டும்" என வேண்டிக் கொள்ள, நாவுக்கரசரும் அவர்தம் வேண்டுகோட்கிணங்கி, "ஈண்டு வரும் வினைகளுக்கு எம்பிரான் உளன்" என்னும்

மன உறுதியுடையவராய் அமைச்சர்களுடன் செல்லு கின்றார். அமைச்சர்கள் தாம் திருநாவுக்கரசரை அழைத்து வந்த செய்தியைப் பல்லவ வேந்தனுக்குத் தெரிவிக்க, அவனும் தன் அருகிலுள்ள சமணர்களை நோக்கி, "இவனுக் குரிய தண்டனை யாது?" என வினவுகின்றான். இது சமயம் சமணர்கள் "இவரை நீற்றறையிலிடுதலே தக்கது" எனப் பரிந்துரைக்கின்றனர்.

மதிகெட்ட மன்னன் இப் பரிந்துரையை ஏற்று ஏவலாளர்களை நோக்கி, "இக் கொடியவனை நீற்றறை யிலிடுங்கள்" எனப் பணிக்கின்றான். அவர்களும் நாவுக் கரசரை வெம்மைமிக்க நீற்றறையிலிட்டுத் தாளிட்டுப் பூட்டுகின்றனர். நீற்றறையினுள் புக்க நாவுக்கரசர் "ஈண்டு வரும் துயருளவோ ஈசன் அடியார்க்கு?" என்று சிவ பெருமானைத் தம் மனத்திலிருத்தித் தியானித்து வழிபட்டு இருக்கின்றார். ஆனால் வெம்மை மிக்க அந் நீற்றறை நாவுக்கரசருக்கு இளவேனிற் காலத்துத் தென்றல் போலவும், தண்கழுநீர்த் தடம் போலவும், யாழொலியின் இனிமையுடையது போலவும், இறைவன் திருவடி நீழ லாகிய அருளின் நீர்மையுடையது போலவும் பேரின்பம் தருவதாய் அமைந்து விடுகின்றது. இதனைச் சேக்கிழார் பெருமான்,

வெய்யநீற் றறையதுதான்
வீங்கிளவே னிற்பருவம்
தைவருதண் தென்றல்அணை
தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து
முரன்றயாழ் ஒலியினதாய்
ஐயர்திரு வடிநீழல்
அருளாகிக் குளிர்ந்ததே[2]

என்று நயம்படக் காட்டுவர். மேலும்,

2. பெ. பு: திருநாவுக்கரசு-98

மாசில்மதி நீடுபுனல்
　　மன்னிவளர் சென்னியனைப்
பேசஇனி யானைஉல
　　காளுடைய பிஞ்ஞகனை
ஈசனைஎம் பெருமானை
　　எவ்வுயிரும் தருவானை
ஆசையில்ஆ ராவமுதை
　　அடிவணங்கி இனிதிருந்தார்.[3]

என்றும் விளக்குவர். இங்ஙனம் நாவுக்கரசர் நீற்றறையி னுள்ளே பிறைசூடிய பிஞ்ஞகனை நினைந்த வண்ணம் அவனது திருவடி நீழலென இன்புற்றமர்ந்திருந்தபொழுது,

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே(1) (*5.90;1*)

என்று தொடங்கும் திருக்குறுந்தோகைப் பதிகத்தை அடிகள் அருளினார் என்று பெரியோர் பணிப்பர். ஆனால் இது தனிக்குறுந்தாண்டகமாகத் தொகுப்பில் காணப் படுகின்றது.

ஏழு நாட்கள் சென்ற பின்னர் பல்லவர்கள் சமணர் களை அழைத்து "நீற்றறையைத் திறந்து பாருங்கள்" என்று பணிக்க, அவர்களும் அதனைத் திறந்துபார்க் கின்றனர். என்ன அதிசயம்! திருநாவுக்கரசர் யாதொரு துன்பமுமின்றி இனிதிருத்தலைக் கண்டு வியப்புறுகின்றனர். அவர் இருந்த நிலையைச் சேக்கிழார் பெருமான்,

ஆனந்த வெள்ளத்தின்
　　இடைமூழ்கு அம்பலவர்

---

3. *ஷை ஷை 99*

தேனுகந்து மலர்ப்பாதத்
தமுதுண்டு தெளிவெய்தி
ஊனந்தான் இலராகி
உவந்தி ருந்தார்[4]

என்று காட்டுவர். எனினும் மனம் பொறுக்கலாற்றாத சமணர்கள் அரசனிடம் சென்று, "மன்னா, அவன் முன்னர் நம் சமயத்தில் இருந்து பெற்ற மந்திர வலியாலே, வேவாமல் பிழைத்திருக்கின்றான். இனி அவனுக்கு நஞ்சூட்டுவதே தகும்" என்று கூறுகின்றனர். மன்னனும் "அவ்வாறே செய்யுங்கள்" எனப் பச்சைக்கொடி காட்ட, அமணர்கள் வஞ்சனையால் நஞ்சு கலந்த பாலடிசிலை அமுதுசெய்யப் பண்ணுகின்றனர். இறைவனது ஐந்தெழுந்து மந்திரத்தை இரவும் பகலும் மறவாது ஓதும் மாண்புடைய நாவுக்கரசர் சமணர்களின் வஞ்சனையத் தெரிந்து கொண்ட நிலையிலும் "நாதன் அடியார்க்கு நஞ்சும் அமுதாம்" என்று கூறி நஞ்சு கலந்த பாலடிசிலை அமுதுசெய்து யாதொரு தீங்குமின்றி இனிதே இருக்கின்றார்.

நாவுக்கரசர் இருந்த நிலையை சேக்கிழார் பெருமானும் வியந்து போற்றுகின்றார்.

பொடியார்க்குந் திருமேனிப்
புனிதர்க்குப் புவனங்கள்
முடிவாக்கும் துயர்நீங்க
முன்னைவிடம் அமுதானால்
படியார்க்கும் அறிவரிய
பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுதம்
ஆவதுதான் அற்புதமோ? [5]

---

4. பெ.பு: திருநாவுக்-101
5. ௸. ௸. -105

என்பது அவர்தம் திருவாக்கு. நாவுக்கரசரும் நஞ்சினையும் விரும்பியுண்ணத்தக்க நல்லமிழ்தமாக மாற்றியருளிய இறைவனது பேரருட்டிறத்தை,

துஞ்சிருள் காலை மாலை
    தொடர்ச்சியை மறந்தி ராதே
அஞ்செழுத் தோதி நாளும்
    அரனடிக் கன்ப தாகும்
வஞ்சனை பாற்சோ றாக்கி
    வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார்
    நனிபள்ளி அடிகளாரே. (4.70:3)

என வரும் திருநேரிசையில் தெளிவாகக் குறிப்பிட்டுப் போற்றியுள்ளமையைக் கண்டு மகிழலாம்.

நஞ்சினை உண்டும் சாகாமல் பிழைத்திருந்த நாவுக்கரசரைக் கண்ட சமணர்கள் "வெவ்விடமும் இவனுக்கு அமுதாயிற்று. இனி, இவன் பிழைப்பானாகில் நமக்கு விநாசமே" என்று நடுக்கமுறுகின்றனர். அரசனிடம் சென்று, "வேந்தரே, நாம் நஞ்சு கலந்த உணவை உண்பிக்கவும் நமது சமயத்தில் கற்றுக் கொண்ட மந்திர வன்மையால் நஞ்சு தன்னைக் கொல்லாதபடிக் காத்துக் கொண்டான். அவன் மரிக்காதிருப்பானாயின் எம்முடைய உயிரும் நும்முடைய ஆட்சியும் அழிவது திண்ணம்" என முறையிடுகின்றனர். இவர்தம் மொழி கேட்டு மதிகெட்ட மன்னவனும் "செற்றவனை இனிக்கடியும் திறம் எவ்வாறு?" என வினவுகின்றான். "நின் பட்டத்து யானையைக் கட்டவிழ்த்து அவனுக்கெதிரே விடுவதே செய்யத் தகுவது" எனச் செப்புகின்றனர் அமணர்கள். அரசனும் அவ்வாறே செய்யப் பணிக்கின்றான். யானையும் கட்டவிழ்த்து விடப் பெறுகின்றது. அஃது ஒரு குன்றம் புறப்பட்டு வருவது

போல் திருநாவுக்கரசரை நோக்கி வருகின்றது. அவரோ தம்மை நோக்கிக் கடகளிறு வரக்கண்டும் சிறிதும் அஞ்சாது சிவபெருமானைத் தியானித்துப் பணிந்த வண்ணம் யானையை நோக்கி, ''நாம் இறைவனுடைய அடியார்கள்; யாதொன்றுக்கும் அஞ்ச வேண்டுவதில்லை. இனி யாம் அஞ்சும்படி வருவதாகிய இடையூறு எதுவுமில்லை'' என அறிவுறுத்தும் கருத்துடன் ''சுண்ண வெண் சந்தனச் சாந்து'' (4.2) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ் மாலையைப் பாடுகின்றார்.

பலபல காமத்த ராகிப்
பதைத்தெழுவார் மனத்துள்ளே
கலமலக் கிட்டுத் திரியும்
கணபதி என்னும் களிறும்
வலமே திரண்டு சுடரும்
வான்கயி லாயமலையும்
நலமார் கெடிலப் புனலும்
உடையார் ஒருவர்தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை
அஞ்சவருவதும் இல்லை(5)

என்பது இப்பதிகத்தின் ஐந்தாவது பாடல். ஒவ்வொரு திருப்பாட்டின் இறுதியிலும் 'கெடிலப் புனலும் உடையார் தமர்நாம் அஞ்சுவது யாதொன்றும் இல்லை, அஞ்ச வருவதுமில்லை' என்று பாடுகின்றார். அங்கு வந்த அந்தக் கொடுமதக் களிறு அன்புருவாகிய நாவுக்கரசரை வலஞ் செய்து அவர்க்கெதிரே நிலத்தில் தாழ்ந்து இறைஞ்சி அவ்விடத்தை விட்டு அகன்று போகின்றது.

இங்ஙனம் சமணர்களால் ஏவப்பட்டுத் தம்மைக் கொல்ல வந்த மதக் களிறு இறைவனருளால் தம்மைக் கொல்லாது மீண்ட அற்புதத்தைப் பின்னொரு காலத்து நினைந்து பார்க்கின்றார் நாவுக்கரசு. மக்களனைவரும் இறைவன் திருவருளைத் துணையென நம்பி எத்தகைய

இடையூறுகள் நேரிடினும் மனங் கலங்காது அச்சமின்றி வாழ்தல் வேண்டும் என்று உலக மக்களுக்கு அறிவுறுத்து வாராய், "மக்களே, நும்மீது மலையே வந்து வீழ்ந்தாலும் நீங்கள் சிறிதும் கலங்காது நின்ற நிலையில் இருப்பீராக. சிவன் தமரை மதக் களிறும் கொன்றிட வல்லதோ? (கொல்ல வல்லதன்று) எனத் தம் அநுபவ வாயிலாக வந்த உண்மையினை,

மலையே வந்து வீழினும் மனிதர்காள்!
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே.(5.91:5)

என வரும் திருப்பாடலில் காட்டியிருப்பதைக் கண்டு மகிழலாம்.

நாவுக்கரசரை நலியாமல் வணங்கி வந்த பட்டத்து யானையைப் பாகர்கள் மீண்டும் அங்குசத்தால் குத்தி அவர்மீது செலுத்துகின்றனர். அப்பொழுது அந்த யானை பாகர்களைக் கொன்று வீழ்த்தியும், ஏவுவதற்குக் காரண மாக இருந்த சமணர்கள் மீது பாய்ந்து அவர்களில் சிலரை மிதித்து வருத்தியும் நகர மக்கள் யாவருக்கும் தீராத கவலையை உண்டாக்கி விடுகின்றது. அங்கிருந்து ஓடித் தப்பிப் பிழைத்த சமணர்கள், மன்னனை நாடிச் சென்று, "வேந்தரே, தருமசேனன் நம் சமயத்திலிருந்து கற்றுக் கொண்ட மந்திர ஆற்றலால் நாம் ஏவிய யானையைக் கொண்டே நம் வலிமையைக் கெட்டொழித்து நுமது புகழுக்கும் இழிவினைத் தேடினான்" என்று புலம்புகின் றனர். அரசன் சினமுற்று "இனி அவனுக்குச் செய்தற் குரிய தண்டனையைச் செப்புமின்" என்று கேட்கின்றான். இது கேட்ட சமணர்கள் "அவனைக் கல்லொடு சேர்த்துக் கயிற்றினால் பிணித்துக் கடலில் தள்ளுக" என்று கூறுகின் றனர். அரசனும் அங்ஙனமே ஆணையிடுகின்றான்.

கொலைத் தொழிலாளர்கள் அரசனது ஆணையை மேற்கொண்டு சமணர்கள் தம்மொடு வர திருநாவுக்கரசரை அழைத்துச் சென்று கல்லொடு பிணித்துப் படகிலேற்றிக் கடல் நடுவே தள்ளிவிட்டுத் திரும்புகின்றனர். ஏவலர் சென்ற பின்னர் மெய்த் தொண்டராகிய திருநாவுக்கரசர் "எப்பரிசாயினும் ஆக ஏத்துவன் எந்தையை" என்று கூறி ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதுகின்றார்.

சொற்றுணை வேதியன்
சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி
பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர்
கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது
நமச்சி வாயவே.

எனத் தொடங்கும் நமச்சி வாயத் திருப்பதிகத்தைப் (4. 11) பாடிப் போற்றுகின்றார். இத் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றியபொழுது அவரோடு பிணிக்கப்பட்டுக் கடலில் தள்ளப்பட்டக் கருங்கல் கடல்மீது மிதக்கின்றது; கல்லில் கட்டப்பெற்ற கயிறும் அறுந்தொழிகின்றது. நாவுக்கரசர் பெருமான் அக்கல்லின்மீது மிதக்கின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

இருவினைப் பாசமும்
மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ்
மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத்
தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல்
உரைக்க வேண்டுமோ?[6]

என்று உளமுருகிப் போற்றுகின்றார்.

---

6. பெ. பு: திருநாவுக்-129

''நல்வினை தீவினைகளாகிய இருவகைக் கயிற்றினால் மும்மலமாகிய கற்களுடன் பிணிப்புண்டு பிறவிப் பெருங் கடலில் வீழ்ந்து கரைகாணாது வருந்தும் அறிவிலா மாக்களை அத் துன்பக்கடலினின்றும் எடுத்து இறைவன் திருவடிகளாகிய இன்பக் கரையில் சேர்க்கவல்லது திருவைந்தெழுத்து. இருவினைப் பாசமும் அற்று இறைவன் திருவடி நீழலே சரண் எனக் கொண்ட தெளிந்த பேரறிவினராகிய நாவுக்கரசரை, வலைஞர்களால் சிறிய படகின் துணை கொண்டு கடத்தற்கரிய கருங்கடலில், ஒரு கல்லின்மேல் மிதக்கச் செய்து, கரையேற்றிய இச்செய்தி வியந்துரைத்தற் குரியதோ'' என்கின்றார்.

கடல் தெய்வமாகிய வருணன் அலைகளாகின்ற கைகளால் கல்லே சிவிகையாக வாகீசரைத் தாங்கிக் கொண்டு திருப்பாதிரிப்புலியூரின் அருகே கொண்டு வந்து சேர்க்கின்றான். இதனைச் சேக்கிழார் பெருமான்,

அத்திருப் பதியினில்
    அணைந்த அன்பரை
மெய்த்தவக் குழாமெலாம்
    மேவி ஆர்த்தெழ
எத்திசை யினும்'அர'
    என்னும் ஓசைபோல்
தத்துநீர்ப் பெருங்கடல்
    தானும் ஆர்த்ததே.[7]

என்று காட்டும் முறையில் ''இயற்கையும் இத்தெய்வ நிகழ்ச்சியில் பங்குகொள்கின்றது'' என்று குறிப்பிடுவர்.

கடலினின்றும் 'கடலூரில்' கரையேறிய நாவுக்கரசர் பெருமானைச் சிவனடியார்கள் மகிழ்ந்து எதிர் கொள்ளு

7. பெ. பு: திருநாவுக். 132

கின்றனர். தொண்டர்களுடன் திருப்பாதிரிப்புலியூர்த்[8] திருக் கோயிலில் சென்று வணங்குகின்றார். ''ஈன்றாளுமாய் எனக் கெந்தையுமாகி'' (4. 94) என்ற முதற்குறிப்புடைய செந் தமிழ் மாலையை இறைவனுக்குச் சாத்துகின்றார்.

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தர
வேண்டும் இவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்
பாதிரிப் புலியூர்ச்

---

8. பாதிரிப்புலியூர் (திருப்பாப்புலியூர்): திருப்பாபுலியூர் என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து ¼கல் தொலைவு. கடற்கரைத் தலம். கெடிலநதியின் தென்கரையிலுள்ளது. புலிக்கால் முனிவர் பாதிரி மரத்தின் கீழிருந்த சிவலிங்கத்தைப் பூசித்தமையால் பாதிரிப் புலியூர் என்பது தலப் பெயர். பழங்காலத்தில் இதன்பெயர் பாடலிபுரம் என்பது. நாவுக்கரசர் தருமசேனராக வளர்ந்த பெருமை இந்நகருக்கு உண்டு. மங்கணர் என்ற முனிவர் சாபத்தாற் பெற்ற முடக்கால் முயல் உருவில் பூசித்து அவ்வுரு நீங்கப்பெற்ற வரலாற்றைப் பாசுரம் (சம்பந்தர் 2.121:1) கூறும். கல்லிற் பூட்டிக் கடலிற் பாய்ச்சப்பெற்ற அப்பர் சுவாமிகள் அக்கல்லையே தெப்பமாகக் கொண்டு ஐந்தெழுத்தோதிக் கரையேறிய பகுதி கரையேறவிட்ட குப்பம் என வழங்கப் படுகின்றது. இது 'வண்டிப் பாளையம்' என்ற பெயரால் வழங்கிவருகின்றது. சித்திரை அனுடநாளன்று கரையேற விட்ட குப்பத்தில் 'கரையேறவிட்டவிழா' நடைபெறுகின்றது. இந்தக் குப்பம் கடலூர் புதுநகரிலிருந்து 1½கல் தொலைவிலுள்ளது. இங்கு திருநாவுக்கரசரின் நினைவாக ஒரு குளமும் படித்துறையும் மண்டபமும் இப்போது புதியனவாக அமைக்கப்பட்டுள்ளன.

தொண்டை மண்டலத்தின் கீழ்க்கரைப்பட்டினம் திருப்பாதிரிப்புலியூர். பாடலிபுரம் என்ற பெயரில் தமிழ் நாட்டுச் சமணரின் குருபீட இடமாக நிலவியது. சமணப் பெரும்பள்ளிகள், கல்வி நிலையங்கள், மடங்கள் அக் காலத்தில் இப்பட்டினத்தில் நிரம்பியிருந்தன.

செழுநீர் புனல்கங்கை செஞ்சடைமேல்
வைத்த தீவண்ணனே. (8)

என்பது இம்மாலையின் எட்டாவது மலர்.

'சொற்றுணைவேதியன்' (4. 11) எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகம் சமணர்கள் கல்லோடு பிணித்துக் கடலில் தள்ளியபோது நாவுக்கரசரால் அருளிச் செய்யப் பெற்ற தென்பது,

கற்றுணைப் பூட்டியோர்
கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது
நமச்சி வாயவே (1)

எனப் அப்பதிகத் தொடக்கப் பாடலின் அடிகளில் அடிகள் குறிப்பிடுதலால் அறியலாம். சமணர்கள் கல்லோடு பிணித்துத் தம்மைக் கடலில் தள்ளியபோது தாம் திரு ஐந்தெழுத்தினை ஓதிக் கரையேறி உய்ந்த செய்தி,

கல்லி னோடெனைப்
பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக
நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள்வயல்
நீலக் குடியரன்
நல்ல நாமம்
நவிற்றியுய்ந்தே னன்றே. (5. 72: 7)

எனவரும் நீலக்குடிப் பதிகத் திருப்பாட்டில் தெளிவாகக் குறிப்பிட்டிருப்பதைக் கண்டு மகிழலாம்.

திருப்பாதிரிப்புலியூரில் வழிபட்டிருந்த திருநாவுக்கரசருக்குத் திருவதிகை வீரட்டானத்தில் எழுந்தருளியுள்ள பெருமானை இறைஞ்சி மகிழ வேண்டும் என்ற நினைவு

எழுகின்றது. வழியில் திருமாணிக்குழி,[9] திருத்தினை நகர்[10] என்ற தலங்களை வழிபட்டுக்கொண்டு கெடிலநதியைக் கடந்து திருவதிகையை அடைகின்றார். பல்லவன் இழைத்த கொடுமைகளையெல்லாம் இறைவன் திருவருளால் வென்ற நாவுக்கரசரின் வருகையைக்கேள்வியுற்ற திருவதிகைப் பெரு மக்கள் நகரை அலங்கரித்து மங்கல வாத்தியங்கள் முழங்க வாகீசரை எதிர்கொண்டு போற்றுகின்றனர். நாவுக்கரசர் நகரில் புகுந்த கோலத்தைச் சேக்கிழார் பெருமான்,

தூயவெண் ணீறு துதைந்தபொன்
 மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரும்
 சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போல்அன்பு நீர்பொழிகண்ணும்
 பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார்
 புகுந்தனர் வீதியுள்ளே.[11]

என்று காட்டி மகிழ்வர்.

ஆளுடைய அடிகள் (நாவுக்கரசர்) திருவதிகை வீரட்டானத் திருக்கோயிலில் புகுந்து திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளை வணங்குகின்றார். தாம் முன்னர்ச் சமண

---

9. மாணிக்குழி (திருமாணிக்குழி): கடலூரிலிருந்து $3\frac{1}{2}$ கல் தொலைவிலுள்ளது. கடலூரிலிருந்து இத்தலத்திற்குப் போகும் வழியில் திருவஹீந்திரபுரம் என்னும் வைணவத்தலம் உள்ளது. ('தொண்டை நாட்டுத் திருப்பதிகள்'—என்ற நூலில் 'திருவயிந்திபுரத்து தெய்வ நாயகன்' என்ற 14-வது கட்டுரையைப் படித்து தெய்வ நாயகனை அநுபவிக்கலாம்). திருமால் வாமனாவதாரத்தில் (=மாணி) பூசித்ததைச் சம்பந்தரின் 3.77:4 என்ற பாடலால் அறியலாம். (பதிகம் இல்லை)

10. தினைநகர் (தீர்த்தனகிரி) கடலூர்-மயிலாடுதுறை இருப்பூர்தி வழியில் உள்ள ஆலப்பாக்கம் நிலையத்திலிருந்து $5\frac{1}{2}$ கல் தொலைவிலுள்ளது. (பதிகம் இல்லை)

11. பெ.பு: திருநாவுக்-140

சமயத்தில் சார்ந்தொழுகிய காலத்தில் சிவபெருமானைப் போற்றாது இகழ்ந்திருந்த தம் அறியாமைக்குப் பெரிதும் வருந்தும் நிலையில் "வெறிவிரவு கூவிளநல் தொங்கலானை" (6.3) என்ற முதற் குறிப்பினையுடைய செந்தமிழ் மாலையை வீரட்டானத்தெம் பெருமானுக்குச் சூட்டு கின்றார்.

வெறிவிரவு கூவிளநல் தொங்க லானை
 வீரட்டத் தானைவெள் ளேற்றி னானை
பொறியரவி னானைப் புள்ளூர்தி யானை
 பொன்னிறத்தி னானைப் புகழ்தக் கானை
அறிதற் கரியசீர் அம்மான் தன்னை
 அதியரைய மங்கை அமர்ந்தான் தன்னை
எறிகெடிலத் தானை இறைவன் தன்னை
 ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே. (1)

என்ற இப்பதிக முதற்பாடலில் தெய்வக் கொள்கையில் தெளிவு பிறவாத சமணர்களுடன் கூடித் தம் வாணாளை வீணே கழித்த அறியாமையை நினைந்து பெரிதும் மனம் கவல்வதைக் காணலாம்.

உறிமுடித்த குண்டிகைதங் கையில் தூக்கி
 ஊத்தைவாய்ச் சமணர்க்கோர் குண்டாக்க னாய்க்
கறிவிரவு நெய்சோறு கையி லுண்டு
 கண்டார்க்குப் பொல்லாத காட்சி யானேன்
மறிதிரைநீர்ப் பவ்வநஞ் சுண்டான் தன்னை
 மறித்தொருகால் வல்வினையேன் நினைக்க மாட்டேன்
எறிகெடில நாடர் பெருமான் தன்னை
 ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே. (8)

என்ற எட்டாம் திருப்பாடலில் தாம் முன்னாளில் சமண் சமயத்தில் சார்ந்தொழுகியபோது சிவபெருமானை நினையாத எளிமையை எடுத்துக் கூறி இரங்குவதைக் காணலாம். இப்பதிகத்தின் ஒவ்வொரு திருப்பாடலிலும்

"ஏழையேன் நான் பண்டு இகழ்ந்தவாறே" என்று பதி னொரு முறை இரங்கிப் புலம்புவதனால் இஃது "ஏழைத் திருத் தாண்டகம்" என்று வழங்கி வருகின்றது. நாவுக்கரசர் தம் வாழ்நாளின் முற்பகுதியில் சமண சமயத்தைச் சார்ந் தொழுகினார் என்பதற்கும், பின்னர்ச் சிவனருளால் சைவ நெறியை மேற்கொண்டொழுகினார் என்பதற்கும் இத் திருப்பதிகம் அகச் சான்றாக அமைகின்றது.

அரசனது மனமாற்றம்: சமணர்களின் சொற்கேட்டு நாவுக்கரசரைப் பலவாறு துன்புறுத்திய பல்லவ மன்னன் சிந்திக்கத் தொடங்குகின்றான். தான் இழைத்த துன்பங் களையெல்லாம் இறையருளால் வென்றேறிய நாவுக்கரசரின் பெருமை அவனை ஈர்க்கின்றது. தன் பழவினைசுளாகிய பாசம் நீங்கப்பெற்றமையால் அல்லல் நீங்கித் திருவதி கையை அடைந்து நாவுக்கரசரின் திருவடிகளை வணங்கிப் போற்றுகின்றான்; தானும் சிவநெறியை மேற்கொள்ளு கின்றான்.[12] மெய்யுணர்வு கைவரப்பெற்ற காடவனாகிய அம்மன்னன் சமணர் அறிவுறுத்திய நெறி பொய் என்பதை உணர்கின்றான். பாடலிபுரத்திலுள்ள பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துத் தள்ளி அவற்றிலுள்ள கற்களைக் கொணர்ந்து திருவதிகையில் சிவபெருமானுக்கு 'குணதர வீச்சரம்' என்னும் திருக்கோயிலை எழுப்புகின்றான்.[13] இப் பல்லவ மன்னனே காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டை ஆண்ட (கி.பி. 600-625) மகேந்திரவர்மப் பல்லவன் என்பது வரலாற்று ஆய்வாளரின் துணிபாகும்.

---

12. பெ.பு: திருநாவுக்-145
13. பெ.பு: திருநாவுக்-146

# 5. திருவதிகை ஈடுபாடு

திருநாவுக்கரசரின் திருவதிகை ஈடுபாடு தனிப்பெருமை வாய்ந்தது. இதற்குக் காரணங்கள் உள்ளன. திருவதிகை வீரட்டானம் சிவபிரான் வீரச் செயல்புரிந்த எட்டுத் திருத்தலங்களுள் ஒன்று. அது மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றினாலும் சிறப்புடையது. இந்த மூன்றும் பக்தர்கட்கு முக்கியமானவை என்பதை,

மூர்த்திதலம் தீர்த்தம்
முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே.[1]

என்று தாயுமானவர் குறிப்பிட்டு விளக்கியுள்ளார். ஆகவே, திலகவதியார் அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு தவம் இயற்றினார் என்று கருதலாம். இவர் திரு வீரட்டானேசுவரரின் திருவடியில் வணங்கி மாசில்லாத் திருநீறும் கண்டிகையும் ஆன சிவச்சின்னம் தாங்கிப் பொங்கியெழும் அன்பு மேலெழத் தம் கைகளால் இறைவனை அணுகச் செய்யும் திருப்பணிகள் பல புரிந்து வருகின்றார். பொழுது புலர்வதற்கு முன்னுள்ள வைகறைப் பொழுதில் கோயிலின் முன் திருவலகிடும் பணியாற்றுகின்றார். ஈன்று

---

1. தா. பா. பராபரக்கண்ணி-156

பத்து நாட்கள் கழிந்ததும், மலடு, சினை முதலிய குறை யற்ற நலம் நிறைந்த பசுவின் சாணத்தால் இடைவெளியோ புள்ளியோ தென்படாமல் மெழுகிடுதல், நந்தவனத்தி லுள்ள நறுமலர்களைக் கொய்து மாலையாக்கிக் கொடுத் தல், இறைவனின் திருநாமங்களை ஏத்துதல், திருவிளக்கிடு தல் போன்றவை இவர் மேற்கொண்ட பணிகள்.

திருவதிகை அக்காலத்தில் கல்வி நலன் சான்ற பெரியோர்கள் வாழ்ந்த நகரமாகத் திகழ்கின்றது. சைவ சமயப் பெரியார்களைத் தவிர சமணரும் பௌத்தரும் தத்தம் சமய நெறிகளைப் பரப்பிக் கொண்டிருக்கின்றனர். 'அரசன் எவ்வழியோ குடிகளும் அவ்வழி' என்ற உண்மை எக்காலத்திற்கும் பொருந்தும் பொன் மொழியன்றோ? காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த சமண வேந்தன் மகேந்திரவர்மனின் ஆட்சி தொண்டை மண்டலம் முழுவதும் பரவியிருந்ததால் சமணரின் செல்வாக்கும் சமண நெறியின் தாக்கமும் தலை தூக்கி யிருந்த காலம் அது. நீதி நூற்பயிற்சியும், தமிழ் இலக்கணத் தில் ஆழ்ந்த புலமையும், அளவியல் (தர்க்க) வாதத்தில் மிக்க திறமையும் வாய்ந்தவர்கள் சமணர்கள். ஆகவே, கல்வித்துறையிலும் சாத்திர ஆர்வத்திலும் விருப்பமுள்ள மருள் நீக்கியார் சமணசமயப் பெரியார்கள் கூடும் இடங் களிலெல்லாம் கலந்து அவர்தம் சமயச் சொற் பொழிவு களைக் கேட்கும் வாய்ப்புகளை அதிகம் பெற்றிருந்தமை யால் இவர் மனம் சமண நெறிகளில் செல்லலாகின்றது. வாழ்க்கை நெறிகளில் பெற்றோர்களின் மறைவும் திருவதிகைப் பெருமானின் சேவையிலீடுபட்டுத் தம்பியைக் கவனிக்க முடியாத திலகவதியாரின் நிலையும் மருள் நீக்கியாருக்கு வேறு போக்கில்லாமல் அறிவுப்பசி தீர்க்கச் சமணர் வழியே பொருத்தமாகவும் அமைகின்றது. மதி நுட்பமுள்ள ஓர் இளைஞன் தமது நெறியில் பேரார்வம் காட்டுவதைக் கண்ட சமணத் துறவிகள் விரைவில் அவரைச் சிறந்த புலவராக்கித் தருமசேனர் என்ற பெயரும்

நல்கி, மேன்மைதங்கிய ஆசாரியபட்டமும் வழங்கி பெரு மதிப்பு தந்துவிடுகின்றனர். தருமசேனர் தம் வாழ்க்கையைப் பெரும்பாலும், அண்மையிலுள்ள பாடலிபுரத்தில்'* கழிக்கின்றார்.

இங்ஙனம் தமது சமய மாற்றத்திற்கு வாய்ப்பளித்த திருவதிகை மீண்டும் இறைவனால் தடுத்தாட் கொள்ளப் பெறுவதற்கும் சிறந்த இடமாகவும் அமைகின்றது. தம்பியின் நிலையை அறிந்த தமக்கையார் தாமும் ஒரு விதத்தில் அதற்குக் காரணம் என்பதையும் உணர்கின்றார். தம்பியின் வாழ்வுக்குத் துணை நிற்காமல் கோயில் பணியே தஞ்சமென்று கருதினமைதான் தம்பி பட்டிமேய்ந் தமைக்குக் காரணமாகியது என்பது அவருக்குத் தெளிவாகப் புலனாகின்றது. அருமைத் தம்பி திரும்பவும் சைவநெறிக்கு வரவேண்டுமென்று திருவதிகைப் பெருமானை இரவும் பகலும் இடைவிடாது இறைஞ்சுகின்றார். சூலை நோய் தந்து தம்மிடம் வருமாறு செய்த இறைவன் திருவருட் செயலை வியந்து போற்றுகின்றார். இக்காரணங்களால் நாவுக்கரசர் திருவதிகைப் பெருமான் மீது அதிக ஈடுபாடு காட்டுகின்றார். இப்பெருமானைப் பதினாறு செந்தமிழ்ப் பதிகங்களால் பாடிப் பரவிப் போற்றுகின்றார்.

'கூற்றாயினவாறு' (6. 98), 'சுண்ண வெண்' (4. 2), 'வெறிவிரவு' (6. 3) என்ற பதிகங்களின் ஒவ்வொரு பாடலும் முன்னரே காட்டப்பெற்றது; இவற்றுள் சிலவற்றையும் எஞ்சிய பதின்மூன்று பதிகங்களின் ஒவ்வொரு பாடலையும் ஈண்டுக் காட்டுவேன்.

சலம்பூ வொடுதூ பமறந் தறியேன்;
தமிழோ டிசையா டன்மறந் தறியேன்;
நலந்தீங் கிலுமுன் னைமறந் தறியேன்;
உன்னா மமென்னா வின்மறந் தறியேன்;

---

*பாடலிபுரம் என்பது இக்காலத்தில் உள்ள கடலூர்.

உலந்தார் தலையிற் பலிகொண் டுழல்வா
யுடலுள் ளுறுகு லைதவிர்த் தருளாய்;
அலந்தேன் அடியேன் அதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. (6. 98: 6) 4.116

'புனிதநீர், பூவோடு தூபமும், தமிழோடு இசை பாடலும் மறந்தறியாத நான் நலந்தீங்கிலும் உன் நாமத்தை மறந்தறியேன்' என்று தமக்கும் இறைவனுக்கும் இடையேயுள்ள தொடர்பினையும், கடமையில் தவறாமை யையும் சுட்டிக் காட்டித் தன் சூலை நோயைத் தீர்த் தருளுமாறு இறைஞ்சுகின்றார்.

கட்டவிழ்த்து விடப்பட்ட யானை திருநாவுக்கரசரை நோக்கி வரும்போது பாடிய பதிகத்தில் (4. 2),

மடமான் மறிபொற் கலையும் மழுப்பாம்
பொருகையில் வீணை
குடமால் வரையதிண் டோளுங்
குனிசிலைக் கூத்தின் பயில்வும்
இடமா றழுவிய பாக
மிருநில னேற்ற சுவடும்
தடமார் கெடிலப் புனலுமுடையார்
ஒருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை. (4. 2: 4)

என்பது நான்காம் பாடல்: ''சிவபெருமானின் அடியார் நாம். நாம் அஞ்சுவதற்கு யாதொன்றும் இல்லை; எம்மை எதிர் நோக்கி அஞ்ச வருவதற்கும் ஒன்றும் இல்லை'' என்று தம் பக்தியின் நெஞ்சுரத்தைக் காட்டுகின்றார்.

''முளைக்கதிர்'' (4. 10) என்ற முதற்குறிப்புடைய பதிகத்தில்,

கிடந்தபாம் பருகுகண் டரிவை பேதுறக்
கிடந்தபாம் பவளையோர் மயிலென் றையுறக்
கிடந்தநீர்ச் சடைமிசைப் பிறையும் ஏங்கவே
கிடந்துதா னகுதலைக் கெடில வாணரே. (8)

என்பது எட்டாவது பாடல். இதில் 'சிவபெருமானின் கழுத்தில் கிடக்கும் பாம்பைக் கண்டு அருகிலுள்ள பார்வதி தேவியார் அஞ்ச, பாம்போ தேவியை மயிலென்று எண்ணி மருள்கின்றது; பாம்பைக் கண்டு பிறையும் ஏங்குகின்றது; நக்கபிரான் இதனைக் கண்டு நகுகின்றார்' என்கின்றார் நாவுக்கரசர். கற்பனை நயம் நம் கருத்தைக் கவர்கின்றது. "இரும்பு கொப்பளித்த" (4. 24) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்த் திருநேரிசை மாலையில்,

தொண்டை கொப் பளித்த செவ்வாய்
துடியிடைப் பரவை யல்குற்
கொண்டைகொப் பளித்த கோதைக்
கோல்வளை பாக மாக
வண்டுகொப் பளித்த தீந்தேன்
வரிகயல் பருகி மாந்தக்
கெண்டைகொப் பளித்த தெண்ணீர்க்
கெடிலவீ ரட்ட னாரே. (10)

என்பது பத்தாம் பாடல். இப்பதிகத்தின் பத்துப் பாடல்களிலும் 'கொப்பளித்தல்' என்னும் சொல்லைச் சொற்பொருட்பின் வருநிலை அணியாக அமைத்துப் பாடுதலால் இது 'கொப்பளித்த திரு நேரிசை' என்று வழங்குகின்றது. பாடல்களைப் பாடுங்கால் நம்முடைய பக்தியுணர்வும், கொப்பளித்து நிற்றலைக் காணலாம்.

"வெண்ணிலா மதியம்" (4. 25) என்ற செந்தமிழ்த் திரு நேரிசை மாலையில்,

எல்லியும் பகலு மெல்லாம்
துஞ்சுவோர்க் கொருவர் வந்து
புல்லிய மனத்துக் கோயில்
புக்கனர் காமன் என்னும்
வில்லிஐங் கணையி னானை
வெந்துக நோக்கி யிட்டார்
அல்லியம் பழன வேலி
அதிகைவீ ரட்ட னாரே. (8)

என்பது எட்டாவது தமிழ் மணம் கமழும் வாடா நறுமலர். இதில் காமனை எரித்த வீரச் செயல் குறிப்பிடப்பெறு கின்றது. மூன்று, ஐந்து, ஆறாம் பாடல்களில் யானைத் தோலை உரித்துப் போர்த்த வீரச்செயல் குறிப்பிடப் பெறுகின்றது. வீரட்டத் தலமாதலால் வீரச்செயல்களை விதந்தோது கின்றார் போலும். இது நிமலனை நித்தமும் விதிப்படி நினையுமாறு நெஞ்சுக்கு அறிவுறுத்தும் பதிகம்.

"நம்பனே எங்கள்" (4. 26) என்ற செந்தமிழ்த் திரு நேரிசைப் பதிகத்தில்,

அஞ்சினால் இயற்றப் பட்ட
ஆக்கைபெற் றதனுள் வாழும்
அஞ்சினால் அடர்க்கப் பட்டிங்
குழிதரும் ஆத னேனை
அஞ்சினால் உய்க்கும் வண்ணம்
காட்டினாய்க் கச்சந் தீர்ந்தேன்;
அஞ்சினால் பொலிந்த சென்னி
அதிகைவீ ரட்ட னாரே. (5)[2]

என்பது ஐந்தாம் பாசுரம். பாடல்கள் யாவும் பக்திச் சுவை கொப்புளிக்கச் செய்பவை.

---

2. முதலடியில் அஞ்சு என்பது ஐம்பூதங்கள்; இரண்டாம் அடியில் அஞ்சு என்பது ஐம்புலன்கள்; மூன்றாம் அடியில் அஞ்சு என்பது 'நமசிவாய' என்ற ஐந்தெழுத்து மந்திரம்; நான்காம் அடியில் அஞ்சு என்பது ஐந்து தலைகள் (சிவபெருமானுக்கு ஐந்து தலைகள் உண்டு என்பது நாம் அறிந்ததே).

''மடங்கினார்'' (4. 27) என்ற திருநேரிசைப் பதிகத்தில்,

காணிலார் கருத்தில் வாரார்
திருத்தலார் பொருத்த லாகார்
ஏணிலார் இறப்பும் இல்லார்
பிறப்பிலார் துறக்க லாகார்
நாணிலார் ஐவ ரோடும்;
இட்டெனை விரவி வைத்தார்
ஆணலார் பெண்ணும் அல்லார்
அதிகைவீ ரட்ட னாரே. (8)

என்பது எட்டாவது பாடல். இதில் ஒன்பதாவது பாடல் காணப் பெறவில்லை. இதிலுள்ள பாடல்கள் யாவும் பாடிப் பரவசத்துடன் அநுபவிக்க வேண்டியவை.

'முன்பெலாம்' (4. 28) என்ற முதற்குறிப்பினையுடைய திருநேரிசைப் பதிகத்தில்,

மந்திர முள்ள தாக
மறிகடல் எழுநெய் யாக
இந்திரன் வேள்வித் தீயில்
எழுந்ததோர் கொழுந்தின் வண்ணம்
சிந்திர மாக நோக்கித்
தெருட்டுவார் தெருட்ட வந்து
கந்திரம் முரலும் சோலைக்
கானலங் கெடிலத் தாரே. (5)

என்பது ஐந்தாவது பாடல். இதில் 6,7,8,9 ஆகிய நான்கு பாடல்கள் காணப்பெறவில்லை.

'மாசில் ஒள்வாள்' (4.104) என்பது திருவிருத்த செந் தமிழ்ப் பதிகம். இதில்,

மாசிலொள் வாள்மதிபோன் மறியும்
மணிநீர்த் திரைத்தொகு

ஊசலையாடி யங்கொண் சிறையன்னம்
உறங்க லுற்றால்
பாசறைநிலம் பருகிய வண்டு
பண்பாடல் கண்டு
வீசுங்கெடில வடக ரைத்தே
எந்தைவீ ரட்டமே. (1)

பைங்கால் தவளைபறை கொட்டப்
பாசிலை நீர்ப்படுகர்
அங்காற் குவளைமேலா வியுயிர்ப்ப
அவரருகு உலவும்
செங்காற் குருகிவை சேரும்
செறிகெடிலக் கரைத்தே
வெங்காற் குருசிலை வீரன்அருள்
வைத்தவீ ரட்டமே. (2)

*என்பன முதல் இரண்டு பாடல்கள். இவற்றில் இயற்கை வளம் அழகாகக் காட்டப்பெறுகின்றது. "கெடில நதியில் அலைகள் மின்னி வீசுகின்றன. அலைகளின் ஊசலாட்டில் அன்னம் உறங்குகின்றது. பசிய இலையுடைய நீல மலரி லிருந்து வண்டுகள் பண்பாடுகின்றன. அருகில் செங்காற் குருகு கரையில் வந்து சேர்கின்றது" என்கின்றார். 8,9,10 ஆம் பாடல்கள் இப்பதிகத்தில் காணப்பெறவில்லை.*

'கோணன் மாமதி' (5.53) *என்ற திருக்குறுந்தொகைச் செந்தமிழ் மாலையில்,*

கோணன் மாமதி சூடியோர் கோவணம்
நாணில் வாழ்க்கை நயந்தும் பயனிலை
பாணில் வீணை பயின்றவன் வீரட்டம்
காணி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. (1)

*என்பது முதல் பாடல். "வளைந்த பிறைசூடி, கோவணம் அணிந்து விரும்பியும் பயனற்ற நாணமில்லாத வாழ்க்கை யுடையவனெனினும், வீணையில் பாடல் பயின்ற*

சிவபெருமான் உறையும் திருவதிகை வீரட்டத்தைக் கண்டு தொழுதல்லது என் கண்கள் உறக்கம் கொள்ளுமோ?'' என்கின்றார். இதுபோலவே எல்லாப் பாடல்களுமே ''கண்துயில் கொள்ளுமோ?'' என்னும் ஈற்றடியுடன் இறுகின்றன.

''எட்டு நாண் மலர்'' (5.54) என்ற குறுந்தொகைப் பதிகமும் இத் திருத்தலம்பற்றியதே.

உரைசெய் நூல்வழி ஒண்மலர் எட்டிடத்
திரைகள் போல்வரி வல்வினைத தீர்ப்பரால்
வரைகள் வந்திழி யுங்கெடி லக்கரை
விரைகள் சூழ்ந்தழ காயவீ ரட்டரே. (7)

என்பது ஏழாவது திருப்பாடல். எட்டு மலர்களைக் கொண்டு ஈசனை வழிபட்டால் எல்லா நலன்களையும் பெறலாம் என்பதை எல்லாப் பாடல்களுமே தெரிவிக்கின்றன.

''சந்திரனை மாகங்கை'' (6.4) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்த் திருத்தாண்டக மாலையில் பத்தாவது பாடல் இலக்கிய நயம் செறிந்தது.

எழுந்ததிரை நதித்திவலை நனைந்த திங்கள்
இளநிலாத் திகழ்கின்ற வளர்ச டையனே
கொழும்பவளச் செங்கனிவாய்க் காமக் கோட்டி
கொங்கையினை அமர்பொருது கோலங் கொண்ட
தழும்புளவேல் வரைமார்பில் வெண்நூ லுண்டே
சாந்தமொடு சந்தனத்தின் அளறு தங்கி
அழுந்தியசெந் திருவுருவில் வெண்ணீற் றானே
அவனாகில் அதிகைவீ ரட்ட னாரே. (10)

கங்கையின் அலைத் துளிகளில் நனைந்த இளந்திங்களைச் சூடிய வளர்சடையன் பவளம் போன்ற செங்கனி வாயினையுடைய உமையவளின் தனத் தழும்புகளும் வெண்ணீறும் சந்தனமும் உடைய மார்பினன் எவனோ அவனே அதிக

வீரட்டன் என்பது இப்பாடலின் கருத்தாகும்; சிவபெருமானின் திருவடையாளங்களை ஒவ்வொன்றாக எடுத்துச் சொல்லி இவ்வடையாளங்கள் உடையார் ஒருவராகில் அவர் திருவதிகை வீரட்டானேசுவரரே என்று கூறுவது இப்பதிகப் பாடல்தோறும் கருதாக இருத்தலால் இஃது அடையாளத் திருத்தாண்டகம் என்னும் பெயர் பெறுகின்றது.

''எல்லாம் சிவன்'' (6.5) என்ற முதல் திருக்குறிப்புடைய திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையில்,

முக்கணா போற்றி முதல்வா போற்றி
முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி
தக்கணா போற்றி தருமா போற்றி
தத்துவனே போற்றி என்தாதாய் போற்றி
தொக்கணா வென்றிருவர் தோள்கை கூப்பத்
துளங்கா தெரிசுடராய் நின்றாய் போற்றி
எக்கண்ணும் கண்ணிலேன் எந்தாய் போற்றி
எரிகெடில வீரட்டத் தீசா போற்றி. (10)

என்பது பத்தாவது வாடாத தமிழ்மணங் கமழும் நறுமலர். இப்பக்திப் பாடல்கள் அனைத்தும 'போற்றி போற்றி' என்று பன் முறையாக அருளச் செய்யப்பெற்றிருத்தலால் இது போற்றித்திருத்தாண்டகம் என்ற பெயர் பெறுகின்றது.

''அரவணையான்'' (6.6) என்ற முதற்குறிப்பையுடைய திருத்தாண்டகப்பதிகத்தில்,

அணியனவும் சேயனவும் அல்லாவடி
அடியார்கட் காரமு மாயவடி
பணிபவர்க்குப் பாங்காக வல்லடி
பற்றற்றார் பற்றும் பவளவடி
மணியடி பொன்னடி மாண்பாமடி
மருந்தாய்ப் பிணிதீர்க்க வல்லவடி
தணிபாடு தண்கெடில நாடன்னடி
தகைசார் வீரட்டத் தலைவன்னடி. (9)

என்பது ஒன்பதாவது திருப்பாடல். இத்திருத்தாண்டகப் பாடல்கள் எல்லாவற்றிலும் இறைவன் திருவடியே சிறப்பித்துப் பாடப்பெற்றிருப்பதால் இது திருவடித் தாண்டகம் எனப் பெயர் பெறுகின்றது.

'செல்வப்புனல்' (6. 7) என்று தொடங்கும் திருத் தாண்டக மாலையில்,

சிறையார் புனற்கெடில வீரட்டமும்
திருப்பாதிரிப் புலியூர் திருவாமாத்தூர்
துறையார் வனமுனிக ளேத்தநின்ற
சோற்றுத்துறை துருத்தி நெய்த்தான
அறையார் புனலொழுகு காவிரிசூழ்
ஐயாற் றமுதன்பழன நல்ல
கறையார் பொழில்புடைசூழ் காணப்பேரும்
கழுக்குன்றும் தம்முடைய காப்புக்களே. (3)

என்பது மூன்றாம் பாடல். இறைவனுடைய காப்புக்கள் (இடங்கள்) இவை இவையென எல்லாப் பாடல்களும் (பன்னிரண்டு) முடிவதால் இப்பதிகம் 'காப்புத் தாண்டகம்' எனப் பெயரேற்கின்றது. தலந்தோறும் அப்பர் பெருமான் தலப்பயணத்திற்குப் புறப்படுமுன், இப்பதிகத்தைப் பாடுவது, தாம் செல்லவிருக்கும் தலங்களனைத்தையும் எண்ணிப் பார்த்துத் திட்டமிட்டுக் கொள்வதுபோல் அமைந்துள்ளது. இவற்றுள் சில வைப்புத் தலங்கள். இங்ஙனம் திருவதிகையில் திருப்பதிகங்கள் பாடிச் சில நாட்கள் தங்குகின்றார் வாகீசப் பெருமான்,

# 6. சோழநாட்டுத் திருத்தலப் பயணம் - 1

சமணர்களின் சூழ்ச்சிச் செயல்களைச் சிவபெருமான் திருவருளால் வென்று திருவீரட்டானத் திறைவருக்குத் தொண்டு புரிந்துவரும் நாட்களில் கயிலைநாதன் எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் பலவற்றையும் சேவிக்கவேண்டும் என்ற பேரவா திருநாவுக்கரசரின் சிந்தையில் எழுகின்றது. சோழநாட்டுத் திருத்தலங்களின் தொகை 190. இவற்றைப் பல சுற்றுகளில் சேவிக்கின்றார்.

முதல் சுற்று : திருவதிகையிலிருந்து முண்டீச்சரம்,[1] என்னும் திருத்தலத்திற்கு வருகின்றார். "ஆர்த்தான் காண்" (6.85) என்ற முதற் குறிப்பினையுடைய திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையைப் பாடிப் போற்றுகின்றார் இத் தலத்து இறைவனை.

நம்பன்காண்; கரைவிடையொன் றேறி னான்காண்;
நாதன்காண்; கீதத்தை நவிற்றி னான்காண்;
இன்பன்காண்; இமையா முக்கண்ணி னான்காண்;
ஏசற்று மனமுருகும் அடியார் தங்கட்(கு)

---

1. முண்டீச்சரம் (கிராமம்) : திருவெண்ணெய் நல்லூர் ரோடு என்ற நிலையத்திலிருந்து (விழுப்புரம் விருத்தாசலம் இருப்பூர்தி வழி) $\frac{3}{4}$ கல் தொலைவு. பேருந்து வழி. விழுப்புரம், விருத்தாசலம் என்ற ஊர்களிலிருந்தும் இத்தலத்திற்கு வரலாம். திருவெண்ணெய் நல்லூருக்கு அருகில் உள்ளது.

அன்பன்காண்; ஆரழல தாடி னான்காண்;
அவனிவனென்றி யாவர்க்கும் அறிய வொண்ணாச்
செம்பொன்காண்; திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன்காண்; அவனென் சிந்தை யானே. (3)

என்பது மூன்றாவது தமிழ்மணங் கமழும் வாடா நறுமலர். இப்பதிகத்தில் 9-வது பாடல் காணப்பெறவில்லை.

அடுத்து, முண்டீச்சரத்து ஈசனிடம் விடைபெற்றுக் கொண்டு திருவெண்ணெய் நல்லூர்[2] வருகின்றார். திருவருட்டுறை இறைவனை வழிபடுகின்றார் (பதிகம் இல்லை). அடுத்துத் திருவாமாத்தூர்[3] வருகின்றார். இத்தலத்து இறைவனை இரண்டு பதிகங்கள் பாடி வழிபடுகின்றார். "மாமாத்தாகிய" (5.44) என்று தொடங்கும் பதிகத்தில்,

---

2. வெண்ணெய் நல்லூர் (திருவெண்ணெய் நல்லூர்) விழுப்புரம் - விருத்தாசலம் இருப்பூர்தி வழியில் திருவெண்ணெய் நல்லூர் ரோடு என்ற நிலையத்திலிருந்து 4 கல் தொலைவிலுள்ளது. கடலூர் - திருக்கோவலூர் சாலையிலுள்ளது. உமாதேவியார் வழிபட்டமையால் 'அருட்டுறை' என்ற பெயரேற்றது. இத்திருத்தலம் சுந்தரமூர்த்தியின் திருமணத்தைத் தடுத்து ஆட்கொண்ட திருத்தலம். மெய்கண்டார் சிவஞான போதம் அருளிச் செய்ததும், கம்பநாடன் இராமகாதையைப் பாடியதும் இத்தலத்தில் நிகழ்ந்தவை. விருத்த வேதியனாக வந்த இறைவன சுந்தரர் வழக்கை வென்ற இடம் 'வழக்கு வென்ற அம்பலம்' என்று கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள இடம் திருக்கோபுர வாயிலுக் கெதிரிலுள்ள 100 கால் மண்டபமாகும்.

3. ஆமாத்தூர் (திருவாமாத்தூர்) விழுப்புரத்திலிருந்து 4 கல் தொலைவிலுள்ளது. 16 குருடர்கள் நாடோறும் தேவாரம் ஓதவும் இருவர் அவர்களைக் கைபிடித்து நடத்திச் செல்லவும் திட்டம் செய்யப்பெற்றிருந்ததைக் கல்வெட்டொன்று கூறுகின்றது. இத்தலப் பாசுரங்கள் சிலவற்றில் 'அழகியரே' என்ற பெயர் காணப்பெறுவதால் கல்வெட்டுகளிலும் 'அழகிய நாயனார்' என்ற பெயர் காணப்படுகின்றது.

பஞ்ச பூத வலையிற் படுவதற்
கஞ்சி நானும் ஆமாத்தூர் அழகனை
நெஞ்சி னால்நினைத் தேன்நினை வெய்தலும்
வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே. (4)

என்பது நான்காவது பாடலாகும்.

''வண்ணங்கள் தாம்பாடி'' (6.9) என்று தொடங்கும் திருத்தாண்டகத்தில்,

ஒன்றாலும் குறைவில்லை ஊர்தி வெள்ளேறு
ஒற்றியூர் உம்மூரே, உணரக் கூறீர்?
நின்றுதான் என்செய்வீர் போவீ ராகில்
நெற்றிமேற் கண்காட்டி நிறையுங் கொண்டீர்
என்றுந்தான் இவ்வகையே இடர்செய் கின்றீர்
இருக்குமூர் இனியறிந் தோமே கம்பமோ?
அன்றித்தான் போகின்றீர் அடிக ளெம்மோ
டழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. (8)

என்பது எட்டாவது பாடல். இந்த இரண்டு பதிகப் பாடல்களும் படித்து அநுபவிக்க வேண்டியவை.

அடுத்து திருக்கோவலூர்[4] வருகின்றார். சனவரியில் வந்தால் ஆற்றில் சிறிது நீர் போகும். நடந்தே கடக்கலாம். ''செத்தையேன்'' (4-69) என்ற முதற் குறிப்பினையுடைய திருப்பதிகம்பாடி கோவல் வீரட்டனாரை வழிபடுகின்றார்.

---

4. கோவலூர் வீரட்டம் (கீழூர்) விழுப்புரம்-காட்பாடி இருப்பூர்திப் பாதையில் திருக்கோவலூர் நிலையத்திலிருந்து 1 கல் தொலைவிலுள்ளது. பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ளது. அந்தகாசுரனைச் சங்கரித்த வீரட்டம். மெய்ப் பொருள் நாயனார் அரசு புரிந்து முக்தி அடைந்த தலம். நிலையத்திலிருந்து பேருந்து வசதியுண்டு. திருக்கோவலூர் 'பாதிநாள் இரவில், மூவரும் நெருக்கி (பொய்கையார், பூதத்தார், பேயார்) மொழி விளக்கேற்றி முகுந்தனைத் தொழுத இடம். இவ்வூரைத் தலைநகராகக் கொண்டு மலையமான் திருமுடிக்காரி ஆண்டு வந்தான்.

படைகள்போல் வினைகள் வந்து
பற்றிஎன் பக்க னின்றும்
விடகிலா ஆத லாலே
விகிர்தனை விரும்பி ஏத்தும்
இடையிலேன் என்செய் தேன்நான்
இரப்பவர் தங்கட் கென்றும்
கொடையிலேன் கொள்வ தேநான்
கோவல்வீ ரட்ட னாரே? (7)

என்பது ஏழாவது திருப்பாடல். தமக்கு எந்தவிதமான நியமம் இல்லையென்றும், ஐம்புலன்கள் செய்யும் கொடுமைகளைத் தாங்க முடியவில்லையென்றும் நொந்து பேசுகின்றார் அடிகள். பாடல்கள் படிக்கப் படிக்கப் பாடிய வாய் தேனூறும்படியாக உள்ளது.

கோவல் வீரட்டனாரிடம் விடைபெற்றுக்கொண்டு **பெண்ணாகடம்**[5] வருகின்றார். 'பொன்னார் திருவடி' (4.109) என்ற திருப்பதிகத்தால் வழிபடுகின்றார். தூங்கானை மாடம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைத் தொழுது, "பெருமானே, புன்மைமிக்க நெறியாகிய சமண் சமயத்தில் தொடக்குண்டு வருந்திய இவ்வுடம்புடனே இனி உயிர் வாழ்ந்திருக்கத் தரியேன். அடியேன் இவ்வுடம்பினைப் பொறுத்திருப்

---

5. பெண்ணாகடம் (பெண்ணாடம்) திருச்சி - விருத்தாசலம் இருப்பூர்தி வழியில் பெண்ணாடம் என்ற நிலையத்திலிருந்து 1 கல் தொலைவு. தலப் பெயர் 'கடந்தை' என்றும், ஆலயப் பெயர் 'தூங்கானை மாடம்' என்றும் வழங்கும். கலிக்கம்ப நாயனார் வாழ்ந்த தலம். அப்பர் பெருமானுக்கு சூலக் குறியும், இடபக் குறியும் பொறிக்கப் பெற்ற தலம். அச்சுதகளப்பாளர் என்ற வேளாளர் திருவெண்காட்டு முக்குள நீராடி வழிபாடு செய்து 'மெய் கண்டார்' என்ற மகனைப் பெற்ற தலம். மெய்கண்டார் சிவஞான போதம் அருளிச்செய்து திருக்கயிலாய பரம்பரையைத் தமிழ்நாட்டில் தாபித்த சந்தான முதற்குரவர்.

பதற்கு இசைவாக நின்னுடைய சூலமும் இடபமும் ஆகிய இலச்சினையை என்மேல் பொறித்தருளவேண்டும்'' என்று விண்ணப்பிக்கின்றார்.

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு
விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண்
டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென
மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை
மாடச் சுடர்க்கொழுந்தே. (1)

கடவுந் திகிரி கடவா
தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத்
தாய் பனி மால்வரைபோல்
இடவம் பொறித்தென்னை ஏன்றுகொள்
ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவும் கடந்தையுள் தூங்கானை
மாடத்தெந் தத்துவனே. (10)

என்ற திருவிருத்தங்களில் இந்த விண்ணப்பத்தைக் கண்டு மகிழலாம். இதனைப் பாடியவுடனே இறைவன் அருளால் சிவபூதம் ஒன்று அருகிலுள்ளார் எவரும் அறியாதபடி அங்குத் தோன்றி திருநாவுக்கரசரின் திருத்தோள்களில் மூவிலைச் சூலமாகிய இலச்சினையை இடப இலச்சினையுடன் பொறித்துச் செல்லுகின்றது. இதனையுணர்ந்த நாவுக்கரசர் மனமகிழ்ந்து சிவபெருமான் திருவருளை நினைந்து கண்ணீர் சொரிய நிலமிசை வீழ்ந்தெழுகின்றார்.

தூங்கானை மாடத் தெம்பெருமானிடம் விடை பெற்றுக்கொண்டு **நெல்வாயில் அரத்துறை**[6] என்ற திருத் தலத்தை அடைகின்றார். ''கடவுளை'' (5:3) என்ற முதற் குறிப்பினையுடைய திருநேரிசைப் பதிகம் பாடி அரத்துறை இறைவனைப் போற்றுகின்றார்.

**கரும்பொப் பானைக் கரும்பினிற் கட்டியை**
**விரும்பொப்பானை விண்ணோரும் அறிகிலா**
**அரும்பொப் பானை அரத்துறை மேவிய**
**சுரும்பொப் பானைக் கண்டீர் நாம் தொழுவதே. (2)**

என்பது இத் திருப்பதிகத்தின் இரண்டாவது பாடல்.

நெல்வாயில் அரத்துறை ஈசனிடம் விடை பெற்றுக் கொண்டு **முதுகுன்றம்**[7] வருகின்றார் வாகீசப் பெருமான்.

---

6. **நெல்வாயில் அரத்துறை:** பெண்ணாடம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 4 கல் தொலைவு. நிவா என்னும் வெள் ளாற்றங் கரையிலுள்ளது. சம்பந்தருக்கு முத்துச் சிவிகை, குடைசின்னங்கள் சிவபெருமானால் தரப்பெற்ற அற்புதத் தலம்.

7. **முதுகுன்றம்** (விருத்தாசலம்): விருத்தாசலம் டவுன் ரோடு என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து ½ கல் தொலைவு. கோயில் சில அடிகளே உயரமுள்ள கற்பாறை யின் மீதுள்ளது. இதற்கே பழமலை (விருத்தாசலம்) என்று பெயர். தல விநாயகர் (ஆழத்துப் பிள்ளையார்) பலபடிகள் இறங்கிச் சென்று சேரும் பள்ளமான இடத்தி லுள்ளார். இங்கிருந்து தண்ணீர் வெளியே செல்ல வழி உள்ளது. திருக்கோயிலுக்கெதிரே மணிமுத்தாறு. சுந்தரர் இத்தலத்தில் பதிகம்பாடி 12000 பொன்பெற்று இந்த ஆற்றி லிட்டு ஆரூர்க் குளத்தில் எடுத்தார். காசியில் இறந்தால் முக்தி என்பதுபோல், இத் தலத்தில் இறத்தாலும் சாரூப முக்தி கிடைக்கும் என்று கந்தபுராணம் கூறுகின்றது (வழி நடைப் படலம் காண்க.) துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் முதலிய பெரியோர்கள் இத்தலத்தில் பெரிதும் ஈடுபட்டவர்கள். மாசி மகத் திருவிழாவின் 6-ஆம் நாள் பகலில் நடைபெறும் இடப உற்சவம் புகழ்பெற்றது. காசியிலும் வீசம்பெரியதால் 'விருத்தகாசி' என்று இத்தலம் கூறப் பெறுவதுண்டு.

''கருமணியை''(6.68) எனத் தொடங்கும் திருத்தாண்டகம் பாடி வழிபடுகின்றார்.

எத்திசையும் வானவர்கள் தொழநின் றானை
    ஏறூர்ந்த பெம்மானை எம்மான் என்று
பக்தனாய்ப் பணிந்து அடியேன் தன்னைப் பன்னாள்
    பாமாலை பாடப் பயில்வித் தானை
முத்தினை என்மணியை மாணிக் கத்தை
    முளைத்தெழுந்த செம்பவளக் கொழுந்தொப் பானை
சித்தனைஎன் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
    தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. (3)

என்பது இப்பதிகத்தின் மூன்றாவது தாண்டகம். பாடல் தோறும் 'தீவினையேன் அறியாதே திகைத்தவாறே' என வரும் தொடர் அப்பர் பெருமானின் மனநிலையைக் காட்டி நம்மை நெகிழ வைக்கின்றது.

பழமலை நாதரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு கீழ்த்திசை நோக்கித் திரும்பி நிவாநதியாகிய வெள்ளாற்றங் கரை வழியே 'ஊனாலும் உயிராலும் உள்ள பயன் கொள நினைந்து' எல்லையில்லாச் செல்வம் நிறைந்த திருத் தில்லையை நோக்கி வருகின்றார். தில்லைக்கு வரும் வழி யையும் தில்லைச் சூழ்நிலையையும் அற்புதமாக வருணித்துக் காட்டுவார் சேக்கிழார் பெருமான்.[8] தில்லைப்பதியின் மேலைக் கோபுர வாயில் வழியாகச் சிவமே நிலவும் திருவீதி யைத் தொழுது வலங்கொண்டு எழுநிலைக் கோபுரத்தை இறைஞ்சிப் பொன் மாளிகையை வலம் வருகின்றார். அப் பொழுது இவர் நிலையைச் சேக்கிழார் பெருமான்,

கையுந் தலைமிசை புனைஅஞ் சலியன;
    கண்ணும் பொழிமழை ஒழியாதே,
பெய்யும் தகையன; கரணங் களும்உடன்
    உருகும் பரிவன; பேரெய்தும்

8. பெ. பு. திருநாவுக். 157-161

மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரும்
　　மின்தாள் சடையொடு நின்றாடும்;
ஐயன் திருநடம் எதிர்கும் பிடும்அவர்
　　ஆர்வம் பெருகுதல் அளவின்றால்.[9]

என்ற பாசுரத்தால் காட்டுவார். வலம் வந்தவர் கனகசபையினைக் கண்ணுற்று மன்றுள் ஆடும் நடராசர் முன் அணைகின்றார். கூத்தப் பெருமான் வாசீசரை நோக்கி, 'என்று வந்தாய்?' என வினவும் அருள் நோக்குடன் காட்சி தந்தருள்கின்றார். இத்திருக்குறிப்பினை உணர்ந்த அப்பர் பெருமான் ''கருநட்ட கண்டனை'' (4.81) என்ற திருவிருத்தம் பாடிப் போற்றுகின்றார். கூத்தப் பெருமான் தன்னை வினவிய அருட் குறிப்பினை,

ஒன்றியிருந்து நினைமின்கள்
　　உந்தமக் கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலாற்
　　கடிந்தான் அடியவற்காய்ச்
சென்றுதொழுமின்கள் தில்லையுட்
　　சிற்றம் பலத்துநட்டம்
'என்றுவந் தாய்?'எனும் எம்பெரு
　　மான்றன் திருக்குறிப்பே.(2)

என்ற இப்பதிகத்தின் இரண்டாவது பாடலில் தெளிவாகக் குறிப்பிடுகின்றார். இந்த வினாவுக்கு விடை கூறுவது போல் ''பத்தனாய்'' (4.23) என்று தொடங்கும் பதிகம் அமைகின்றது.

பத்தனாய்ப் பாட மாட்டேன்
　　பரமனே பரம யோகீ
எத்தினாற் பத்தி செய்கேன்
　　என்னைநீ இகழ வேண்டா

9. ஷெ ஷெ - 167

முத்தனே முதல்வா தில்லை
அம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் ஆடல் காண்பான்
அடியனேன் வந்த வாறே. (1)

என்ற நேரிசையினைப் பாடித் துதிக்கின்றார்.

பின்னர்த் தில்லை முன்றில்களிலும் திருவீதிகளிலும் உழவாரத்தினால் கூடிய பணிகள் செய்து தொண்டு புரிகின்றார். இந் நிலையில் "அன்னம் பாலிக்கும்" (5.1) "பனைக்கை மும்மதம் (4.2) என்ற குறுந்தொகைப் பதிகங்கள் பாடி மகிழ்ந்திருக்கின்றார்.

அல்லல் என்செயும்? அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்?
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோர் அடிமை பூண்டேனுக்கே(5.1:4)
தீர்த்த னைச்சிவ னைச்சிவ லோகனை
மூர்த்தி யைமுத லாய ஒருவனைப்
பார்த்த னுக்கருள் செய்தசிற் றம்பலக்
கூத்த னைக்கொடி யேன்மறந் துய்வனோ? (5.2:2)

என்ற குறுந்தொகைப் பாடல்களைப் பாடிஅநுபவிக்கலாம். கூத்தப் பெருமான்மீது அப்பர் பெருமான் 'எட்டு' பதிகங்கள் பாடியுள்ளார்[10].

தில்லையிலிருந்து "திருவேட்களம்"[11] என்னும் திருப் பதிக்கு வருகின்றார். "நன்று நாள்" (4.42) என்ற முதற்

---

10. மேற்குறிப்பிட்டவை போக மீதி 4-22; 4-80; 6-1; 6-2.

11. வேட்களம்: சிதம்பரம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 1 கல் தொலைவு. பேருந்து வசதியுண்டு. அண்ணாமலைப் பல்கலைக் கழக வளாகத்தின் கீழ்க்கோடியில் உள்ளது. அருச்சுனன் பாசுபதாஸ்திரம் பெற்ற தலம். சம்பந்தர் இத்தலத்தைத் தம் தங்குமிடமாக வைத்துக் கொண்டு தில்லைக்கு அவ்வப்போது வழிபடச் செல்வார் என்று பெரியபுராணம் கூறும்.

குறிப்புடைய பதிகம் பாடி வேட்களத் திறைவனை வழிபடு கின்றார்.

அல்லல் இல்லை; அருவினை தானில்லை;
மல்கு வெண்பிறை சூடும் மணாளனார்
செல்வ னார்திரு வேட்களம் கைதொழ
வல்ல ராகில் வழியது காண்மினே(4)

என்பது இப்பதிகத்தின் நான்காவது பாடல். அடுத்து திருக் கழிப்பாலைக்கு[12] எழுந்தருள்கின்றார். "வன்பவள வாய் திறந்து'; (4-6) என்ற பதிகம்பாடிக் கழிப்பாலை இறைவனை வழிபடுகின்றார். இது நாயகி நிலையில் 'தாய்ப் பாசுமாக' அமைந்துள்ளது. அதாவது தாய், காதல் வாய்ப் பட்ட தன் மகள் நிலையை எடுத்துக் கூறுவதாகப் பாசுரம் நடக்கின்றது.

முதிரும் சடைமுடிமேல் மூழ்கும்
இளநாகம் என்கின் றாளால்;
அதுகண் டதனருகே தோன்றும்
இளமதியம் என்கின் றாளால்;
சதுர்வெண் பளிக்குக் குழைகாதின
மின்னிடுமே என்கின் றாளால்;
கதிர்முத்தம் சிந்து கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ?(7)

என்பது இப்பதிகத்தின் ஏழாவது பாடல். "சதா சிவ பெருமான் மேனியில் காணப்பெறும் இளநாகம், இள மதியம், காதுக்குழை இவற்றைப் பேசிப் பேசி வாய் வெருவு கின்றாள். என் மகள் கதிர்ப்பாலைக் கண்டிருப்பாளோ?"

---

12. கழிப்பாலை: சிதம்பரம் இருப்பூர்தி நிலையத்தி லிருந்து 3 கல் தொலைவிலுள்ளது. பழைய தலம் கொள்ளிட நதி வெள்ளம் அடித்துச் சென்றது. இப்போ துள்ள கோயில் நெல்வாயில் ஆகிய சிவபுரியில் ஒரு தனிக் கோயிலாக உள்ளது.

என்று தாய் பேசுவதைப் பாடலில் காணலாம், இதனைத் தவிர வேறு நான்கு பதிகங்களைப் பாடிப் போற்றுகின்றார் இத்தலத்து எம்பெருமானை [13] தொடர்ந்து பாடுவதில் ''நங்கையைப் பாகம் வைத்தார்'' (4.30) என்ற பதிகத்தில்,

அரியன அங்கம் வேதம்
அந்தணர்க் கருளும் வைத்தார்;
பெரியன புரங்கள் மூன்றும்
பேரழல் உண்ண வைத்தார்;
பரியதீ வண்ண ராகிப்
பவளம்போல் நிறத்தை வைத்தார்;
கரியதோர் கண்டம் வைத்தார்;
கழிப்பாலைச் சேர்ப்ப னாரே(4)

என்பது நான்காவது பாடல். ''நெய்தற்குருகு''(4106) என்ற பதிகத்தில்

நெய்தற் குருகுதன் பிள்ளை என்
றெண்ணி நெருங்கிச் சென்று
கைதை மடல்புல்கு தென்கழிப்
பாலையதன் உறைவாய்
பைதல் பிறையொடு பாம்புடன்
வைத்த பரிசறியோம்
எய்தப் பெறினிரங் காது
கண்டாய்எம் இறையவனே(1)

என்பது முதற் பாடல். இப்பதிகத்தில் மூன்று பாடல்களே உள்ளன.

''வண்ணமும் வடிவும்'' (5-40) என்ற குறுந் தொகைப் பதிகமும் அகப்பொருள் துறையில் 'தாய்ப் பாசுரமாகவே' அமைந்துள்ளது.

---

13 அப்பர் 4-30; 4-106; 5-40; 6-12

மழலை தான்வரச் சொல்தெரி கின்றிலள்
குழலின் நேர்மொழி கூறிய கேண்மினோ
அழக னேகழிப் பாலைஎம் அண்ணலே
இகழ்வ தோஎனை ஏன்றுகொள் என்னுமே(3)

என்பது இப்பதிகத்தின் மூன்றாவது பாடல். ''ஊனுடுத்தி ஒன்பது வாசல்'' (6-12) என்று தொடங்கும் தாண்டகப் பதிகத்தில்,

விண்ணானாய் விண்ணவர்கள் விரும்பி வந்து
வேதத்தாய் கீதத்தாய் விரவி எங்கும்
எண்ணானாய் எழுத்தானாய் கடலே ழானாய்
இறையானாய் எம்மிறையே என்று நிற்கும்
கண்ணானாய் காரானாய் பாரும் ஆனாய்
கழிப்பாலை யுள்ளு றையும் கபாலப்பனார்
மண்ணாய மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே(5)

என்பது ஐந்தாவது தாண்டகம். கழிப்பாலையில் சில நாட்கள் தங்கியிருந்து மீண்டும் ''பனைக்கை மும்மத வேழம்'' (5.2) என்ற குறுந்தொகைப் பதிகத்தைப் பாடிக் கொண்டு தில்லை மூதூர்[13] வந்தடைகின்றார். இதில்,

13. கோயில் (சிதம்பரம்) வைணவர்கள் திருவரங்கத்தைக் கோயில், பெரிய கோயில் என்று வழங்குவதுபோல் சைவர்கள் சிதம்பரத்தைக் கோயில் என்று வழங்குவர். இது பழங்காலத்தில் தில்லைவனமாக இருந்தது. புலிக்கால் முனிவர் (வியாக்கிரக பாதர்) இவ்வனத்தில் தவம் செய்து சிவபூசை செய்த இடம். இரணியவர்மன் காலத்தில் கோயில் கட்டப் பெற்றது. இக்கோயிலில் (1) சிற்றம்பலம் (சிற்சபை) (2) கனகசபை (பொன்னம்பலம்) (3) நிருத்த சபை (4) தேவசபை (பேரம்பலம்) (5) இராஜ சபை (ஆயிரங்கால் மண்டபம்) என்ற ஐந்து சபைகள் உண்டு. இத்தலம் பல வரலாற்றுச் சிறப்புகளையுடையது.

தீர்த்த னைச்சிவ னைச்சிவ லோகனை
மூர்த்தி யைமுத லாய வொருவனைப்
பார்த்த னுக்கருள் செய்தசிற் றம்பலக்
கூத்த னைக்கொடி யேனமறந் துய்வனோ (2)

*என்பது* இரண்டாம் *பாடல்*. ''மங்குல் மதி தவழும் மாடவீதி'' (6.2) *என்ற பதிகமும் இத்தலம் பற்றியதே.*

வாரேறு வனமுலையாள் பாக மாக
மழுவாள்கை யேந்தி மயானத் தாடிச்
சீரேறு தண்வயல்சூழ் ஓத வேலித்
திருவாஞ்சி யத்தார் திருநள் ளாற்றார்
காரேறு கண்டத்தார் காமற் காய்ந்த
கண்விளங்கு நெற்றியார் கடல்நஞ் சுண்டார்
பேரேறு தாமேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. (4)

இறந்தார்க்கும் என்றும் இறவா தார்க்கும்
இமையவர்க்கும் ஏகமாய் நின்று சென்று
பிறந்தார்க்கும் என்றும் பிறவா தார்க்கும்
பெரியான்றன் பெருமையே பேச நின்று
மறந்தார்மனத் தென்றும் மறவார் போலும்
மறைக்காட் டுறையும் மழுவாட் செல்வர்
புறந்தார்சடை தாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே (7)

*என்பன* நான்காம், ஏழாம் *பாடல்கள்*. *இப்பதிகப் பாடல்கள் முழுவதும் 'புக்கார் தாமே' என்று இறுவதால் இது* புக்க திருத்தாண்டகம் *என்ற திருநாமம் பெறுகின்றது. அப்பர் பெருமான் திருவீதிப் பணி செய்துகொண்டு தில்லைச் சிற்றம்பலத்தின்கண் புகுந்தபோது இதனைப் பாடியிருக்கலாம் என்று ஊகிக்கலாம். பாடிய சூழ்நிலை தெளிவாக அறியக்கூடவில்லை.*

*திருக்கோயிலினுட் புகுந்து "அரியானை" (6.1) என்று தொடங்கும் பெரிய திருத்தாண்டகப் பதிகம் பாடி இறைவனை இறைஞ்சுகின்றார். இதில்,*

முற்றாத பால்மதியம் சூடி னானை
மூவுலகுந் தானாய முதல்வன் தன்னைச்
செற்றார்கள் புரமூன்றும் செற்றான் தன்னைத்
திகழொளியை மரகதத்தைத் தேனைப் பாலைக்
குற்றாலத் தமர்ந்துறையும் குழகன் தன்னைக்
கூத்தாட வல்லானைக் கோனை ஞானம்
பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.(9)

*என்பது இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல்.*

*இதற்கடுத்து "செஞ்சறைக் கற்றை"(4.22) என்ற முதற் குறிப்பையுடைய திருநேரிசைச் செந்தமிழ் மாலையால் தில்லைக் கூத்தனை வழுத்துகின்றார்.*

விருத்தனாய்ப் பால னாகி
விரிநிலா எரிக்கும் சென்னி
திருத்தனார் திருத்தம் செய்ய
நீண்டபுன் சடைகள் தாழக்
கருத்தனார் தில்லை தன்னுட்
கருதும்சிற் றம்ப லத்தே
அருத்தமா மேனி தன்னோ(டு)
அனல்எரி ஆடு மாறே. (9)

*என்பது இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல். சிவபெருமான் திங்களைத் தன் திருமுடியில் சூடியிருப்பதை முதல் பத்துப் பாடல்களிலும் எரியாடுதலை எல்லாப் பாடல்களிலும் குறிப்பிட்டுள்ளதைக் கண்டு மகிழலாம்.*

*இதனை அடுத்து "பாளையுடைக் கமுகோங்கி" (4.80) என்ற திருவிருத்தச் செந்தமிழ் மாலையால் வழிபாடு தொடர்கின்றது.*

தெரித்த கணையால் திரிபுர மூன்றும்
செந்தீயின் மூழ்க
எரித்த இறைவன் இமையவர்
கோமான் இணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற
தில்லைச்சிற் றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு
மற்றினிக் காண்பதென்னே (7)

என்பது ஏழாவது தமிழ் மணங் கமழும் நறுமலர்.

பின்னர் நாவுக்கரசர் பெருமான் சம்பந்தரைச் சந்திக்கும் நோக்கத்துடன் காழிப்பதியை நோக்கிப் புறப்படுகின்றார். இதனை அடுத்துவரும் இயலில் காண்போம்.

# 7. காழிப் பிள்ளையாருடன் தோழமை

திருநாவுக்கரசர் தில்லைச் சிற்றம்பலவனைப் போற்றி மகிழ்ந்திருக்கும் நாளில் சீகாழிப்பதியில் கவுணியப் பிள்ளையார் மூவாண்டில் உமையம்மையார் அளித்த ஞானப் பாலுண்டு திருஞான சம்பந்தராகி "தோடுடைய செவியன்" என்னும் தெய்வமணம் கமழும் திருநெறிய தமிழ்ப் பதிகம் பாடி, "என் உள்ளம் கவர் கள்வன்... எம்மை இது செய்தபிரான் இவனன்றே" எனத் தம் தந்தையாருக்குக் கைவிரலாற் சுட்டிக் காட்டிய அற்புத நிகழ்ச்சியை அடியார்கள்மூலம் கேள்வியுற்றவர் ஆளுடைய பிள்ளையாரைச் சேவிக்கவேண்டும் என்ற பேரவா அவர் மனத்திடையே எழுகின்றது.

தில்லைக்கூத்தனை வணங்கி விடைபெற்றுச் சீகாழியை நோக்கி வருபவர் திருநாரையூரை[1] அடைகின்றார். இவ் வூரில் எழுந்தருளியிருக்கும் கயிலைமலை நாதனை இரண்டு பதிகங்களால் போற்றுகின்றார். "வீறுதானுடை" (5.55) என்னும் முதற் குறிப்புடைய பதிகத்தில்,

---

1. நாரையூர்(திருநாரையூர்) சிதம்பரத்திலிருந்து காட்டு மன்னார் குடிக்குப் போகும் பேருந்து வழியில் 10 கல் தொலைவிலுள்ளது. நாரை வழிபட்ட தலம். நம்பி யாண்டார் நம்பி பிறந்த ஊர். இவ்வூர்ப் பொல்லாப் பிள்ளையார் தந்த குறிப்புப்படி திருமுறைகள் இருந்த இடம் கண்டு திரு முறைகளை முறைப்படுத்தித் தொகுத்தார்.

வேடு தங்கிய வேடமும் வெண்தலை
ஓடு தங்கிய வண்பலி கொள்கையும்
நாடு தங்கிய நாரையூ ரான் நடம்
ஆடு பைங்கழல் அம்ம அழகிதே. (3)

என்பது மூன்றாவது பாடல். "சொல்லானைப் பொருளானை" (6.74) என்று தொடங்கும் தாண்டகப் பதிகத்தின்,

ஆலாலம் மிடற்றணியா அடக்கி னானை
ஆலதன்கீழ் அறநால்வர்க் கருள்செய் தானைப்
பாலாகித் தேனாகிப் பழமு மாகிப்
பைங்கரும்பாய் அங்கருந்துஞ் சுவையா னானை
மேலாய வேதியர்க்கு வேள்வி யாகி
வேள்வியினின் பயனாய விமலன் தன்னை
நாலாய மறைக்கிறைவன் ஆயி னானை
நாரையூர் நன்னகரில் கண்டேன் நானே. (9)

என்பது ஒன்பதாவது பாடல். இங்ஙனம் நாரையூர்ப் பெருமானை வழிபட்டுக்கொண்டு சீகாழிப் பதியைச்[2] சென்று சேர்கின்றார்.

சூலை நோயினைத் தந்து கயிலையம் பெருமானால் நேரே ஆட்கொள்ளப்பெற்றுத் திருநாவுக்கரசரான பெருந் தகையார் சீகாழிப் பதியை நோக்கி வருகின்றார் என்ற செய்தி ஆளுடைய பிள்ளையாருக்கு எட்டுகின்றது. அவர்

---

2. காழி: விழுப்புரம்-கடலூர்-மயிலாடுதுறை இருப் பூர்தி வழியில் சீர்காழி என்ற நிலையத்திலிருந்து 1 கல் தொலைவு. ஞானசம்பந்தர் அவதரித்த தலம். இத்தலத் தில் கணநாத நாயனார் பயிற்சிக் கல்லூரி வைத்துத் தொண்டரை ஆக்கும் தொண்டு புரிந்தனர். பாடல்பெற்ற தலங்களில் இத்தலமே மிகுதியான பாடல்களைப் பெற் றுள்ளது. இத்தலத்திற்கு 12 பெயர்கள் உண்டு. அவை கழுமலம், காழி, கொச்சை வயம், சண்பை நகர், சிரபுரம், தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு, வேணுபுரம் இவற்றின் காரணங்கள் அருணாசல கவிராயர் இயற்றிய தலபுராணத்தில் தரப்பெற்றுள்ளன.

அடியார் கூட்டத்துடன் நாவுக்கரசரை எதிர்கொண் டழைக்கின்றார். திருஞான சம்பந்தரைக் கண்டு அளவிலா ஆர்வமுற்ற திருநாவுக்கரசரும் எதிர் சென்று அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்குகின்றார். ஆளுடைய பிள்ளையார் மலர் போன்ற மெல்லிய தம் திருக்கைகளால் பணிந்தவர் தம் கரங்கள் பற்றி இறைஞ்சி 'அப்பரே' என்று அன்பினால் அழைக்க, அவரும் 'அடியேன்' என்கின்றார்.

இந்த இரு பெரும் அடியார்களின் சந்திப்பைப்பற்றிப் பிற்காலத்தில் அடியார்களின் பெருமையை 'பெரிய புராண மாக' விரித்தெழுதிய தொண்டர் சீர் பரப்பும் சேக்கிழார் பெருமான் மூன்று பாடல்களால் அற்புதமாகக் காட்டு வார்.

அம்பிகைசெம் பொற்கிண்ணத் தமுதஞா
    னங்கொடுப்ப அழுகை தீர்ந்த
செம்பவள வாய்ப்பிள்ளை திருநாவுக்
    கரசரெனச் சிறந்த சீர்த்தி
எம்பெருமக் களும்இயைந்த கூட்டத்தில்
    அரனடியார் இன்பம் எய்தி
உம்பர்களும் போற்றிசைப்பச் சிவம்பெருகும்
    ஒலி நிறைந்தார் உலகம் எல்லாம்.

'பிள்ளையார் கழல்வணங்கப் பெற்றேன்' என்
    றரசுவப்பப் பெருகு ஞான
வள்ளலார் வாகீசர் தமைவணங்கப்
    பெற்றதற்கு மகிழ்ச்சி பொங்க,
உள்ளநிறை காதலினால் ஒருவரொரு
    வரிற்கலந்த உண்மை யோடும்
வெள்ளநீர்த் திருத்தோணி வீற்றிருந்தார்
    கழல்வணங்கும் விருப்பம் மிக்கார்.

அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம்
    அன்புசெறி கடலுமாம் எனவும் ஓங்கும்,

பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவனம் உய்ய,
இருட்கடுவுண் டவர்அருளும் உலகம் எல்லாம்
ஈன்றாள்தன் திருவருளும் எனவும் கூடித்
தெருட்கலைஞா னக்கன்றும் அரசும் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தார் அன்றே.[3]

என்ற திருப்பாடல்கள் நம்மையும் சிவம் பெருக்கும் சீலர் களாக்குவதைக் காணலாம். நாமும் உணர்ச்சியால் அக் காலத்திற்குத் தள்ளப் பெற்று நம்மை மறந்த நிலையை அடைகின்றோம்.

இருவரும் தோணியப்பரை வணங்குகின்றனர். அப்போது ஆளுடைய பிள்ளையார் அப்பர் பெருமானை நோக்கி, "உங்கள் தம்பிரானாரைப் பாடுவீராக" என வேண்டுகின்றார். நாவுக்கரசரும் பெரிய பெருமாட்டியுடன் தோணிமீது வீற்றிருக்கும் பெருமானைப் "பார் கொண்டு மூடி" (4.82) என்ற முதற் குறிப்புடைய திருவிருத்தம் பாடித் தோணிபுரத் தீசரைப் போற்றுகின்றார். இத்திருப் பதிகத்தின் நான்கு திருப்பாடல்களில் ஆழங்கால் படுவோம்.

பார்கொண்டு மூடிக் கடல்கொண்ட
ஞான்றுநின் பாதமெல்லாம்
நாலஞ்சு புள்ளினம் ஏந்தின
என்பர் நளிர்மதியம்
கால்கொண்ட வண்கைச் சடைவிரித்
தாடும் கழுமலவர்க்
காளன்றி மற்று முண்டோ
அந்தணாழி அகலிடமே. (1)

விரிக்கும் அரும்பதம் வேதங்கள்
ஓதும் விழுமியநூல்

---

3. பெ. பு. திருநாவுக். 183-185

உரைக்கில் அரும்பொருள் உள்ளுவர்
    கேட்கில் உலகமுற்றும்
இரிக்கும் பறையொடுபூதங்கள்
    பாடக் கழுமலவன்
நிருத்தம் பழம்படி யாடும்கழல்
    நம்மை ஆள்வனவே.(4)

நிலையும் பெருமையும் நீதியும்
    சால அழகுடைத்தாய்
அலையும் அருள்வெள்ளத் தன்று
    மிதந்தஇத் தோணிபுரம்
நிலையில் திரிபுரம் மூன்றெரித்
    தார்தம் கழுமலவர்
அலரும் கழலடி நாள்தொறும்
    நந்தமை ஆள்வனவே. (6)

பரவைக் கடல்நஞ்சம் உண்டது
    மில்லைஇப் பார்முழுதும்
நிரவிக் கிடந்து தொழப்படு
    கின்றது நீண்டிருவர்
சிரமப்பட வந்து சார்ந்தார்
    கழலடி காண்பதற்கே
அரவக் கழலடி நாடொறும்
    நந்தமை ஆள்வனவே (8)[4]

அடுத்து ''படையார் மழுவொன்று'' (4.83) என்ற திரு விருத்தம் பாடிப் போற்றுகின்றார். இதில்,

---

4. இவ்விடத்தில் அப்பர் பெருமானின் நான்காம் திருமுறையில் 22 முதல் 79 முடியவுள்ள திருப்பதிகங்கள் அறுசீரடி யாப்பாக வரும் திருநேரிசைப் பதிகங்கள் என்றும் 80 முதல் 113 வரை உள்ள பதிகங்கள் கட்டளைக் கலித்துறை யாப்பாகிய திருவிருத்தப்பதிகங்கள் என்றும் ஆய்வாளர்கள் கொண்டுள்ளதை நாம் நினைவில் இருத்துதல் வேண்டும்,

படையார் மழுவொன்று பற்றிய
    கையன் பதிவினவில்
கடையார் கொடுநெடு மாடங்கள்
    ஓங்கும் கழுமலமாம்
மடைவாய்க் குருகினம் பாளை
    விரிதொறும் வண்டினங்கள்
பெடைவாய் மதுவுண்டு பேரா
    திருக்கும் பெரும்பதியே. (1)

இந்த ஒரு பாடலைத் தவிர வேறுபாடல்கள் கிடைத்தில. சிவனது பெரும்பதி கழுமலம் என்பது பாடற்கருத்து.

இதனை யடுத்து "மாதியன்று" (5.45) என்று தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகம் பாடுகின்றார்.

பண்ணி நேர்மொழி யாள்பலி யிட்டஇப்
பெண்ணை மால்கொடு பெய்வளை கொள்வது
சுண்ண மாடிய தோணி புரத்துறை
அண்ண லாருக்குச் சால அழகிதே, (5)

என்பது ஐந்தாவது பாடல். இது தாய்ப் பாசுரம். ஒருதாய் தன் மகள் சிவபெருமான்மீது கொண்ட காதலைப்பற்றிக் கூறுவதுபோல் இத் திருப்பதிகப் பாடல்கள் அமைந்துள்ளன.

இங்ஙனம் பாடி முடித்த பிறகு அப்பர் பெருமான் காழிப் பிள்ளையாரது திருமடத்தில் எழுந்தருளி அவர் அன்புடன் அளித்த விருந்தமுதுண்டு அவருடன் அளவளாவி இருக்கின்றார்.

இவ்வாறு நாவுக்கரசர் பெருமான் சீகாழிப் பதியில் தங்கிச் சிவபெருமானைப் போற்றி மகிழ்கின்றார். ஒருநாள் நாவுக்கரசர் சோழ நாட்டிலுள்ள சிவத்தலங்கள் எல்லா வற்றையும் வழிபட வேண்டுமென்னும் தமது பெரு

வேட்கையை ஆளுடைய பிள்ளையாருக்குத் தெரிவிக்கின்றார். இருவரும் திருக்கோலக்கா[5] வருகின்றனர். இறைவனை வழிபடுகின்றனர். (நாவுக்கரசர் பதிகம் இல்லை.) பின்னர் சம்பந்தருடன் விடைபெற்றுச் சோழ நாட்டுத் திருத்தலப் பயணம் (இரண்டாவது சுற்று) தொடங்குகின்றார்.

5. கோலக்கா (திருத்தாள முடையார் கோயில்): சீகாழியிலிருந்து $\frac{1}{2}$ கல் தொலைவிலுள்ளது. சம்பந்தர் கையினால் தாளம் போட்டுப் பாடும்போது இத்தலத்து ஈசன் ஐந்தெழுத்து வரையப்பெற்ற பொற்றாளம் இரண்டை அவருக்குத் தந்தான். அம்பிகை தாளங்கட்கு ஓசை தந்தாள்.

# 8. சோழநாட்டுத் திருத்தல வழிபாடு - 2

திருஞானசம்பந்தருடன் கோலக்கா இறைவனை வழி பட்ட பின்னர் சோழ நாட்டில் மேலும் சில தலங்களை வழிபட விரும்பி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு சோழ நாட்டுத் திருத்தல வழிபாட்டைத் தொடங்குகின்றார் வாகீசர் பெருமான்.

**இரண்டாம் சுற்று ;** இந்தப் பயணம் அவரது இரண்டாம் சுற்றுப் பயணமாகக் கருதலாம். முதலில் **கருப்பறியலூர்**[1] வந்து அவ்வூர் 'கொகுடிக் கோயிலில்' எழுந்தருளியிருக்கும் இறைவனை வழிபடுகின்றார் (பதிகம் இல்லை).

அடுத்து **குரக்குக்கா**[2] என்ற திருத்தலத்துக்கு வருகின்றார். (தருமபுரம் பதிப்பு) "மரக்கொக்காமென" (5.75) என்று தொடங்கும் திருக்குறுந்தொகைச் செந்தமிழ்ப் பதிகத்தில்,

---

1. கருப்பறியலூர் (தலை ஞாயிறு) : விழுப்புரம் - கடலூர் - மயிலாடுதுறை இருப்பூர்தி வழியிலுள்ள வைத்தீஸ்வரன் கோயில் என்ற நிலையத்திலிருந்து 5 கல் தொலைவிலுள்ளது. சம்பந்தரும் சுந்தரரும் பதிகங்கள் பாடியுள்ளனர்.

ஆல நீழல் அமர்ந்த அழகனார்
கால னையுதை கொண்ட கருத்தனார்
கோல மஞ்ஞைகள் ஆலுங் குரக்குக்காப்
பால ருக்கருள் செய்வர் பரிவொடே. (7)

என்பது ஏழாம் பாடல். கல்லால மரத்தின்கீழ் அமர்ந்த அழகனும் காலனைக் காலால் உதைத்தவனுமாகிய குரக்குக்கா ஈசன் பரிவுணர்ச்சியோடு வந்து அருளுவான் என்கின்றார். இப்பதிகத்தில் பொன்னி நதியின் கோலம் வித விதமாகக் காட்டப்பெறுகின்றது.

குரக்குக்கா ஈசனிடம் விடைபெற்றுக்கொண்டு திருப்புள்ளிருக்கு வேளூர்[3] வருகின்றார் வாகீசப் பெருமான்; இரண்டு செந்தமிழ்ப் பதிகங்களால் வைத்திய நாதனை வழிபடுகின்றார். 'வெள்ளெருக்கரவம்' (5.79) என்ற திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

---

2. குரக்குக்கா: வைத்தீஸ்வரன் கோயிலிலிருந்து 6 கல் தொலைவிலுள்ளது. கருப்பறியலூர், திருப்புன்கூர் இவற்றின் அருகிலுள்ள தலம். ஆஞ்சனேயர் வழிபட்டதால் ''குரக்குக்கா'' என்று பெயர் பெற்றது.

3. புள்ளிருக்கு வேளூர்: இது வைத்தீஸ்வரன் கோயிலின் இன்னொரு பெயர். புள் (சடாயு, சம்பாதி) இருக்கு (=ரிக் வேதம்), வேள் (=முருகன்) பூசித்த தலம். இறைவன் வைத்தியநாதன் 'தீராத நோய் தீர்த்தருள வல்லான்' (6.54.8) அம்பிகை தையல் நாயகியின் அருட்பார்வையிலிருப்பது சித்தாமிர்த தீர்த்தம். சிறப்பெல்லாம் செல்வ முத்துக் குமாரசாமி எனும் முருகனுக்கே. கிருத்திகை தோறும் பகலில் மகாபிஷேகமும் இரவில் உற்சவமும் செல்வ முத்தையாவிற்கு உண்டு. அடியார்கள் ஆயிரக் கணக்கில் தரிசித்துச் சந்தனக் குழம்பு பெறுவர். நாடோறும் அர்த்த சாமப் பூசையில் முதலில் முத்தையாவிற்குப் பால் நிவேதனம். நேத்திரப்பிடி சந்தன அர்ப்பணம் செய்த பிறகே, மற்ற மூர்த்திகட்கு வழிபாடு. பஞ்ச மூர்த்திகள் திருவீதியுலாவில் வலப்பக்கத்தில் வைத்தியநாதர், நடுவில் செல்வ முத்துக்குமாரசாமி, இடப்பக்கத்தில் (தையல்

உள்ளம் உள்கி உகந்து சிவனென்று
மெள்ள உள்க வினைகெடும் மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே. (8)

*என்பது எட்டாம் பாடல். புள்ளிருக்கு வேளூரானை உள்ளம் உருகி நைபவர்களின் வினைகள் கெடும் என்கின்றார். ''ஆண்டானை'' (6.54) என்ற முதற் குறிப்பினை யுடைய செந்தமிழ்த் திருத்தாண்டக மாலையில்,*

பத்திமையால் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித் தானை
எத்தேவும் ஏத்தும் இறைவன் தன்னை
எம்மானை என்னுள்ளத் துள்ளே யூறும்
அத்தேனை அமுதத்தை ஆவின் பாலை
அண்ணிக்கும் தீங்கரும்பை அரனை ஆதிப்
புத்தேளைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.(3)

மின்னுருவை விண்ணகத்தில் ஒன்றாய் மிக்கு
வீசுங்கால் தன்னகத்தில் இரண்டாய்ச் செந்தீத்
தன்னுருவில் மூன்றாய்த் தாழ்புனலின் நான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி எஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை
வளரொளியை வயிரத்தை மாசொன் றில்லாப்
பொன்னுருவைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.(5)

---

*நாயகி (சோமாஸ் கந்த அமைப்பு வரிசையில்) எழுந்தருள்வர். செவ்வாய் தோஷம் போக்கும்தலம். செவ்வாய்க் கிழமைதோறும் மேஷ (ஆடு) வாகனத்தில் அங்காரகன் பிராகாரத்தில் வலம் வருவதுண்டு. முத்துக் குமார சுவாமி பிள்ளைத் தமிழ் குமரகுருபர சுவாமிகள் அருளியது. தல புராணம் வடுகநாத தேசிகர் இயற்றியது.*

என்பன மூன்றாம், ஐந்தாம் பாசுரங்கள். சென்ற நாட்களுக்கு இரங்கி வருந்திப் பாடிய பதிகம் இது. ஒவ்வொரு பாடலும் 'போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே' என்று இறுகின்றது. இப்பதிகப் பாடல்கள் யாவும் உள்ளத்தை உருக்கி பக்திச் சுவையில் தேக்கிடச் செய்பவை.

அடுத்து, புள்ளிருக்கு வேளூரான் வைத்தியநாதனிடம் விடைபெற்றுக்கொண்டு, திருப்புன்கூர்[4] வருகின்றார். "பிறவாதே தோன்றிய" (6.11) என்ற முதற் குறிப்புடைய தாண்டகப் பதிகம் பாடி புன்கூர் இறைவனைப் போற்றுகின்றார்.

இல்லானை எவ்விடத்தும் உள்ளான் தன்னை
இனியநினை யாதார்க் கின்னா தானை
வல்லானை வல்லடைந் தார்க்கருளும் வண்ணம்
மாட்டாதார்க் கெத்திறத்தும் மாட்டா தானைச்
செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானைத்
திருப்புன்கூர் மேவிய சிவ லோகனை
நெல்லால் விளைகழனி நீடூ ரானை
நீதனே னென்னேநான் நினையா வாறே.(3)

என்பது இப்பதிகத்தின் மூன்றாவது தாண்டகம்.

திருப்புன்கூர் பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு நீடூர்[5] வருகின்றார் அப்பர் பெருமான். "பிறவாதே தோன்றிய" (6.11) என்னும் முதற் குறிப்புடைய பதிகத்தில்,

4. புன்கூர் (திருப்புன்கூர்) : வைத்தீஸ்வரன் கோயிலிலிருந்து 2 கல் தொலைவிலுள்ளது. திருநாளைப் போவாருக்குத் தேர் நிலையிலிருந்தே இறைவன் காட்சியளிக்கத் திருநந்தி தேவரை விலகியிருக்கும்படிக் கட்டளையிட நந்தி தேவரும் அவ்வாறே விலகியிருக்கும் தலம். திருநாளைப் போவார் திருப்பணியாகக் கோயிலின் மேற்கில் நந்தன் குளம் உள்ளது. ஏயர்கோன் கலிக்காம நாயனாரிடத்தில் 12 வேலி நிலங் கொண்டு மழை பெய்வித்ததைப் பாசுரம் (சுந்த 7.55:2) கூறும்.

5. நீடூர் ; கடலூர் - மயிலாடுதுறை இருப்பூர்தி வழியில் நீடூர் நிலையத்திலிருந்து 1 கல் தொலைவிலுள்ளது.

பின்றானும் முன்றானும் ஆனான் தன்னைப்
பித்தர்க்குப் பித்தனாய் நின்றான் தன்னை
நன்றாங் கறிந்தவர்க்குத் தானே யாகி
நல்வினையும் தீவினையும் ஆனான் தன்னைச்
சென்றோங்கி விண்ணளவும் தீயா னானை
திருப்புன்கூர் மேவிய சிவலோகனை
நின்றாய நீடுர் நிலாவி னானை
நீதனே னென்னேநான் நினையா வாறே. (2)

*என்பது இப்பதிகத்தின் இரண்டாவது தாண்டகம்.*

*நீடூர் அண்ணலிடம் விடைபெற்றுக்கொண்டு* குறுக்கை வீரட்டத்திற்கு[6] *வருகின்றார் வாகீசர் பெருமான்.* ''ஆதியிற் பிரமனார்தாம்'' *(4.49) என்ற முதற் குறிப்பினையுடைய திருநேரிசைப் பதிகத்தால் சேவிக்கின்றார்.*

காப்பதோர் வில்லும் அம்பும்
கையதோர் இறைச்சி பாரம்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத்
தூயவாய்க் கலசம் ஆட்டித்
தீப்பெருங் கண்கள் செய்யக்
குருதிநீர் ஒழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்ட
குறுக்கைவீ ரட்ட னாரே. (7)

*என்பது இப்பதிகத்தின் ஏழாவது பாடல்.* ''நெடியமால்பிரம னோடு'' *(4.50) என்ற முதற் குறிப்பினையுடைய பதி* கத்தில் இரண்டே *(1,2) பாடல்கள் உள்ளன.*

---

*முனையடுவார் நாயனார் தொண்டு புரிந்த தலம். திருப்புன்கூருக்கும் நீடூருக்கும் ஒரே பதிகம் பொதுவாக வுள்ளது கவனிக்கத் தக்கது.*

6. குறுக்கை வீரட்டம் *நீடூரிலிருந்து* 5 கல் தொலை *விலுள்ளது. மன்மதனை எரித்தவீரட்டம்.*

ஆத்தமாம் அயனும் மாலும்
அன்றிமற் றொழிந்த தேவர்
சோத்தமெம் பெருமான் என்று
தொழுதுதோத் திரங்கள் சொல்லத்
தீர்த்தமாம் அட்டமிமுன்
சீருடை ஏழு நாளும்
கூத்தராய் வீதி போந்தார்
குறுக்கைவீ ரட்ட னாரே. (2)

என்பது இரண்டாவது பாடல்.

குறுக்கை வீரட்டத்துப் பெருமானிடம் விடைபெற்று நின்றியூர்[7] வருகின்றார். ''கொடுங்கண் வெண்தலை'' (5.23) என்ற குறுந்தொகைப் பதிகத்தால் போற்றுகின்றார்.

அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநின் றி யூரைநீ
இஞ்சி மாமதில் எய்திமை யோர்தொழக்
குஞ்சி வான்பிறை சூடிய கூத்தனே. (6)

என்பது ஆறாவது பாடல்.

நின்றியூர் அண்ணலிடம் விடைபெற்றுக்கொண்டு வாகீசர் நனி பள்ளி[8] வருகின்றார். ''முன்றுணை யாயி னானை''(4.70) எனத் தொடங்கும் திருநேரிசைப் பதிகம் பாடி நின்றியூர் இறைவனைச் சேவிக்கின்றார்.

---

7. நின்றியூர்; கடலூர் - மயிலாடுதுறை இருப்பூர்தி வழியிலுள்ள ஆனதாண்டவபுரம் என்ற நிலையத்திலிருந்து 2கல் தொலைவிலுள்ளது. திருமகள் இத்தலத்து எம் பெருமானைப் பூசித்ததைச் சுந்தரர்பாசுரம்கூறும். (சுந்தரர் 7.65;3)

8. நனிபள்ளி (புஞ்சை) மயிலாடுதுறை-தரங்கம்பாடி இருப்பூர்திப் பாதையில் உள்ள செம்பொனார் கோயில் நிலையத்திலிருந்து 2½ கல் தொலைவிலுள்ளது. சம்பந்தர்

துஞ்சிருள் காலை மாலை
தொடர்ச்சியை மறந்தி ராதே
அஞ்செழுத் தோதின் நாளும்
அரானடிக் கன்ப தாகும்
வஞ்சனைப் பாற்சோ றாக்கி
வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார்
நனிபள்ளி அடிக ளாரே. (5)

என்பது இத்திருப்பதிகத்தின் ஐந்தாவது பாடல்.

நனி பள்ளி ஈசனிடம் விடைபெற்றுக்கொண்டு திருவலம் புரம்[9] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். இத்தலத்து இறைவனை இரண்டு பதிகங்களால் வழிபடுகின்றார். ''தெண்டிரை தேங்கி'' (4.55) என்ற திருநேரிசைச் செந் தமிழ்ப்பதிகத்தில்,

தேனுடை மலர்கள் கொண்டு
திருந்தடி பொருந்தச் சாத்தி
ஆனிடை அஞ்சுங் கொண்டு
அன்பினால் அமர ஆட்டி
வானிடை மதியம் சூடும்
வலம்புரத் தடிகள் தம்மை
நானடைந் தேத்தப் பெற்றேன்
நல்வினைப் பயனுற் றேனே. (3)

என்பது முன்றாவது வாடா நறுமலர். இதனையடுத்து ''மண்ணளந்த'' (6.58) என்ற திருத்தாண்டகச் செந்தமிழ்

---

தாயார் பிறந்த ஊர். சம்பந்தர் தம் தந்தையின் இடுப்பில் தாங்கப்பெற்றுத் தம் மேல் ஆணை வைத்துப் பாடிய தலப் பதிகம் சிறப்புடையது.

9. வலம்புரம் (பெரும் பள்ளம்): சீகாழியிலிருந்து 8½ கல் தொலைவிலுள்ளது.

மாலை அகப்பொருள் துறையிலமைந்தது. திருவலம்புரப் பெருமான் திருவீதியில் திருவுலாப் போந்தபோது அவர்பால் காதல் கொண்டு அவர் பின்னே சென்று அவரை அடைய இயலாது வருந்தும் ஒரு தலைவியின் கூற்றாக அமைந்துள்ளது.

பட்டுடுத்துப் பவளம்போல் மேனி யெல்லாம்
பசுஞ்சாந்தம் கொண்டணிந்து பாதம் நோவ
இட்டெடுத்து நடமாடி இங்கே வந்தார்க்
கெவ்வூரீர்? எம்பெருமான் என்றேன்; ஆவி
விட்டிடுமா றதுசெய்து விரைந்து நோக்கி
வேறோர் பதிபுகப் போவார் போல
வட்டணைகள் படநடந்து மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. (6)

என்பது இப்பதிகத்தில் ஆறாவது வாடாத தமிழ் மணம் கமழும் நறுமலர். "பட்டுடுத்துப் பவளம் போன்ற மேனியில் பசும் சாந்தம் அணிந்து பாதம் நோவ நடந்து வந்த அவரை 'எவ்வூரீர்?' என்று நான்வினவினேன். அவரோ என் ஆவி அழியுமாறு செய்து விரைந்து என்னை நோக்கிவிட்டு, வேறோர் பதி புகுவார்போலக் காட்டி, 'வட்டணைகள் பட நடந்து,[10] மாய வார்த்தைகள் பேசி வலம்புரத்தினுட் சென்று மன்னினார்" என்று சொல்லித் தலைவி வருந்து கின்றாள். அகப்பொருட் சுவையும் கற்பனைப் பாவனையும் கலந்த அற்புதமான இப்பதிகம் பன்முறை படித்து அநுபவிக்கத் தக்கது.

---

10. அப்பர் பெருமானின் இப்பாடலை மனத்திற் கொண்டு சிற்பியொருவன் வடித்த கவின்மிகு சிலையொறு 'வட்டணை காட்டவந்த நாயகர்' என்னும் பெயரில் இன்றும் திருவலம்புரத்தில் திகழ்வதைக் காணலாம்.

வலம்புரத்தடிகளிடம் விடை பெற்றுக்கொண்டு திருச்சாய்க்காடு[11] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். இரண்டு திருப்பதிகங்களால் வழிபடுகின்றார். "தோடுலா மலர்" (4.65) என்ற திருநேரிசைப் பதிகத்தில்,

ஆமலி பாலும் நெய்யும்
ஆட்டிஅர்ச் சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப்
பொறாததன் தாதை தாளைக்
கூர்மழு வொன்றால் ஓச்சக்
குளிர்சடைக் கொன்றை மாலைத்
தாமநற் சண்டிக் கீந்தார்
சாய்க்காடு மேவி னாரே. (6)

என்பது ஆறாவது பாடல். இதில் சண்டேசுர நாயனார் (அறுபத்து மூவருள் ஒருவர்) வரலாறு சுட்டப் பெறுகின்றது.

குவப்பெருந் தடக்கை வேடன்
கொடுஞ்சிலை இறைச்சி பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித்
தூயவாய்ச் கலசம் ஆட்ட
உவப்பெருங் குருதி சோர
ஒருகணை இடந்தங் கப்பத்
தவப்பெரும் தேவு செய்தார்
சாய்க்காடு மேவி னாரே. (8)

என்பது எட்டாவது பாடல். இதில் கண்ணப்பநாயனார் (அறுபத்து மூவருள் ஒருவர்) வரலாறு குறிப்பிடப் பெறுகின்றது.

---

11. சாய்க்காடு (சாயாவனம்): சீகாழியிலிருந்து 9 கல் தொலைவிலுள்ளது. ஆக்கூர் என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து 5 கல் தொலைவு. திருவெண்காட்டிலிருந்து 1 கல் தொலைவு.

அடுத்தது 'வானத்திளமதி' (6.82) என்ற திருநெடுந் தாண்டகச் செந்தமிழ் மாலை.

வானத் திளமதியும் பாம்பும் தம்மில்
வளர்சடைமேல் ஆதரிப்ப வைத்தார் போலும்
தேனும் திளைத்துண்டு வண்டு பாடுந்
தில்லை நடமாடுந் தேவர் போலும்
ஞானத்தின் ஒண்சுடராய் நின்றார் போலும்
நன்மையும் தீமையும் ஆனார் போலும்
தேனொத் தடியார்க் கினியார் போலும்
திருச்சாய்க்காட் டினிதுறையும் செல்வர் தாமே. (1)

என்பது இந்த மாலையின் வாடாத முதல் நறுமலர்; தனி மலர். இப்பதிகப் பாடல்கள் யாவும் படித்து அநுபவிக்கத் தக்கவை.

சாய்க்காட்டு இறைவனிடம் விடைபெற்றுக்கொண்டு திருவெண்காடு[12] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார் திருநாவுக்கரசர். இரண்டு திருப்பதிகங்களால் வெண்காட்டி டிறைவனை வழிபடுகின்றார். 'பண்காட்டி' (4.49) என்ற முதற் குறிப்பையுடைய திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

12. வெண்காடு (திருவெண்காடு): சீகாழியிலிருந்து 7 கல் தொலைவு. இங்குள்ள (கோயிலுக்குள்) சூரிய சந்திர அக்கினி என்ற முக்குள நீராடி இறைவனை வழிபடுவோர் மக்கட் பேறுடன் வேண்டிய வரமெலாம் பெறுவர். இவ்வாறு வழிபட்ட அச்சுத களப்பாளர் மெய் கண்டார் என்னும் சந்தான குரவரைப் பெற்றெடுத்தார். இங்கு முக்குள நீராடித்தென்புலத்தார் வழிபாடும் செய்கின்றனர். கயைக் கோயிலில் உள்ளதுபோலவே இங்கும் 'அட்சய வடம்' எனும் அழியா ஆலமரமும் உள்ளது. திருவெண் காடர் என்ற பெயருள்ள பட்டினத்தடிகள் வரலாற்றுத் தொடர்பும் இத்தலத்திற்குண்டு.

ஊனோக் கும்இன்பம் வேண்டி உழலாதே
வானோக் கும்வழி யாவது நின்மினோ
தானோக் குந்தன் னடியவர் நாவினில்
தேனோக் குந்திரு வெண்கா டடைநெஞ்சே. (3)

என்பது மூன்றாவது பாடல். 'உடல் நோக்கிய இன்பங் களுக்காக உழலாதே; வானோக்கும் வழிக்கு முயல்க' என்று தம் நெஞ்சைத் தெருட்டுகின்றார் அடிகள்.

'தூண்டு சுடர்மேனி' (6.35) என்ற செந்தமிழ்த் திருத் தாண்டக மாலை, காதல் மிகுந்த தலைவியொருத்தியின் பேச்சுப் பாவனையில் பாடப்பெற்றது. சமயக் கருத்து களைக் கன்னற் சாறாகக் கவிதையில் தேக்கிய அற்புதத் திருப்பதிகம்.

தென்னலையோர் ஓடேந்திப் பிச்சைக் கென்று
வந்தார்க்கு வந்தேஎன் றில்லே புக்கேன்
அந்நிலையே நிற்கின்றார் ஐயங் கொள்ளார்
அருகே வருவார்போல் நோக்கு கின்றார்
'நுந்நிலைமை யேதோ? நும்மூர்தான் ஏதோ?
என்றேனுக் கொன்றாகச் சொல்ல மாட்டார்
மென்முலையார் கூடி விரும்பி யாடும்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. (3)

என்பது இப்பதிகத்தின் மூன்றாவது பாடல். ''ஓடேந்தி நேற்றுப் பிச்சைக்கு வந்தவனை 'ஊரேது?' என்றேன்; அருகே வந்தவன் ஒன்றும் சொல்லவில்லை'' என்கின்றாள். இப்பதிகப் பாடல்கள் யாவும் பன்முறை படித்து அநுப விக்கத் தக்கவை. சிவபோகத்தின் சாரங்கள் பாடல்களில் சிந்துவதைக் காணலாம். பிச்சாண்டிக் கோல நலமும் அவன் பின்னே செல்லும் பேதை மனமும் அற்புதமாகச் சித்திரிக்கப் பெறுகின்றன.

**காவிரியாற்றங்கரைத் தலங்கள் :** இதன் பின்னர் காவிரி யாற்றின் இருகரையிலும் உள்ள தலங்களைச் சென்று

சேவிக்க வேண்டும் என்ற பெருவேட்கையால் உந்தப் பெற்று முதலில் செம்பொன் பள்ளி[13] யிலுள்ள திருக்கோயி லுக்கு வருகின்றார். ''ஊனினுள்ளுயிரை வாட்டி'' (4.29) என்ற முதற் குறிப்பையுடைய திருப்பதிகம் பாடி இறைவனைச் சேவிக்கின்றார்.

நொய்யவர் விழுமி யாரும்
நூலினுள் நெறியைக் காட்டும்
மெய்யவர் பொய்யு மில்லார்
உடலெனும் இடிஞ்சில் தன்னில்
நெய்யமர் திரியு மாகி
நெஞ்சத்துள் விளக்கு மாகிச்
செய்யவர் கரிய கண்டர்
திருச்செம்பொன் பள்ளி யாரே. (2)

என்பது இந்த நேரிசைப் பதிகத்தின் இரண்டாவது பாடல். ''கானறாதகடி'' (5.39) என்ற முதற்குறிப்புடைய திருக் குறுந்தொகைப் பதிகத்தாலும் இத்தலத்துப் பெருமானை ஏத்துகின்றார்.

பூவு லாஞ்சடை மேற்புனல் சூடினான்
ஏவ லால்எயில் மூன்றும் எரித்தவன்
தேவர் சென்றிறைஞ்சும் செம்பொன் பள்ளியான்
மூவ ரரய்முத லாய்நின்ற மூர்த்தியே. (5)

என்பது இத்திருப்பதிகத்தின் ஐந்தாவது பாடல்.

செம்பொன் பள்ளியானிடம் விடைபெற்றுக் கொண்டு மயிலாடுதுறை[14] வருகின்றார். ''கொள்ளும் காதன்மை''

---

13. செம்பொன்பள்ளி: மயிலாடுதுறை - தரங்கம்பாடி இருப்பூர்தி வழியிலுள்ள செம்பொனார் கோயில்நிலையம். ஊருக்குள் திருக்கோயில் உள்ளது.

14. மயிலாடுதுறை (மாயூரம்): புகழ்பெற்ற இருப்பூர்திச் சந்திப்பு. நிலையத்திலிருந்து 2 கல் தொலைவிலுள்ளது திருக்கோயில். நிலையத்திலிருந்து பேருந்து வசதி உண்டு.

(5.39) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ் மாலை பாடி இறைவனை ஏத்துகின்றார்.

**நிலைமை சொல்லுநெஞ் சே!தவம் என்செய்தாய்**
**கலைக ளாயவல் லான்கயி லாயநன்**
**மலையன் மாமயி லாடுதுறை யன்நம்**
**தலையின் மேலும் மனத்துள்ளும் தங்கவே. (6)**

என்பது இத்திருப்பதிகத்தின் ஆறாவது பாடல்.

மயிலாடுதுறை வெள்ளந்தாங்கு சடையனிடம் விடை பெற்றுக்கொண்டு திருத்துருத்தி[15] வருகின்றார் திருநாவுக்கரசர். "பொருந்திய குரம்பை தன்னை" (4.42) என்ற முதற் குறிப்புடைய திருநேரிசைத் திருப்பதிகம் பாடித் தூமனத் துருத்தியானை ஏத்துகின்றார்.

**உன்னிஎப் போதும் நெஞ்சுள்**
**ஒருவனை ஏத்து மின்னோ**
**கன்னியை ஒருபால் வைத்துக்**
**கங்கையைச் சடையுள் வைத்துப்**
**பொன்னியின் நடுவு தன்னுட்**
**பூம்புனல் பொலிந்து தோன்றும்**
**துன்னிய துருத்தி யானைத்**
**தொண்டனேன் கண்ட வாறே. (3)**

என்பது இப்பதிகத்தின் மூன்றாவது பாடல்.

---

உமாதேவியார் மயில் உருவில் இறைவனை வழிபட்ட தலம். காவிரியாற்றின் தென்கரையிலுள்ளது. ஐப்பசித் துலா முழுக்குச் சிறப்புடையது. ஐப்பசிக் கடைசி நாளன்று கடைமுழுக்கு மிகச் சிறப்புடையது. கார்த்திகை முதல் தேதியன்று முடவன் முழுக்கு.

15 துருத்தி : மாயூரம் - திருச்சி இருப்பூர்தி வழியிலுள்ள குத்தால நிலையத்திலிருந்து $\frac{1}{4}$ கல் தொலைவு. இறைவன் கட்டளைப்படி இங்குள்ள குளத்தில் மூழ்கிய வன்றொண்டர் தமது உடலுறு பிணி நீங்கி மணி ஒளி சேர் திருமேனியுடையவர் ஆயினார்.

ஒவ்வொரு பாடலும் ''தொண்டனேன் கண்டவாறே'' என்ற தொடரால் இறுகின்றது.

துருத்தியானிடம் விடை பெற்றுக்கொண்டு வேள்விக்குடி[16] வருகின்றார் நாவேந்தர். வேள்விக்குடிப் பெருமானைச் சேவித்து (பதிகம் இல்லை) எதிர்கொள்பாடி[17] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். வந்தவர் தலத்து எம்பெருமானை வழிபடுகின்றார் (பதிகம் இல்லை).

எதிர்கொள்பாடிப் பெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு மணஞ்சேரி[18] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார் வாகீசப்பெருமான். 'பட்ட நெற்றியார்' (5.87) என்ற முதற் குறிப்பையுடைய திருக் குறுந்தொகைச் செந்தமிழ் மாலையால் வழிபடுகின்றார்.

துள்ளு மான்மறி தூமழு வாளினர்
வெள்ள நீர்க்கரந் தார்சடை மேலவர்
அள்ள லார்வயல் சூழ்மணஞ் சேரியெம்
வள்ள லார்கழல் வாழ்த்தல்வாழ் வாவதே. (5)

என்பது ஐந்தாவது பாடல் 'திருமணஞ்சேரி இறைவன் துள்ளும் மான்மறி, மழுவாள் இவற்றைத் தரித்தவர்.

---

16. வேள்விக்குடி : குத்தாலம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 3 கல் தொலைவிலுள்ளது. சம்பந்தர், சுந்தரர் என்ற இரு குரவர்களின் பாடல் பெற்றது.

17. எதிர்கொள்பாடி (மேலைத் திருமணஞ்சேரி) குத்தாலத்திலிருந்து $3\frac{1}{2}$ கல் தொலைவிலுள்ளது. சுந்தர மூர்த்தியின் பாடலை மட்டிலும் பெற்றது.

18. மணஞ்சேரி (கீழைத் திருமணஞ்சேரி): குத்தாலம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 3 கல் தொலைவு. வேள்விக்குடி, எதிர்கொள்பாடி இத்தலங்களை ஒட்டிய தலம். மயிலாடு துறை, திருத்துருத்தி இவற்றை வணங்கிவிட்டு ஆவடுதண்துறை சென்றபோது பாடிய திருத்தலம் என்று தருமபுரப் பதிப்பு இதற்குக் குறிப்பெழுதும். பொதுவாக ஆவடுதுறைப் பயணம், திருவானைக்கா நோக்கிய பயணங்களின் போது இச்சோழ நாட்டுத் தலங்கள் பாடப்பெற்றுள்ளமையை உய்த்துணர வேண்டியுள்ளது.

கங்கையைச் சடையில் கொண்டவர். இவரை வாழ்த்துதலே வாழ்வாகும் என்கின்றார். 'மணஞ்சேரி மருந்தி'னிடம் விடைபெற்றுக்கொண்டு பந்தணை நல்லூர்[19] வருகின்றார். ''நோதங்கமில்லாதார்'' (6.10) என்ற முதற் குறிப்பினை யுடைய செந்தமிழ்த் திருத்தாண்டக மாலையால் வழிபடு கின்றார்.

பூதப் படையுடையார் பொங்கு நூலார்
புலித்தோ லுடையினார் போரேற் றினார்
வேதத் தொழிலார் விரும்ப நின்றார்
விரிசடைமேல் வெண்திங்கள் கண்ணி சூடி
ஓதத் தொலிகடல்வாய் நஞ்ச முண்டார்
உம்பரோ டம்பொன் னுலக மாண்டு
பாதத் தொடுகழலார் பைங்கண் ஏற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. (3)

என்பது மூன்றாவது தமிழ் மணம் கமழும் வாடா நறுமலர். இதில் ''பந்தணை நல்லூர் பெருமான் பூதப் படையினர்; வேதத் தொழிலர்; புலித் தோலுடையினர்; காளை வாகனத்தர்; விரிசடைமேல் வெண் திங்கள் கண்ணி சூடியவர்; நஞ்சுண்ட கண்டத்தார்; விண்ணுலகம் அவரது உடைமை'' என்கின்றார்.

பந்தணை நல்லூர்ப் பரமனிடம் விடைபெற்றுக் கொண்டு அன்னியூர்[20] வருகின்றார் ஆளுடைய அரசு. 'பாறலைத்த' (5.8) என்ற முதற் குறிப்பினையுடைய திருக் குறுந்தொகைப் பதிகத்தால் இவ்வூர் இறைவனை வழிபடு கின்றார்.

---

19. பந்தணை நல்லூர் : குத்தாலம் இருப்பூர்தி நிலை யத்திலிருந்து 6 கல் தொலைவு. கும்பகோணத்திலிருந்து பேருந்து வசதி உண்டு.

20. அன்னியூர் (பொன்னூர்) நீடூரிலிருந்து 3 கல் தொலைவு. காவிரியின் வடகரையிலுள்ள தலம்.

பரவி நாளும் பணிந்தவர் தம்வினை
துரவை யாகத் துடைப்பவர் தம்மிடம்
குரவம் நாறும் குழலுமை கூறராய்
அரவ மாட்டுவர் போல்அன்னி யூரரே. (3)

என்பது இப்பதிகத்தின் மூன்றாவது பாடல்.

அன்னியூர் இறைவனிடம் விடைபெற்றுக் கொண்டு கடம்பூர்[21] வருகின்றார் அப்பர் பெருமான். இரண்டு திருக்குறுந் தொகைச் செந்தமிழ் மாலைகள் பாடி வழிபடுகின்றார் இத்தலத் திறைவனை. 'தளருங்கோளரவம்' (5.19) என்றது முதற்பதிகம். இதில்,

துண்ணெ னாமனத் தால்தொழு நெஞ்சமே!
பண்ணி னால்முனம் பாடல துசெய்தே
எண்ணி லார்எயில் மூன்றும் எரித்தமுக்
கண்ணி னான்கடம் பூர்க்கரக் கோயிலே. (4)

என்பது நான்காம் பாடல். மற்றொரு பாடல்,

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையும் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே. (9)

---

21. கடம்பூர் : சிதம்பரத்திலிருந்து 15 கல் தொலைவு. நாதமுனிகள் திருத்தொண்டு புரிந்த காட்டுமன்னார் குடியிலிருந்து 3 கல் தொலைவு. ஆலயம் கரக் கோயில். இரதம், சக்கரம், குதிரையமைந்துள்ள சிற்ப முறையில் கருவறை அமைந்துள்ளது. காவிரியின் வடகரைத்தலம். சம்பந்தருடன் திருக்கோலக்கா வழிபட்ட பின், நாவுக்கரசர் பல தலங்களை வழிபட்டார். அவற்றுள் ஒன்று இது (தருமபுரப் பதிப்பு). கோயிலின் அமைப்பு அற்புதமாகப் பாடப்பெற்றுள்ளது.

என்பது. இஃது ஒன்பதாம் பாடல்; புகழ் வாய்ந்த பாடல். அப்பர் பெருமானின் குறிக்கோளை நூற்பாபோல் விளக்கு வது. இத் திருக்குறுந்தொகையில் இறைவன் கடமையை யும் தம் நிலையையும் தெளிவுபடுத்துகின்றார். இறைவனின் கடன் அடியார்களைத் தாங்குதல்; அடியாரின் பொறுப்பு பணிசெய்து கிடத்தல். இன்று நடைபெறுவது மக்களாட்சி. மக்களே இறை நிலையிலுள்ளனர். அனைத்து அரசு நிறு வனங்களிலும் பணியாற்றுவோருக்கு மக்கள்தாம் தேர்ந் தெடுத்த மன்றங்கள்மூலம் நிதி ஒதுக்கிப் படி அளக்கின்ற னர். நல்ல ஊதியம் பெறுகின்றனர் அரசுப் பணியாளர்கள் (Public servants). தாம் சமூகப் பணியாளர் என்ற உணர்ச்சி யுடன் பணியாற்றவேண்டும். எக்காரணத்தாலும் ஆணவம் மிகுந்து தாம் தலைவன் (Master) என்ற எண்ணமே அவர்க ளிடம் எழக்கூடாது. அலுவலகத்திற்குத் தேவையைக் கோரி வரும் ஓர் ஏழையிடம்கூட மரியாதையுடன் நடந்து உதவ வேண்டும். இன்றைய நிலை என்ன? அமைச்சர் முதல் கடையூழியர்வரை எப்படி நடந்து கொள்கின்றனர்? அப்பர் பெருமானின் மனநிலை - என் கடன் பணி செய்து கிடப்பதே என்ற நிலை - அவர்கள் மனத்தில் இருக்க வேண்டும். இருக்குமா? கயிலைநாதன்தான் இவர்களைத் தடுத்து, சில சங்கடங்களை அநுபவிக்குமாறு செய்து, பின் னர் ஆட்கொள்ள வேண்டும். இரண்டாவது பதிகம் "ஒரு வராய் இரு" (5.20) என்ற முதற்குறிப்பினையுடையது.

இல்லக் கோலமும் இந்த இளமையும்
அல்லற் கோலம் அறுத்துய வல்லிரே
ஒல்லைச் சென்றடை யுங்கடம் பூர்நகர்ச்
செல்வக் கோயில் திருக்கரக் கோயிலே. (3)

என்பது மூன்றாவது பாடல். இல்லற வேடங்களைப் போக்கி உய்வதற்குக் கடம்பூர் கரக்கோயிலை விரைவில் சென்று வழிபடுமாறு நம்மை ஆற்றுப்படுத்துகின்றார்.

கடம்பூர்க் குழகனிடம் விடைபெற்றுக்கொண்டு ஓமாம் புலியூர் [22] என்ற தலத்துக்கு வருகின்றார். 'ஆராரும் மூவிலை வேல்' (6.88) என்ற திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையால் வழிபடுகின்றார்.

அருந்தவத்தோர் தொழுதேத்தும் அம்மான் தன்னை
ஆராத இன்னமுதை அடியார் தம்மேல்
வருந்துயரம் தவிர்ப்பானை உமையாள் நங்கை
மணவாள நம்பியையென் மருந்து தன்னைப்
பொருந்துபுனல் தழுவுவயல் நிலவு துங்கப்
பொழில்கெழுவு தருமோமாம் புலியூர் நாளுந்
திருந்துதிரு வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. (6)

என்பது ஆறாம் நறுமலர். இதில் "ஓமாம்பூரின் 'வடதளிச்' செல்வன் அருந்தவத்தோரால் வழிபடப் பெறுபவன்; அடியார் துயர் தீர்ப்பவன்; ஆரா அமுதன்; உமையவளின் மணவாள நம்பி; எனக்கு மருந்து" என்கின்றார்.

வடதளிச் செல்வனிடம் விடை பெற்றுக்கொண்டு ஆப்பாடிக்கு[23] வருகின்றார். 'கடலகம் ஏழினோடு' (4.48) என்ற முதற்குறிப்புடைய செந்தமிழ் திருநேரிசைப் பதிகத்தால் வழிபடுகின்றார்.

---

22. ஓமாம்புலியூர்: குத்தாலம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 11 கல் தொலைவு (கொள்ளிடத்தைக் கடக்க வேண்டும்). சிதம்பரத்திற்குத் தென்மேற்கில் 15 கல் தொலைவு. காட்டுமன்னார் குடியிலிருந்து பேருந்து மூலம் செல்லலாம்.

23. ஆப்பாடி : ஆடுதுறை என்ற இருப்பூர்தி நிலையத்திலிருத்து 7 கல் தொலைவு. சண்டேசுவர நாயனார் (அறுபத்து மூவருள் ஒருவர்) பூசித்த தலம். இதைப் (4.48:4) பாசுரம் கூறும்.

அண்டமார் அமரர் கோமான்
ஆதிஎம் அண்ணல் பாதம்
கொண்டவன் குறிப்பி னாலே
கூப்பினான் தாப ரத்தைக்
கண்டவன் தாதை பாய்வான்
காலற எறியக் கண்டு
தண்டியார்க் கருள்கள் செய்த
தலைவர்ஆப் பாடி யாரே. (4)

என்பது நான்காவது *தமிழ் மணம் கமழும் வாடா நறுமலர்.*

ஆப்பாடி அடிகளிடம் விடைபெற்றுக் கொண்டு ஆளுடைய அரசு மங்கலக்குடிக்கு[24] எழுந்தருளுகின்றார். 'தங்கலப்பிய' (5.73) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந் தொகைப் பதிகத்தால் வழிபடுகின்றார். இதில்,

மன்னு சீர்மங்க லக்குடி மன்னிய
பின்னு வார்சடைப் பிஞ்ஞகன் தன்பெயர்
உன்னு வாரும் உரைக்கவல் லார்களும்
துன்னு வார்நன் னெறிதொடர் வெய்துவே. (6)

என்பது ஆறாம் பாடல். இதில் மங்கலக் குடியில் திகழும் செஞ்சடையான் திருநாமங்களை நினைப்பவர்களும் சொல்லித் துதிப்பவர்களும் சிவஞானமாகிய நன்னெறித் தொடர்பினை அடைவர் என்கின்றார்.

மங்கலக்குடி மாமதி சூடிய சோதியிடம் விடைபெற்றுக் கொண்டு கஞ்சனூர்[25] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார்.

---

24. மங்கலக்குடி (சூரியனார் கோயில்) : ஆடுதுறை இருப்பூர்தி நிலையத்திலிருந்து $1\frac{1}{2}$ கல் தொலைவு. சூரியன் திருமால், பிரமன், காளி, அகத்திய முனிவர் பூசித்த தலம். (பாடல்-3) இது காவிரியின் வடகரைத் தலம். இப்பதிக 4-ஆம் பாடலில் சண்டேசுவரரின் வரலாறு குறிப்பிடப் பெற்றுள்ளது.

25. கஞ்சனூர் : நாரசிங்கம் பேட்டை இருப்பூர்தி நிலையத்திலிருந்து $1\frac{1}{2}$ கல் தொலைவு. கஞ்சன் (=பிரமன்)

'மூவிலை' (6,90) என்ற முதற்குறிப்புடைய செந்தமிழ்த் திருத்தாண்டக மாலையால் வழிபடுகின்றார். இதில்,

ஏடேறு மலர்க்கொன்றை அரவு தும்பை
இளமதியம் எருக்குவா னிழிந்த கங்கை
சேடெறிந்த சடையானைத் தேவர் கோவைச்
செம்பொன்மால் வரையானைச் சேர்ந்தார் சிந்தைக்
கேடிலியைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கிறிபேசி மடவார்பெய் வளைகள் கொள்ளும்
காடவனைக் கஞ்சனூர் ஆண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே (6)

என்பது ஆறாவது தமிழ் மணம் கமழும் வாடா நறுமலர். பாசுரங்கள் யாவும் 'கஞ்சனூர் ஆண்ட கோவைக் கற்பகத் தைக் கண்ணாரக் கண்டு உய்ந்தேனே' என்ற தொடரால் முடிகின்றன. இப்பதிகப் பாசுரங்களை பக்தியுடன் ஓதி நாமும் உய்யலாம்.

கஞ்சனூர்ப் பெருமானிடம் விடை பெற்றுக் கொண்டு கோடிக்கா[26] என்ற தலத்துக்கு வருகின்றார். இத்தலத்து

---

பூசித்த தலம். காவிரியின் வடகரையிலுள்ளது. ஹரதத் தாச்சாரிய சுவாமிகள் பழுக்கக் காய்ச்சிய பீடத்தின் மேலமர்ந்து சிவபரத்துவத்தையும் சைவ சமய மேன்மை யையும் நிலை நாட்டிப் பல வடமொழி நூல்கள் அருளிச் செய்த தலம். தென்குரங்காடுதுறை, திருமங்கலக்குடி இவற்றையொட்டிய தலம். அப்பர் பெருமான் கோடிக்கா சென்றபோது பாடியருளிய தலம் என்று தருமபுரப் பதிப்பு குறிப்பெழுதும்.

26. கோடிக்கா (திருகோடிக்காவல்): மயிலாடு துறை தஞ்சை இருப்பூர்தி வழியில் நாரசிங்கம் பேட்டை என்ற நிலையத்திலிருந்து 1 கல் தொலைவில் உள்ளது. கும்ப கோணத்திலிருந்து பேருந்து வசதி உண்டு.

எம்பெருமானை மூன்று பதிகங்கள் பாடிப் போற்றுகின்றார். ''நெற்றிமேற் கண்ணானே'' (4.51) என்று தொடங்கும் திருநேரிசைப் பதிகத்தின்,

அழல்உமிழ் அங்கை யானே
    அரிவையோர் பாகத் தானே
தழல்உமிழ் அரவம் ஆர்த்துத்
    தலைதனிற் பலிகொள் வானே
நிழல்உமிழ் சோலை சூழ
    நீர்வரி வண்டி னங்கள்
குழல்உமிழ் கீதம் பாடும்
    கோடிக்கா வுடைய கோவே. (7)

என்பது ஏழாவது பாடல். சங்குலா முன்கை (5.78) என்ற திருக்குறுந்தொகைப் பதிகத்தின்,

நாடி நாரணன் நான்முகன் வானவர்
தேடி யேசற வுந்தெரி யாததோர்
கோடி காவனைக் கூறாத நாளெலாம்
பாடி காவலிற் பட்டுக் கழியுமே (6)

என்பது ஆறாவது பாடல். இதன் 7, 8, 9 வது பாடல்கள் காணப்பெறவில்லை. ''கண்டலஞ்சேர் நெற்றி'' (6.81) என்ற திருத்தாண்டகப் பதிகத்தின்,

வண்டாடும் பூங்குழலாள் பாகன் கண்டாய்;
    மறைக்காட் டுறையும் மணாளன் கண்டாய்;
பண்டாடு பழவினைநோய் தீர்ப்பான் கண்டாய்;
    பரலோக நெறிகாட்டும் பரமன் கண்டாய்;
செண்டாடி அவுணர்புரம் செற்றான் கண்டாய்;
    திருவாரூர்த் திருமூலட் டானன் கண்டாய்;
கொண்டாடும் அடியவர்தம் மனத்தான் கண்டாய்;
    கோடிக்கா அமர்ந்துறையும் குழகன் தானே. (2)

என்பது இரண்டாவது திருத்தாண்டகம்.

கோடிக்கா குழகனிடம் விடைபெற்றுக்கொண்டு திருக்கோழம்பம்[27] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். 'வேழம்பத்தைவர்' (5.64) என்ற முதற் குறிப்புடைய திருக் குறுந்தொகைப் பதிகத்தால் இத்தலத்து ஈசனைச் சேவிக் கின்றார். இதில்,

முன்னை நான்செய்த பாவம் முதலறப்
பின்னை நான்பெரி தும்மருள் பெற்றதும்
அன்ன மார்வயற் கோழம்பத் துள்ளமர்
பின்னல் வார்சடை யானைப் பிதற்றியே (7)

ஏழாவது பாடல். அப்பர் பெருமானின் குறுந்தொகைகளில் இஃதொரு இனிய குறுந்தொகை. பாடிப் பயன்பெற வேண் டியது.

கோழம்பக் கூத்தனிடம் விடை பெற்றுக்கொண்டு ஆவடுதுறைக்கு[28] வருகின்றார். இந்தச் சுற்றில் இத்தலத்து ஈசனை நாவுக்கரசர் நான்கு திருப்பதிகங்களால் வழிபடு கின்றார். 'நம்பனை நல்வேத'(6.46) என்ற திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையில்,

ஒருமணியை உலகுக்கோர் உறுதி தன்னை
  உதயத்தின் உச்சியை உருமா னானைப்
பருமணியைப் பாலோ டஞ்சாடி னானைப்
  பவித்திரனைப் பசுபதியைப் பவளக் குன்றைத்

27. கோழம்பம்: நாரசிங்கம் பேட்டை இருப்பூர்தி நிலையத்திலிருந்து 2 கல் தொலைவு. காவிரியின் தென் கரைத் தலம். தென்குரங்காடுதுறை போன்ற தலங்களைச் சேவித்து வரும்போதுதான் இங்கு வந்திருப்பர். ஆவடுதண் துறை நோக்கிய திருப்பயணத்தில் இது பாடப்பெற்றி ருக்கும் (தருமபுரப் பதிப்பு)

28. ஆவடுதுறை (திருவாவடுதுறை): நாரசிங்கம் பேட்டையிலிருந்து கல் தொலைவு. கும்பகோணத்தி

திருமணியைத் தித்திப்பைத் தேன தாகித்
தீங்கரும்பின் இன்சுவையைத் திகழுஞ் சோதி
அருமணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. (5)

என்பது ஐந்தாவது பாசுரம். ''நிறைக்க வாலியள்'' (5.29) என்ற திருக் குறுந்தொகைப் பதிகத்தின்,

குழலும் கொன்றையும் கூவிள மத்தமும்
தழலும் தையலோர் பாகமாத் தாங்கினான்
அழகன் ஆவடு தண்டுறை யாவெனக்
கழலும் கைவளை காரிகை யாளுக்கே. (6)

என்பது ஆறாவது பாடல். இது தாய்ப் பாசுரமாக அமைந்துள்ளது. ஆவடு தண் துறையார்மீது காதல் கொண்ட தன் மகள் நிலையைத் தாய் விவரிப்பதாக நடை பெறுகின்றது இப்பதிகம்.

அடுத்து ''மஞ்சனே மணி'' (4.57) என்ற திருநேரிசைப் பதிகத்தால் வழிபடுகின்றார் வாகீசப் பெருமான். இதில்,

செறிவிலேன் சிந்தை யுள்ளே
சிவனடி தெரிய மாட்டேன்;
குறியிலேன்; குணமொன் றில்லேன்;
கூறுமா கூற மாட்டேன்;
நெறிபடு மதியொன் றில்லேன்;
நினையுமா நினைய மாட்டேன்;
அறிவிலேன்; அயர்த்துப் போனேன்;
ஆவடு துறையு ளானே. (7)

என்பது ஏழாவது திருப்பாடல்.

---

லிருந்து பேருந்து வசதி உண்டு. திருமூலநாயனார் திருமந்திரம் அருளிய தலம். சம்பந்தர் தமது தந்தையார் வேள்வி செய்தற் பொருட்டு இறைவனைப்பாடி 1000 பொன் பெற்று அதைக் கொடுத்த பாசுரம் (4.56:1) கூறும். திருவிசைப்பா பாடிய திருமாளிகைத் தேவர் தொடர்பும் இத் தலத்துக்கு உண்டு. திருவாவடுதுறை ஆதீனத் தலைமைத் திருமடம் இங்குள்ளது.

அடுத்து, "திருவேயென் செல்வமே" (6.47) என்ற முதற் குறிப்பையுடைய தாண்டகப் பதிகமும் ஆவடுதுறை அண்ணலை ஏத்துவதேயாகும். இதில்,

வரையார் மடமங்கை பங்கா கங்கை
மணவாளா வார்சடையாய் நின்றன் நாமம்
உரையா உயிர்போகப் பெறுவே னாகில்
உறுநோய்வந் தெத்தனையும் முற்றாலென்னே
கரையா நினைந்துருகிக் கண்ணீர் மல்கிக்
காதலித்து நின்கழலே யேத்தும் அன்பர்க்
கரையா அடியேனை அஞ்சேல் என்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (3)

என்பது மூன்றாவது தாண்டகம்.

ஆவடுதுறை அண்ணலிடம் விடைபெற்றுக் கொண்டு தென்குரங்காடு துறை[29] வருகின்றார். இரங்காவன் (5.63) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந்தொகைப் பதிகத் தால் வழிபடுகின்றார். இதில்,

நாடி நந்தம ராயின தொண்டர்காள்!
ஆடு மின்னழு மின்;தொழு மின்;னடி
பாடு மின்;பர மன்பயி லும்மிடம்
கூடு மின்;குரங் காடு துறையையே. (8)

என்பது எட்டாவது பாடல். "தொண்டர்களே, ஆடுங்கள்; அன்பினால் கரைந்து அழுங்கள்; பாடுங்கள்; குரங்காடு துறையைக் கூடுங்கள்" என்கின்றார்.

---

29. தென்குரங்காடுதுறை (ஆடுதுறை): ஆடுதுறை என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து ½ கல் தொலைவு. காவிரி நதியின் தென்கரையிலிருப்பதால் இது தென்குரங் காடு துறை எனத் திருநாமம் பெற்றது. வடகுரங்காடு துறைக்கு வடகிழக்கில் உள்ளது இத்தலம். சுக்கிரீவன் பூசித்த தலம்.

குரங்காடுதுறைக் கூத்தனிடம் விடைபெற்றுக் கொண்டு, இடைமருதூர்[30] என்ற திருத்தலத்தை அடைகின்றார் அப்பர் பெருமான். ஐந்து பதிகத்தால் இடைமருதூர் இடங் கொண்ட ஈசனைப் பாடி ஏத்துகின்றார். ''காடுடைச் சுடலை''(4.35) என்ற முதற் குறிப்பையுடைய பதிகத்தில்,

வேதங்கள் நான்கும் கொண்டு
விண்ணவர் பரவி ஏத்தப்
பூதங்கள் பாடி யாடல்
உடையவன் புனிதன் எந்தை
பாதங்கள் பரவி நின்ற
பத்தர்கள் தங்கள் மேலை
ஏதங்கள் தீர நின்றார்
இடைமரு திடங்கொண் டாரே. (5)

என்பது ஐந்தாவது திருநேரிசை. ''பாசமொன்றிலராய்''(5.14) என்று தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

இம்மை வானவர் செல்வம் விளைந்திடும்
அம்மை யேற்பிற வித்துயர் நீத்திடும்
எம்மை யாளும் இடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார்வினை சிந்துமே. (4)

என்பது நான்காவது திருப்பாடல். ''பறையின் ஓசையும்'' (5.15) என்ற திருக்குறுந்தொகைப் பதிகமும் இடை மருதூர் மன்னியுறையும் எம்பெருமானை ஏத்தும் திருப் பாடல்களைக் கொண்டது. இதில் ஆறு பாடல்களே கிடைத்துள்ளன.

---

30. இடைமருதூர் (திருவிடைமருதூர்): இப்பெயர் கொண்ட இதுமயிலாடுதுறை-தஞ்சைஇருப்பூர்தி நிலையம். வரகுண பாண்டியன் பெரும்புகழ் வரலாற்றுத் தொடர் புடையது. பட்டினத்தார் வழிபட்ட தலம். அவர் அருளிய மும்மணிக் கோவை பெற்றது. இங்குத் தைப்பூசத்தன்று காவிரியில் நீராடுதல் சிறந்தது. (சம்பந்தர் 2.57:5; அப்பர் 5.14;1)

மனத்துள் மாயனை மாசறு சோதியைப்
புனிற்றுப் பிள்ளை வெள்ளையம் மதிசூடியை
எனக்குத் தாயை எம்மானிடை மருதனை
நினைத்திட் டூறி நிறைந்ததென் உள்ளமே. (2)

*என்பது* இரண்டாவது *பாடல்.*

''சூலப்படையுடையார்'' (6.16) *என்று தொடங்கும் திருத்தாண்டகப் பதிகத்தில்,*

வேதங்கள் வேள்வி பயந்தார் போலும்
 விண்ணுலகும் மண்ணுலகும் ஆனார் போலும்
பூதங்க ளாய புராணர் போலும்
 புகழ்வளர் ஒளியாய் நின்றார் போலும்
பாதம் பரவப் படுவார் போலும்
 பத்தர்களுக் கின்பம் பயந்தார் போலும்
ஏதங்க ளான கடிவார் போலும்
 இடைமருது மேவிய ஈச னாரே. (3)

*என்பது மூன்றாவது தாண்டகம்.* **''ஆறுசடைக் கணிவர்''** *(6.17) என்ற திருத்தாண்டகப் பதிகமும்* இடைமருது**மேவி** *இடங்கொண்ட ஈசனைப் போற்றுவதே.*

பச்சை நிறமுடையர் பாலர் சாலப்
 பழையர் பிழையெலாம் நீக்கி யாள்வர்
கச்சைக் கதநாகம் பூண்ட தோளர்
 கலனொன்று கையேந்தி இல்லம் தோறும்
பிச்சைக் கொளநுகர்வர் பெரியர் சாலப்
 பிறங்கு சடைமுடியர் பேணுந் தொண்டர்
இச்சை மிகஅறிவர் என்று முள்ளார்
 இடைமருது மேவி இடம்கொண் டாரே (7)

*என்பது* இப்பதிகத்தின் ஏழாவது *தாண்டகம்.*

இடைமருதூர் எம்பெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு வாகீசர் நாகேச்சரம்[31] என்னும் திருத்தலத்தை அடைகின்றார். திருநாக ஈச்சரவனாரை அப்பர் பெருமான் மூன்று பதிகங்களால் வழிபடுகின்றார். "கச்சைசேர் அரவர்" (4.66) என்ற திரு நேரிசைப் பதிகத்தில்,

கற்றுணை வில்ல தாகக்
    கடியரண் செற்றார் போலும்
பொற்றுணைப் பாதர் போலும்
    புலியத ளுடையார் போலும்
சொற்றுணை மாலை கொண்டு
    தொழுதெழு வார்கட் கெல்லாம்
நற்றுணை யாவர் போலும்
    நாகஈச் சரவ னாரே. (3)

என்பது மூன்றாவது பாசுரம். "நல்லர் நல்லதோர்" (5.52) என்ற திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

மானை ஏந்திய கையினர் மையறு
ஞானச் சோதியர் ஆதியர் நாமம்தான்
ஆன அஞ்செழுத் தோதவந் தண்ணிக்கும்
தேனர் போல்திரு நாகேச் சரவரே. (7)

என்பது ஏழாவது திருப்பாசுரம். "தாயவனை வானோர்க்கும்" (6.66) என்ற திருத்தாண்டகப் பதிகத்தில்,

---

31. நாகேச்சரம் (திருநாகேஸ்வரம்): மயிலாடுதுறை தஞ்சை இருப்பூர்தி வழியிலுள்ள திருநாகேஸ்வரத்திலிருந்து 1 கல் தொலைவிலுள்ளது. கும்பகோணத்திலிருந்து பேருந்து வசதி உண்டு. சேக்கிழாரடிகள் பெரிதும் ஈடுபட்ட தலம். தாம் குன்றத்தூரில் கட்டிய ஆலயத்திற்கும் திருநாகேஸ்வரம் என்றே பெயரிட்டனர். சூரியன், சந்திரன், ஐந்தலை நாகம் பூசித்ததைப் பாசுரம் (அப்பர் 5.52:4) கூறும்.

துறந்தானை அறம்புரியாத் துரிசர் தம்மைத்
தோத்திரங்கள் பலசொல்லி வானோர் ஏத்த
நிறைந்தானை நீர்நிலந்தீ வெளிகாற் றாகி
நிற்பனவும் நடப்பனவும் ஆயி னானை
மறந்தானைத் தன்நினையா வஞ்சர் தம்மை
அஞ்செழுத்தும் வாய்நவில வல்லோர்க் கென்றும்
சிறந்தானைத் திருநாகேச் சரத்துளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. (6)

என்பது ஆறாவது திருத்தாண்டகம்.

நாகேச்சரத்து நம்பெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு திருச்சத்திமுற்றத்தைச்[32] சென்றடைகின்றார். "கோவாய் முடுகியடு"(4.96) என்ற திருப்பதிகத்தில்,

கோவாய் முடுகி யடுதிறற்
கூற்றம் குமைப்ப தன்முன்
பூவா ரடிச்சுவடு என்மேல்
பொறித்துவை போக விடில்
மூவா முழுப்பழி மூடுங்
கண்டாய் முழங்கும் தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத்
துறையும் சிவக்கொ ழுந்தே. (1)

என்பது இப்பதிகத்தின் முதற் பாடல். இதில் "எம் பெருமானே, கொல்லுந் தொழிலையுடைய கூற்றுவன் என் உயிரை இவ்வுடம்பினின்று பிரித்து வருத்துவதற்கு முன்னமே நின்னுடைய செந்தாமரை போலும் அழகிய திருவடிகளை என் சென்னிமீது சூட்டியருள்வாயாக"

32. சத்திமுற்றம்: தாராசுரத்திலிருந்து 2 கல் தொலைவு. சக்தி சிவத்தை முத்தமிட்ட தலம். இத்தலத்தில் திருவடி தீட்சை விண்ணப்பித்த அப்பர் பெருமானுக்கு அது நல்லூரில் கிடைத்தது. பாடலில் 'சத்தி முற்றம்' என்று வருகின்றது.

என்று மலை மகளாகிய உமையம்மையின் அன்பிற் சிறந்த பூசனையை ஏற்று மகிழும் சிவக்கொழுந்தீசரை இறைஞ்சு கின்றார். இவ் வேண்டுகோளைக் கேட்டருளிய சிவ பெருமான் நாவுக்கரசரை, "நல்லூருக்கு வா" எனப் பணித் தருள்கின்றார்.

இந்தச் செய்தியைச் சேக்கிழார் பெருமான்,

'கோவாய் முடுகி' என்றெடுத்துக்
கூற்றம் வந்து குமைப்பதன்முன்
பூவா ரடிகள் என்றலைமேல்
பொறித்து வைப்பாய்' எனப்புகன்று
நாவார் பதிகம் பாடுதலும்
நாதன் தானும் 'நல்லூரில்
வாவா' என்றே அருள் செய்ய
வணங்கி மகிழ்ந்து வாகீசர்[33]

என்று குறிப்பிடுவர். 'நல்லூருக்கு வா' என்ற அருள் மொழிகேட்டு அகமகிழ்ந்த அப்பர் பெருமான் சிவக் கொழுந்தீசரை மகிழ்ந்து அவர் அருளிபாடிட்ட வண்ணம் திருநல்லூரை[34] அடைகின்றார். நல்லூரிறைவனை வணங்கி மகிழ்கின்றார். அப்பொழுது சிவபெருமான், "நின் நினைப் பை முடிக்கின்றோம்" என நாவுக்கரசருக்கு உணர்த்தி அவர் தம் சென்னிமிசைத் தம் திருப்பாத மலரைச் சூட்டியருள் கின்றார். அப்பர் பெருமான் இறைவனின் பெருந்

---

33. பெ. பு. திருநாவுக். 194

34. நல்லூர்: மயிலாடு துறை - தஞ்சை இருப்பூர்தி வழியிலுள்ள சுந்தரப் பெருமாள் கோயில் என்ற நிலையத்தி லிருந்து 2 கல் தொலைவிலுள்ளது. அப்பர் திருவடி தீட்சை பெற்ற தலம். அமர்நீதி நாயனார் இறைவன் தந்த கோவணத்திற்குப் பதிலாகத் தாமும் புதல்வனும் மனைவி யும் தராசேறிக் கோவணக் குவியலோடு அர்ப்பணம் செய்த தலம். இவ்விரண்டையும் முறையே அப்பரின் 6.14 என்ற தாண்டகப் பதிகத்திலும் 4.97:7 ஆம் பாடலிலும் காண லாம்.

*கருணைத் திறத்தை வியந்து* "நினைந்துருகும் அடியாரை" *(6.14) என்ற திருத்தாண்டகச் செந்தமிழ் மாலை பாடிப் பரவிப் போற்றுகின்றார்.*

நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்;
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்;
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்;
செழுமதியின் தளிர்வைத்தார்; சிறந்து வானோர்
இனந்துருவி மணி மகுடத் தேறத் துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்;
நல்லூர்எம் பெருமானார் நல்லவாறே. (1)

*என்பது இப்பதிகத்தின் முதல் தாண்டகம். இப்பதிகப் பாசுரங்களின் இறுதிதோறும் 'திருவடி என் தலைமேல் வைத்தார் நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே' எனத் திருநல்லூர் இறைவன் திருவடி தீட்சை யருளிய அற்புத நிகழ்ச்சியை நினைந்துருகிப் போற்றியுள்ளமையைக் கண்டு மகிழலாம். இதனைச் சேக்கிழார் பெருமான் 'தனம் பெரிதும் பெற்றுவந்த வறியோன்போல் மனந் தழைத் தார்'*[35] *என்று போற்றுவார்.*

*இதனையடுத்து* "அட்டுமினில் பலி" *(4.97) என்ற திருவிருத்தப் பதிகத்தாலும் வழிபடுகின்றார். இஃது அகத் துறையிலமைந்தது. தலைவி தனது நிலையைத் தோழிக் குரைப்பதாக அமைந்துள்ளது. இதில்,*

தேற்றப் படத்திரு நல்லூ
ரகத்தே சிவனிருந்தால்
தோற்றப் படக்சென்று கண்டுகொள்
ளார்தொண்டர் துன்மதியால்
ஆற்றிற் கெடுத்துக் குளத்தினில்
தேடிய ஆதரைப்போல்
காற்றிற் கடுத்துல கெல்லாத்
திரிதர்வர் காண்பதற்கே. (6)

---

*35. பெ. பு : திருநாவுக். 196*

என்பது ஆறாவது பாடல். 'நல்லூரில் உள்ள சிவபெருமான் தொண்டர் கண்களில் அகப்படான். ஆற்றில் பொருளைத் தவறவிட்டுக் குளத்தில் தேடும் ஆதரைப்போல், உலகெல்லாம் திரிவர்' என்கின்றார்.

நாட்கொண்ட தாமரைப் பூத்தடஞ்
சூழ்ந்த நல் லூரகத்தே
கீட்கொண்ட கோவணம் காவென்று
சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியொடும்
அங்கோர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை யுரைக்குமன்
றோஇவ் அகலிடமே. (7)

என்பது ஏழாவது பாடல். 'கோவணத்தைக் காத்துத் தா என்று சொல்லி' வஞ்சனையால் ஒரு வாணிகனை மனைவியொடும் ஆட்கொண்ட இடம் அன்றோ இவ்வூர்?' என்று சொல்லுகின்றாள் தோழியிடம். 'வாணிகனை (அமர்நீதி நாயனாரை) ஏமாற்றியதுபோல் நம்மையும் ஏமாற்றுவர்' என்பது குறிப்பு.

சில நாட்கள் நல்லூரிலேயே தங்கிக் கைத்தொண்டு செய்து வருகின்றார். இந்நாட்களில் மேலும் சில திருத்தல வழிபாட்டைத் தொடர எண்ணிக் கருகாவூர்[36] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். "குருகாம் வயிரமாம்" (6.15) என்ற திருத்தாண்டகப் பதிகத்தால் கருகாவூர் எந்தையைப் போற்றி மகிழ்கின்றார்.

வித்தாம் முளையாகும் வேரே தானாம்
வேண்டும் உருவமாம் விரும்பி நின்ற
பத்தாம் அடியார்க்கோர் பாங்கனு மாம்பால்
நிறமு மாம்பரஞ் சோதி தானாம்

36. கருகாவூர் (திருக்களாவூர்): மயிலாடுதுறை-தஞ்சாவூர் இருப்பூர்திப் பாதையில் உள்ள பாபநாசம் என்ற நிலையத்திலிருந்து 4 கல் தொலைவில் உள்ளது. இக்காலத்தில் பேருந்து வசதிகள் ஏற்பட்டிருக்கலாம்.

தொத்தாம் அமரர்கணஞ் சூழ்ந்து போற்றத்
தோன்றாதென் உள்ளத்தி னுள்ளே நின்ற
கத்தாம் அடியேற்குக் காணா காட்டும்
கண்ணாம் கருகாவூர் எந்தை தானே. (2)

என்பது இரண்டாவது திருத்தாண்டகம். அடுத்து ஆவூர்[37] வருகின்றார். அவ்வூர் இறைவனை வழிபடுகின்றார் (பதிகம் இல்லை).

ஆவூர்ப் பசுபதீஸ்வரரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு பாலைத்துறை[38] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். "நீலமாமணி கண்டத்தர்" (5.51) என்ற திருக்குறுந் தொகைப் பதிகம் பாடிப் பாலைத்துறை அப்பனைப் பரவிப் போற்றுகின்றார்.

தொடரும் தொண்டரைக் துக்கந் தொடர்ந்துவந்
தடரும் போதர னாயருள் செய்பவர்
கடலின் நஞ்சணி கண்டர் கடிபுனம்
படரும் செஞ்சடைப் பாலைத் துறையரே. (8)

என்பது இப்பதிகத்தின் எட்டாம் பாடல்.

திருப்பாலைத்துறை ஈசனிடம் விடைபெற்றுக் கொண்டு அவளிவணல்லூர்[39] வருகின்றார். வந்தவர் 'தோற்றினான்' (4.59) என்ற முதற் குறிப்பினையுடைய செந்தமிழ்த் திருநேரிசைமாலையால் வழிபடுகின்றார்.

---

37. ஆவூர்ப் பசுபதீச்சரம் : சுந்தரப் பெருமாள் கோயில் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 4 கல் தொலைவிலுள்ளது. சம்பந்தரால் பாடல் பெற்ற தலம்.

38. பாலைத்துறை : பாபநாசம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 1 கல் தொலைவிலுள்ளது.

39. அவளிவ ணல்லூர் : நாகூர், தஞ்சை இருப்பூர்தி வழியில் கோயில் வெண்ணி (நீடாமங்கலத் தருகிலுள்ளது) என்ற நிலையத்திலிருந்து 5 கல் தொலைவு. இத்தலத்திற்கு அப்பர் பெருமான் வந்த சூழலும் பாடிய சூழலும் அறியக் கூடவில்லை.

நன்மைதான் அறிய மாட்டான்
நடுவிலா அரக்கர் கோமான்
வன்மையே கருதிச் சென்று
வலிதனைச் செலுத்த லுற்றுக்
கன்மையான் மலையை யோடிக்
கருதித்தான் எடுத்து வாயால்
அம்மையோ என்ன வைத்தார்
அவளிவ ணல்லூ ராரே. (6)

என்பது ஆறாவது நறுமலர். இப்பதிகம் முழுவதும் இராவணன் வரலாறு கூறப் பெறுகின்றது; ஆணவம் மிக்க இராவணனின் அவலநிலை சித்திரிக்கப் பெறுகின்றது.

அவளிவணல்லூர் இறைவனிடம் விடைபெற்றுக் கொண்டு வெண்ணியூர்[40] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். இத்தலத்துப் பெருமானை இரண்டு செந்தமிழ் மாலைகளால் வழிபடுகின்றார். 'முத்தினை' (5.17) என்று தொடங்கும் திருக்குறுந்தொகைப் பாமாலையால் முதலில் வழிபடுகின்றார்.

வெண்ணித் தொல்நகர் மேயவெண் திங்களார்
கண்ணித் தொத்த சடையார் கபாலியார்
எண்ணித் தம்மை நினைத்திருந் தேனுக்கு
அண்ணித் திட்டமு தூறுமென் நாவுக்கே (2)

என்பது இரண்டாவது நறுமலர். 'தொண்டிலங்கும்' (6.59) என்ற திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையில்,

வீடுதனை மெய்யடியார்க் கருள்செய் வாரும்
வேலைவிடம் உண்டிருண்ட கண்டத் தாரும்
கூடலர்தம் மூவெயிலும் எரிசெய் தாரும்
குரைகழலாற் கூற்றுவனைக் குமைசெய் தாரும்

---

40. வெண்ணியூர் (கோயில் வெண்ணி): கோயில் வெண்ணி என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து ½ கல் தொலைவு. வெண்ணியூர்க்காக அப்பர் வந்த விவரங்கள் குறித்துத் தெளிவாக அறிய முடியவில்லை.

ஆடுமர வரைக்கசைத்தங் காடு வாரும்
ஆலமர நீழலிருந் தறஞ்சொன் னாரும்
வேடுவனாய் மேல்விசயற் கருள்செய் வாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. (6)

என்பது ஆறாவது தமிழ்மணம் கமழும் வாடா நறுமலர்.

வெண்ணியமர்ந்துறைகின்ற விகிர்தனாரிடம் விடை பெற்றுக் கொண்டு திருப்பூவனூர்[41] வருகின்றார் திருநாவுக்கரசு. 'பூவனூர்ப் புனிதன்' (5.65) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந்தொகைப் பாமாலையால் வழிபடுகின்றார். இதில்,

அனுச யப்பட்ட துவிது வென்னாதே
கனிம னத்தொடு கண்களும் நீர்மல்கிப்
புனித னைப்பூவ னூரனைப் போற்றுவார்
மனித ரில்தலை யான மனிதரே. (9)

என்பது ஒன்பதாவது பாமலர். பின்னர் நல்லூர்க்கே திரும்பிவிடுகின்றார். நல்லூரினின்று புறப்பட்டுத் திருப் பழனத்திற்கு[42] வருகின்றார். ஐந்து பதிகங்களால் இத் தலத்து இறைவனை வழிபடுகின்றார். அகத்துறைப் பதிகத்தால் (4.12) வழிபட்டதை அடுத்த இயலில் காட்டு வேன். ''ஆடினார் ஒருவர் போலும்' (4. 36) என்ற திரு நேரிசைப் பதிகத்தின்,

---

41. திருப்பூவனூர் : நீடாமங்கலம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 4 கல் தொலைவு.

42. பழனம் (திருப்பழனம்): தஞ்சையிலிருந்து 10 கல் தொலைவிலுள்ளது. சப்தஸ்தான தலங்களுள் ஒன்று. காவிரிக் கரையிலுள்ளது. ஐயாற்றிலிருந்து இத்தலத்திற்கு ஏகும் பாதையில் அப்பூதி அடிகள் தொண்டு செய்த திங்களூர் உள்ளது.

ஆலின்கீழ் அறங்க ளெல்லாம்
அன்றவர்க் கருளிச் செய்து
நூலின்கீழ் அவர்கட் கெல்லாம்
நுண்பொரு ளாகி நின்று
காலின்கீழ்க் காலன் தன்னைக்
கடுகத்தான் பாய்ந்து பின்னும்
பாலின்கீழ் நெய்யு மானார்
பழனத்தெம் பரம னாரே. (1)

என்பது ஏழாவது திருப்பாடல். "மேவித்து நின்று" (4.87) என்ற திருவிருத்தப் பதிகத்துள்,

எரித்துவிட்டாய் அம்பினால்
புரமூன்றும் முன்னேபடவும்
உரித்து விட்டாய் உமையாள்
நடுக்கெய்தவோர் குஞ்சரத்தைப்
பரித்து விட்டாய் பழனத்தரசே
கங்கைவார் சடைமேல்
தரித்து விட்டாய் அடியேனைக்
குறிக்கொண் டருளுவதே. (4)

என்பது நான்காவது பாடல். "அருவனாய் (5.35) என்ற முதற் குறிப்பினையுடைய திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

வையம் வந்து வணங்கி வலம்கொளும்
ஐயனை யறியா தார்சிலர் ஆதர்கள்
பைகொளா டரவார்த்த பழனன்பால்
பொய்யர் காலங்கள் போக்கிடு வார்களே (2)

என்பது இரண்டாவது பாடல்.

"அலையார்கடல்" (6.36) என்று தொடங்கும் திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையில்,

வெள்ளம் தருசடைமேல் ஏற்றார் தாமே;
மேலார்கண் மேலார்கண் மேலார் தாமே;
கள்ளம் கடிந்தென்னை யாண்டார் தாமே;
கருத்துடைய பூதப் படையார் தாமே;
உள்ளத் துவகை தருவார் தாமே;
உறுபசிநோய் சிறுபிணிகள் தீர்ப்பார் தாமே;
பள்ளப் பரவைநஞ் சுண்டார் தாமே;
பழன நகரெம் பிரானார் தாமே (2)

என்பது இரண்டாவது வாடா நறுமலர். திருப்பழன வழிபாட்டை முடித்துக்கொண்டு அருகேயுள்ள சில தலங்களைச் சேவிக்கும் கருத்துடன் திங்களூர்[43] வழியாகச் செல்ல நேரிடும்போது அப்பூதியடிகளின் தோழமை ஏற்படுகின்றது. இதனை அடுத்துக் காண்போம்.

---

43. அப்பூதியடிகள் பிறந்து வாழ்ந்த ஊர்.

# 9. அப்பூதியடிகளுடன் தொடர்பு

நல்லூரில் சிவபெருமானால் திருவடி சூட்டப்பெற்ற திருநாவுக்கரசர் அத்தலத்தில் சில நாட்கள் தங்கியிருக் கின்றார். இந்நாட்களில் கருகாவூர், ஆவூர், பாலைத் துறை முதலிய தலங்களை வழிபடுகின்றார். பின்பு நல்லூரி னின்றும் புறப்பட்டுத் திருப்பழனம்[1] சென்று அத்தலத்துப் பெருமானை வழிபட்டு அருகேயுள்ள பல தலங்களை இறைஞ்ச எண்ணித் திங்களூர் வழியாகச் செல்லுகின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

பொருப்பரையன் மடப்பிடியின்
　　உடன்புணரும் சிவக்களிற்றின்
திருபழனம் பணிந்துபணி
　　செய்திருநா வுக்கரசர்
ஒருப்படுகா தலிற்பிறவும்
　　உடையவர்தம் பதிவணங்கும்
விருப்பினொடுந் திங்களூர்
　　மருங்குவழி மேவுவார்[2]

என்று காட்டுவார்.

இவ்வாறு சென்று கொண்டிருக்கும்போது தண்ணீர்ப் பந்தல் ஒன்றைக் காண்கின்றார். அதன் கண் 'திருநாவுக் கரசர் தண்ணீர்ப் பந்தல்' என்று எழுதப் பெற்றிருந்தது.

---

1. முன்னர் சொல்லப் பெற்றது. பக்கம் 109 காண்க.
2. திங்களூர் அப்பூதியடிகளூர் (பெ.பு.திருநாவுக்.200)

இன்னும் பல இடங்களில் 'திருநாவுக்கரசர்' என்ற பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. "இத் தண்ணீர்ப் பந்தரை இப் பெயருடன் இங்கு அமைத்தவர் யார்?" என்று அருகிலிருந் தவர்களை நோக்கி வினவுகின்றார். அது கேட்டு அங்கு உள்ளவர்கள், "இத்தண்ணீர்ப் பந்தருடன் இவ்விடத்து எங்கும் உள்ள கிணறு, குளம், அறச் சாலைகள், இள மரக் காக்கள் முதலிய எல்லாவற்றையும் அந்தணரில் மேம்பட்ட அப்பூதியடிகள் என்பார் திருநாவுக்கரசர் பெயராலேயே செய்தமைத்தார்" என்று கூறுகின்றனர்.

நாவுக்கரசர் பெருமான் "இவ்வறங்களைச் செய்து வரும் அப்பூதியடிகள் எவ்விடத்தார்?" என்று வினவு கின்றார். "அந்த அந்தணர் பெருமான் திங்களூரில் வாழ் பவரே. இப்பொழுதுதான் இங்கிருந்து தம் இல்லத்திற்குச் சென்றுள்ளார். அவர் இல்லமும் அணித்தேயுள்ளது" என்று அருகிலிருந்தவர்கள் மறுமொழி பகர்கின்றனர். இதனைக் கேட்ட அப்பர் பெருமான் அந்தணர் பெருமானின் திருமாளிகைக்கு எழுந்தருளுகின்றார்.

கயிலைநாதரின் தமராகிய அவரது வருகையை உணர்ந்த அப்பூதியடிகள், அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்குகின்றார். "என்ன மாதவம் செய்ததோ இச்சிறுகுடில்? அருளுருவாய தாங்கள் அடியேன் குடிலுக்கு எழுந்தருளியது என் முன்னைத் தவப் பயனே" என மகிழ்ந்து உரைக்கின்றார். "நாம் திருப்பழனத் திறைவனை வணங்கி வழிபட்டு வரும்பொழுது வழியிலே நீர் நிறுவி யுள்ள தண்ணீர்ப் பந்தரைக் கண்டும், இங்ஙனம் நீர் செய்து வரும் பிற அறங்களைப் பற்றி நல்லோர் பலர் மூலம் கேட்டும் நும்மைக் காண விரும்பி இங்கு வந்தோம்" எனக் கூறுகின்றார்.

மேலும், "சிவனடியார்கள் பொருட்டு நீர் வைத்த தண்ணீர்ப் பந்தரிலே நும்முடைய பெயரை எழுதாது

வேறொருவர் பெயரை எழுதியதற்குக் காரணம் யாது? அதனைக் கூறுவீராக'' என அப்பூதியடிகளை வினவுகின்றார் நாவுக்கரசர். இவ்வுரை கேட்டு நிறையழிந்த சிந்தையராகின்றார் அப்பூதியடிகள். தம்முன் நிற்கும் சிவனடியாரை நோக்கி, ''நீர் நன்மொழிகளை அருளிச் செய்திலீர். பழி பாவங்கட்கு நாணாத இயல்புடைய சமணப் பதகருடன் கூடிப் பல்லவ மன்னன் செய்த சூழ்ச்சிகளையெல்லாம் திருத்தொண்டின் உறைப்பாலே வென்றருளிய மெய்த் தொண்டராகிய திருநாவுக்கரசரின் திருப்பெயரோ வேறொருவர் பெயர்? நம்மை ஆளாகவுடைய சிவபெருமானது திருவடிக்குவிரும்பிப் புரியும் திருத்தொண்டினாலே இப்பிறப்பிலேயே இடர்களையெல்லாம்வென்று உய்யலாம் என்னும் பேருண்மையை அடியேனைப் போன்ற எளியோர்களும் தெளிந்து உய்யும் வண்ணம் சிவத்தொண்டு புரிந்த திருநாவுக்கரசரது திருப்பெயரை அடியேன் எழுத நீர் இக் கொடு மொழியை அடியேன் கேட்கும்படி கூறினீர்.பொங்கி எழும் கருங்கடலிலே கல்லையே தெப்பமாகக் கொண்டு கரையேறிய அவருடைய பெருமையை அறியாதார் யாருளர்? மங்கலமாம் திருவேடத்துடன் நின்று இம்மொழி பேசிய நீர் எங்குறைவீர்? நீர்தாம் யார்? இயம்புவீர்'' என வெகுண்டு உரைக்கின்றார்[3].

இங்ஙனம் திருமறையோர் சினமுற்று மொழிந்ததைக் கேட்டு அவரது அன்பின் திறத்தை அறிந்த நாவுக்கரசர், ''புறச்சமயத்தினின்று மீளும் பொருட்டு இறைவன் சூலை நோயினைத் தந்து ஆட்கொள்ள அடைந்து உய்ந்த தெளிந்த உணர்வற்ற சிறுமையேன் அடியேன்'' என மறுமொழி தருகின்றார். இவ்வுரை கேட்ட அப்பூதியடிகள் தம்முடைய குல தெய்வமாகிய திருநாவுக்கரசரே இங்கு எழுந்தருளினாரெனத் தெளிகின்றார். பெருமகிழ்ச்சியுறுகின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

3, பெ. பு : அப்பூதியடிகள் 13—15.

அரசறிய உரைசெய்த
    அப்பூதி அடிகள்தாம்
கரகமல மிசைகுவியக்
    கண்ணருவி பொழிந்திழிய
உரைகுழறி உடம்பெல்லாம்
    உரோமபுள கம்பொழியத்
தரையின்மிசை வீழ்ந்தவர்தம்
    சரணகம லம்பூண்டார்.[4]

என்று காட்டுவார். மனைவி மக்கள் முதலிய சுற்றத் தாருடன் நாவுக்கரசரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கு கின்றார்.[5] தம் இல்லத்தில் திருவமுது செய்தருள வேண்டும் என்று வேண்டுகின்றார். அப்பரும் அவருடைய பேரன்புக்கு இசைந்தருளுகின்றார்.

அப்பூதியடிகள் விரும்பிய வண்ணம் அவருடைய இல்லத்தரசி அறுசுவையும் பொருந்தும்படி தூயநற் கறிக ளாக்கி இனிய திருவமுது சமைக்கின்றார். நாவுக்கரசர் திருவமுது செய்தருள்வதற்குத் தோட்டத்திற்குச் சென்று வாழைக் குருத்தை அரிந்து வரும்படித் தம் அருமைத் திருமகன் மூத்த திருநாவுக்கரசனை அனுப்புகின்றார். அவனும் "நல்ல தாய் தந்தை ஏவ நான் இது செய்யப் பெற்றேன்" என்னும் உவகையுடன் இல்லத்துத் தோட்டத் திற் புகுந்து வாழைக் குருத்தை அரிகின்றான். அப்பொழுது அதன் அடியில் மறைந்திருந்த பாம்பு அவனைத் தீண்டிக் கையில் சுற்றிக் கொள்கின்றது. அவன் அரவத்தை விரை வில் உதறி வீழ்த்திவிட்டு விடவேகத்தால் தான் கீழே வீழ் வதற்குமுன் தான் கொய்த குருத்தினை வீட்டிற் சேர்க்கும் கருத்துடன் விரைந்தோடி வருகின்றான். "அரசர் அமுது செய்வதற்குத் தடையாக அரவம் தீண்டிய செய்தியைத் தாய் தந்தையர்க்குச் சாற்றுதல் கூடாது" என்னும் துணி

4. ஷை - 17.
5. ஷை - 20.

வுடன் இல்லத்தை அடைகின்றான். நஞ்சின் ஏழாம் வேகம் தலைக்கேறுதலால் உரைகுழறிக் கண்ணும் மேனியும் கருகத் தான் கொணர்ந்த வாழைக் குருத்தைத் தாயிடம் சேர்ப்பித்து மயங்கித் தரையில் வீழ்கின்றான்.

இங்ஙனம் தளர்ந்து தரையில் வீழும் மகனை நோக்கிய அவன் பெற்றோர்கள் அவன் உடலில் குருதி வழியும் நிலையினையும் விடம் சென்னிக்கேறி இறந்த அடையாளத்தையும் கண்டு ''திருநாவுக்கரசர் திருவமுது செய்தருள்வதற்குத் தடையாகுமே'' எனப் பெரிதும் கலக்கமடைகின்றனர். மகன் மரித்த செய்தி சிறிதும் புலனாகாதபடி அடிகளை அமுது செய்விக்கும் உறுதியுடன் பெறலரும் புதல்வன் உடலைப் பாயினுள் வைத்து மூடி இல்லத்தின் புறத்தே ஒரு பக்கத்தில் மறைத்து வைக்கின்றனர். அமுது செய்யக் காலம் தாழ்க்கின்றதென்ற கவலையுடன் திருநாவுக்கரசரை அடைந்து இறைஞ்சி நின்று, ''எம்குடி முழுவதும் உய்யக் கொள்வீர், அமுது செய்ய எழுந்தருள வேண்டும்'' என அழைக்கின்றனர்.

**விடந்தீர்த்தல் :** நாவுக்கரசர் அதற்கிசைந்து எழுந்து சென்று ஆசனத்தில் அமர்கின்றார். அப்பூதியடிகட்கும் அவரது இல்லத்தரசியார்க்கும் திருநீறு அளிக்கின்றார். அவர்தம் புதல்வர்க்கு வழங்கும்போது மூத்த திருநாவுக்கரசனைக் காணாது அப்பூதியடிகளை நோக்கி, ''நும் மூத்த மகனை இவண் வர அழையும்'' என்கின்றார். ''இப்போது இங்கு அவன் உதவான்'' என்கின்றார் அப்பூதியார். இவ்வுரை கேட்ட நாவுக்கரசரின் செவ்விய திருவுள்ளத்தில் ஒருவிதத் தடுமாற்றம் உண்டாகின்றது. அப்பர் பெருமான் அப்பூதியாரை நோக்கி, ''என்னுள்ளம் இவ்வுரை கேட்கப் பொறாது; ஏதோ வேண்டாதது நிகழ்ந்துள்ளது. நிகழ்ந்ததை நேர்மையுடன் உரைப்பீராக'' என்று பணிக்கின்றார். அப்பூதியடிகள் அஞ்சி நடுக்கமுற்று ''அடியார் அமுது செய்யத் தடையாயிருப்பினும் நிகழ்ந்தது கூறலே

முறை'' எனக் கருதித் தன் மைந்தனுக்கு நேர்ந்த துயர் நிலையைக் குறிப்பிடுகின்றார். இத் துயரச் செய்தியை உணர்ந்த நாவுக்கரசர், ''நீர் செய்தது மிக நன்றாயுள்ளது! இவ்வாறு வேறு யார் செய்வார்?'' என்று கூறி எழுந்து சென்று உயிர் நீத்த மூத்த திருநாவுக்கரசின் உடம்பினைத் திருக்கோயிலின் முன் கொணரச் செய்து அந்த உடலை நோக்கிச் சிவபெருமான் அருள்புரியும் வண்ணம் ''ஒன்று கொலாமவர்''(4.18) என்ற முதற் குறிப்பினையுடைய செந் தமிழ்த் திருப்பதிகம் பாடுகின்றார்.

ஒன்று கொலாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்று கொலாமுய ரும்மதி சூடுவர்
ஒன்று கொலாமிடு வெண்டலை கையது
ஒன்று கொலாமவர் ஊர்வது தானே. (1)

என்பது முதற் பாடல். அருளுருவாகிய சிவபெருமானின் திருமேனிக்கண் அமைந்த அளப்பரிய தோற்றங்களை ஒன்று முதல் பத்து ஈறாக வைத்து எண்ணும் நிலையில் பத்துப் பாசுரங்களைப் பாடியருளுகின்றார். அப்போது உயிர் துறந்த மூத்த திருநாவுக்கரசு உறக்கம் நீங்கி எழுபவனைப் போன்று உயிர் பெற்றெழுகின்றான். எழுந்தவன் நாவுக் கரசரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்குகின்றான். வாகீசர் பெருமானும் அவனுக்கு அன்புடன் திருநீறு வழங்கியருள் கின்றார். இத்திருப்பதிகம் 'விடந்தீர்த்த திருப்பதிகம்' என்று வழங்குகின்றது. இது பொதுப் பதிகம்.

அப்பூதியடிகளும் அவர்தம் இல்லத்தரசியாரும் மைந்தன் உயிர் பெற்றெழுந்தமை கண்டும் மகிழ்ச்சியுறாது அப்பர் பெருமான் அமுது செய்தருளக் காலந் தாழ்ந்ததே எனச் சிந்தை நோகின்றனர். அவர்தம் மனக் கருத்தறிந்து வாகீசர் அமுது செய்தருள அவர்களது இல்லத்திற்கு எழுந் தருள்கின்றார். இதனால் மகிழ்ச்சியுற்ற அப்பூதியடிகள் திருநாவுக்கரசர்க்குத் திருந்திய வாச நன்னீர் ஈந்து திரு வமுது செய்தருளுமாறு வேண்டுகின்றார். அப்பொழுது

அப்பர் பெருமான் ''புதல்வர்களும் நீரும் இங்கு என்னுடன் இருந்து அமுது செய்வீர்களாக'' எனப் பணித்தருள, அவ் வண்ணமே அப்பூதியடிகளும் அவருடைய புதல்வர்களும் அப்பரடிகளின் இருமருங்கும் அமர எல்லோரும் சேர்ந்து அமுது செய்கின்றனர்.

அப்பூதியடிகளின் விருந்தினராகத் திங்களூரில் சிலநாள் தங்குகின்றார் அப்பர் பெருமான். ஒருநாள் அப்பூதியடி களுடன் திருப்பழனத் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை வழிபடச் செல்லுகின்றார். அன்று ''சொன் மாலை'' (4.12) என்று தொடங்கும் திருப்பதிகம் பாடுகின்றார். இது 'மகள் பாசுரமாக' அமைகின்றது. இப் பதிகத்தின் இறுதிப் பாடல் இது.

**வஞ்சித்தென் வளைகவர்ந்தான்**
**வாரானே யாயிடினும்**
**பஞ்சிற்காற் சிறகன்னம்**
**பரந்தார்க்கும் பழனத்தான்**
**அஞ்சிப்போய்க் கலிமெலிய**
**அழலோம்பும் அப்பூதி**
**குஞ்சிப்பூ வாய்நின்ற**
**சேவடியாய் கோடியையே. (10)**

தலைமகள் பேசுகின்றாள்: ''என்னை வஞ்சித்து யான் பிரிவினால் வருந்தி இளைத்த நிலையில் என் கைவளை களைக் கவர்ந்து சென்ற ஆருயிர்த் தலைவனாகிய சிவ பெருமான் என் உள்ளம் மகிழ என்பால் எழுந்தருளி வாரா ராயினும், பஞ்சினையொத்து மெத்தென்ற கால்களையும் சிறகினையுமுடைய அன்னங்கள் பரவி ஆரவாரிக்கின்ற வளமார்ந்த திருப்பழனத்தில் எழுந்தருளியுள்ளான். அவன் தானே வாரானாயினும் யானே அப்பதிக்குச் சென்று அவனைக் கண்டு மகிழ்வேன்'' எனக் கருதிய தலைமகள் திருப்பழனத்தை அடைந்து இறைவன் முன்னிலையில் நின்று ''பாவங்கள் அஞ்சியகன்று அழியும் வண்ணம் நல்ல

வேள்விகளை இயற்றும் மேதகவுடைய அப்பூதியடிகளது திருமுடியின் கண்ணே அணியப்பெற்ற தாமரை மலராக விளங்கும் செம்மையான திருவடிகளையுடைய பெருமானே, எளியேனை ஏற்றருள்க'' என வேண்டி இறைஞ்சும் முறையில் இத் திருப்பாசுரம் அமைந்துள்ளது. இதனால் அப்பர் பெருமான் அப்பூதியடிகளின்பால் வைத்த பெருமதிப்பு இனிது புலனாகின்றது. இதில் அப்பூதியாரின் ஒழுக்கத்தின் விழுப்பத்தினையும் சிவனடித் தொண்டினைச் சிறப்பித்தருளினதையும் கண்டு மகிழலாம். அப்பூதியடிகளுடன் தங்கியிருந்த காலத்திலோ அல்லது திருப்பழனத்தில் சில நாட்கள் தங்கியிருந்த பொழுதோ வேறு நான்கு திருப்பதிகங்களைத்[6] திருப்பழனத்தீசன்மீது பாடியருளியுள்ளார்.

இந்நிலையில் அருகிலுள்ள சோற்றுத் துறை[7] என்ற திருத்தலத்திற்கு எழுந்தருளுகின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

எழும்பணியும் இளம்பிறையும்
அணிந்தவரை எம்மருங்கும்
தொழும்பணிமேற் கொண்டருளித்
திருச்சோற்றுத் துறைமுதலா
தழும்புறுகேண் மையில்நண்ணித்
தானங்கள் பலபாடிச்
செழும்பழனத் திறைகோயில்
திருத்தொண்டு செய்திருந்தார்.[8]

என்று காட்டுவார். சோற்றுத்துறை ஈசனை நாவுக்கரசர் நான்கு பதிகங்களால் பாடி மகிழ்கின்றார். ''பொய் விரா

---

6. அப்பர் 4-36; 4-87; 5-35; 6-36 (எட்டாம் இயலில் காட்டப் பெற்றது—பக். 109)

7. சோற்றுத் துறை: தஞ்சையிலிருந்து 7½ கல் தொலைவிலுள்ளது, சப்தஸ்தானத் தலங்களுள் ஒன்று.

8, பெ. பு. திருநாவுக்-212

மேனி தன்னை'' (4.41) என்ற முதற் குறிப்புடைய திரு நேரிசைப் பதிகத்தின்,

கட்டராய் நின்று நீங்கள்
காலத்தைக் கழிக்க வேண்டா
எட்டவாங் கைகள் வீசி
எல்லிநின் றாடு வானை
அட்டமா மலர்கள் கொண்டே
ஆனஞ்சும் ஆட்ட ஆடி
சிட்டராய் அருள்கள் செய்வார்
திருச்சோற்றுத் துறைய னாரே. (2)

என்பது இரண்டாவது திருப்பாடல். திருவிருத்தத்தாலான இன்னொரு பதிகமும் இத்தலம் பற்றியதே. ''காலை எழுந்து'' (4.85) என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகத்தின்,

அளக்கு நெறியினன் அன்பர்கள் தம்மனத்
தாய்ந்து கொள்வான்
விளக்கும் அடியவர் மேல்வினை
தீர்த்திடும் விண்ணவர்கோன்
துளக்கும் குழையணி சோற்றுத்
துறையுறை வார்சடைமேல்
திளைக்கு மதிய மன்றோ
எம்பிரானுக் கழகியதே. (3)

என்பது மூன்றாவது திருவிருத்தம்.

''கொல்லையேற்றினர்'' (5.33) என்ற திருக்குறுந் தொகைப் பதிகத்தில்,

ஆணி போலநீ ஆற்ற வலியைகாண்
ஏணி போல்இழிந் தேறியும் ஏங்கியும்
தோணி யாகிய சோற்றுத் துறையர்க்கே
பூணி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே.(7)

என்பது ஏழாவது பாடல். பாடல்தோறும் பதினொருமுறை 'பணிசெய் மடநெஞ்சமே' என்று நெஞ்சுக்கு நெறி யமைத்துக் காட்டுகின்றார். "மூத்தவனாய்" (6.44) என்று தொடங்கும் திருத்தாண்டகப் பதிகத்தில்,

மூத்தவனாய் உலகுக்கு முந்தி னானே
முறைமையால் எல்லாம் படைக்கின் றானே
ஏத்தவனாய் ஏழுலகும் ஆயி னானே
இன்பனாய்த் துன்மம் களைகின் றானே
காத்தவனாய் எல்லாம்தான் காண்கின் றானே
கடுவினையேன் தீவினையைக் கண்டு போகத்
தீர்த்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேஉன் அபயம் நானே.(1)

என்பது முதல் திருத்தாண்டகம்.

திருச்சோற்றுத்துறை ஈசனிடம் விடைபெற்றுக் கொண்டு திருவேதிகுடி[9] என்ற திருத்தலத்திற்கு வருகின் றார். "கையது காலெரி" (4.90) என்ற முதற் குறிப்புடைய திருவிருத்தச் செந்தமிழ் மாலையால் தலத்துப் பெருமானை வழிபடுகின்றார். இதில்,

மையணி கண்டன் மறைவிரி
நாவன் மதித்துகந்த
மெய்யணி நீற்றன் விழுமிய
வெண்மழு வாட்படையான்
செய்ய கமல மணங்கம
ழுந்திரு வேதிகுடி
ஐயனை ஆரா அமுதினை
நாமடைந் தாடுதுமே. (9)

என்பது ஒன்பதாவது திருப்பாடல்.

---

9. வேதிகுடி (திருவேதிகுடி) : தஞ்சை-மயிலாடுதுறை இருப்பூர்தி வழியில் திட்டை என்ற நிலையத்திலிருந்து 3 கல் தொலைவு. சப்த ஸ்தானங்களுள் ஒன்று.

வேதிகுடிச் செல்வப் பிரானிடம் விடைபெற்றுக் கொண்டு திருக்கண்டியூர்[10] வருகின்றார். 'வானவர் தானவர்' (4.93) என்ற முதற்குறிப்புடைய திருவிருத்தப் பாமாலையால் வழிபடுகின்றார். இதில்,

அட்டும் ஒலிநீர் அணிமதி
யும்மல ரானவெல்லாம்
ஒட்டுப் பொதியும் சடைமுடி
யான்இண்டை மாலையங்கைக்
கட்டும் அரவது தானுடை
யான்கண்டி யூரிருந்த
கொட்டும் பறையுடைக் கூத்தனை
யாமண்டர் கூறுவதே. (8)

என்பது எட்டாவது பாமலர்.

இதன் பின்னர் திருப்பழனத்தில் பல நாட்கள் தங்கியிருந்து மனம் மொழி மெய்களால் திருத்தொண்டு புரிந்து வருகின்றார். பின்னர் தமக்குத் திருவடித் தீட்சையருளிய திருநல்லூர்ப் பெருமானைக் காணப் பெரு விருப்பம் கொண்டு திருநல்லூர் வருகின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

சாலநாள் அங்கமர்ந்து
தந்தலைமேல் தாள்வைத்த
ஆலமார் மணிமிடற்றார்
அணிமலர்ச்சே வடிநினைந்து

10. கண்டியூர் வீரட்டம்: தஞ்சையிலிருந்து திருவையாறு போகும் பேருந்து வழியில் 6 கல் தொலைவிலுள்ளது. சப்த ஸ்தானங்களுள் ஒன்று. ஆதிகாலத்தில் ஐம்முகச் சிவனாரைப்போல் பிரமனுக்கும் ஐந்து சிரங்கள் இருந்தன. பிரமன் சமத்துவம் கொண்டாடிச் செருக்குற்றனன். பற் பல உயிர்கட்குத் துன்பம் விளைத்தனன். தேவர் வேண்டுகோளுக்கிரங்கி அவனது ஐந்தாவது சிரசைச் சிவபெருமான் கண்டித் தெறிந்தமையால் கண்டியூர் வீரட்டம் ஆயிற்று.

சேலுலாம் புனற்பொன்னித்
தென்கரையே றிச்சென்று
கோலநீள் மணிமாடத்
திருநல்லூர் குறுகினார்[11].

என்று காட்டுவார்.

இங்கிருந்து இறைவனைப் பரவிய அப்பர் பெருமா னுக்குத் திருவாரூர் நினைவு வருகின்றது. இங்கு வருவதற்கு முன் சில தலங்களை வழிபட்டே வருகின்றார்.

11. பெ. பு. திருநாவுக். 213

# 10. சோழ நாட்டுத் திருத்தலப் பயணம் - (3)

திருநல்லூரில் தங்கிக் கைத்தொண்டு புரிந்து வந்த அப்பர் பெருமானுக்குத் திருவாரூரில் கோயில் கொண்டிருக்கும் புற்றிடங் கொண்ட பெருமானைச் சேவிக்க வேண்டும் என்ற எண்ணம் எழுகின்றது. வழியிலுள்ள சில தலங்களைச் சேவித்துக்கொண்டு திருவாரூர் வர நினைக்கின்றார். இப்பொழுது சோழ நாட்டுத் திருத்தலப் பயணம் தொடர்கின்றது.

**மூன்றாவது சுற்று:** பயணத்தைத் தொடங்கியவர் முதலில் வலஞ்சுழி[1] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். அப்பர் பெருமான் இத்தலத்து எம்பெருமானை மூன்று திருப்பதிகங்களால் வழிபடுகின்றார். **'ஓதமார்கடலின்'** (5.66) என்ற முதற் குறிப்பினையுடைய திருக்குறுந்தொகைப் பதிகம் பாடிப் போற்றுகின்றார்.

**கண்ப ணிக்கும்கை கூப்புங்கண் மூன்றுடை**
**நண்ப னுக்கெனை நான்கொடுப் பேனெனும்**

---

1. வலஞ்சுழி (திருவலஞ்சுழி) : மயிலாடுதுறை-தஞ்சை இருப்பூர்தி வழியில் சுவாமிமலை என்ற நிலையத்திலிருந்து ½ கல் தொலைவிலுள்ளது. கும்பகோணத்திலிருந்து பேருந்து வசதி உண்டு. பிள்ளையார் சந்நிதி இத்தலத்தில் மிகு புகழ் வாய்ந்தது.

வண்பொன் னித்தென் வலஞ்சுழி மேவிய
பண்ப னிப்பொ னைச்செய்த பரிசிதே. (9)

என்பது இப்பதிகத்தின் ஒன்பதாவது பாடல். "அலையார் புனற் கங்கை" (6.72) என்ற முதற் குறிப்புடைய திருத் தாண்டகம் பாடிப் போற்றுகின்றார்.

அலையார் புனற்கங்கை நங்கை காண
அம்ப லத்தில் அருநட்ட மாடிவேடந்
தொலையாத வென்றியார் நின்றி யூரும்
நெடுங்களமும் மேவிவிடை யைமேல் கொண்டு
இலையார்படை கையி லேந்தி எங்கும்
இமையவரும் உமையவளும் இறைஞ்சி யேத்த
மலையார் திரளருவிப் பொன்னி சூழ்ந்த
வலஞ்சுழியே புக்கிடமா மருவி னாரே! (1)

இப்பதிகத்தில் ஒரே ஒரு பாடல்தான் உள்ளது. அடுத்த பதிகம் "கருமணிபோற்கண்ட" (6.73) என்ற திருத்தாண் டகப் பதிகம் வலஞ்சுலி, கொட்டையூர் கோடீச்சரம் என்ற இரு தலங்களையும் போற்றுவது. இதில்,

விரைகமழும் மலர்க்கொன்றைத் தாரான் கண்டாய்;
வேதங்கள் தொழநின்ற நாதன் கண்டாய்;
அரையதனிற் புள்ளியத ளுடையான் கண்டாய்;
அழலாடி கண்டாய்; அழகன் கண்டாய்;
வருதிரைநீர்ப் பொன்னி வலஞ்சுழியான் கண்டாய்;
வஞ்சமனத் தவர்க்கரிய மைந்தன் கண்டாய்;
குரவமரும் பொழில்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையும் கோமான் தானே. (5)

என்பது எட்டாவது திருத்தாண்டகம்.

வலஞ்சுலி - கொட்டையூர்ப் பெருமான்களிடம் விடை பெற்றுக் கொண்டு குடமூக்கிற்கு[2] வருகின்றார். "பூவணத்

---

2. குடமூக்கு (கும்பேசுவரர் கோயில்) : கும்பகோணம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 1 கல் தொலைவிலுள்ளது.

தன்'' (5.22) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந் தொகைச் செந்தமிழ் மாலையால் குடமூக்கு ஈசனை வழி படுகின்றார். இதில்,

காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமியஞ் செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடு சரச்சுவ தியவள்
கோமி யும்முறை யுங்குட மூக்கிலே. (8)

என்பது எட்டாவது தமிழ் மணம் கமழும் வாடா நறுமலர்.

கும்பேசரிடம் விடைபெற்றுக் கொண்டு குடந்தைக் கீழ்க்கோட்டம்[3] என்ற திருக்கோயிலுக்கு வருகின்றார். ''சொன்மலிந்தமறை'' (6.75) என்ற முதற் குறிப்பினை யுடைய திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையைப் புனைந்து கூத்தப் பெருமானை இறைஞ்சுகின்றார்.

காலன்வலி தொலைத்தகழற் காலர் போலும்
காமனெழில் அழல்விழுங்கக் கண்டார் போலும்
ஆலதனில் அறநால்வர்க் களித்தார் போலும்
ஆணொடுபெண் ணலியல்ல ரானார் போலும்

---

பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை நடைபெறும் மகா மகத்தில் (மாமாங்கம்—உலக வழக்கு) கும்பேசுவரர் வெள்ளி இடப வாகனத்தில் பஞ்ச மூர்த்திகளோடு எழுந் தருளி வந்து மகாமகக் குளக்கரையில் தீர்த்தம் கொடுப்பர். அப்போது பல இலட்சக் கணக்கான மக்கள் குளத்துள் முழுவதும் நின்று முழுகித் தரிசனம் செய்வார்கள். இக்குள நீரில் முழுகுவதால் இந்தியாவிலுள்ள கங்கை, யமுனை, கோதாவிரி, கிருஷ்ணை, பெண்ணை, தண்பொருநை, குமரி முதலிய எல்லாத் தீர்த்தங்களிலும் முழுகும் பலன் கிடைக்கும் என்பது புராண வரலாறு. 1981-ஆம் ஆண்டு மகாமகம் கண்டு குளத்தில் மூழ்கும் பேறு எனக்கும் என் மனைவிக்கும் கிடைத்தது.

3. குடந்தை கீழ்க் கோட்டம் (நாகேசுவரன் கோயில்): கும்பகோணத்தின் ஊர் நடுவேயுள்ள பெரிய கோயில். சித்திரை மாதம் மூன்றாம் நாள் காலையில் பகலவன் கிரணங்கள் மூலத்தானத்து மூர்த்தியின்மீது படுகின்றன. (இதையே சூரிய பூசை என்பது மரபு)

நீலவுரு வயிரநிரை பச்சை செம்பொன்
நெடும்பளிங்கென் றறிவரிய நிறத்தார் போலும்
கோலமணி கொழித்திழியும் பொன்னி நன்னீர்க்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே (5)

என்பது ஐந்தாவது வாடாத நறுமலர்த் தாண்டகம்.

கீழ்க்கோட்டக் கூத்தனாரிடம் விடைபெற்றுக்கொண்டு நாலூர்[4] வருகின்றார். நாலூர் மயானத் திறைவனிடம் (பதிகம் இல்லை) விடைபெற்றுக் கொண்டு தென்திருச் சேறை[5] வருகின்றார். இத்தலத்து எம்பெருமானை இரண்டு பதிகங்களால் வழிபடுகின்றார். "பெருந்திரு இமவான்" (4.73) என்ற முதற்குறிப்புடைய திருநேரிசைப் பதிகம்படி சேறை எம்பெருமானைத் துதிக்கின்றார். இதில்,

நிறைந்தமா மணலைக் கூப்பி
நேசமோ டாவின் பாலைக்
கறந்துகொண் டாட்டக் கண்டு
கறுத்ததன் தாதை தாளை
எறிந்தமா ணிக்கப் போதே
எழில்கொள்சண் டீசன் என்னச்
சிறந்தபே ரளித்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. (5)

என்பது ஐந்தாவது திருநேரிசை. "பூரியா வரும்" (5.77) என்ற திருக்குறுந் தொகைப் பதிகத்தில்,

---

4. நாலூர் மயானம் : கும்பகோணம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து $8\frac{1}{2}$ கல் தொலைவு. கொடவாசல் பேருந்து வழி. சம்பந்தர் பாடல் பெற்றது (நாலூர் என்பது நாலூர் மயானமாக இருத்தல் வேண்டும் என்பது சி. கே. சுப்பிரமணிய முதலியார் கருத்து)

5. சேறை (உடையார் கோயில்): கும்பகோணம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 8 கல தொலைவு. பேருந்து வழி.

என்ன மாதவம் செய்தனை நெஞ்சமே
மின்னு வார்சடை வேத விழுப்பொருள்
செந்நெ லார்வயல் சேறையுட் செந்நெறி
மன்னு சோதிநம் பால்வந்து வைகவே. (2)

என்பது இரண்டாவது பாடல். இதிலுள்ள பாடல்கள் யாவும் நெஞ்சை நெக்குருகச் செய்பவை.

சேறை எம்பெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு குடவாயில்[6] வருகின்றார். குடவாயில் இறைவனை வழி பட்டுக் கொண்டு (பதிகம் இல்லை) திருநறையூர்[7] வருகின் றார். சித்தீச்சரத்து எம்பெருமானை வழிபட்டுக்கொண்டு (பதிகம் இல்லை) திருசிவபுரம்[8] வருகின்றார். "வானவன் காண்" (6,87) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்த் திருத் தாண்டக மாலை புனைந்து வழிபடுகின்றார். இதில்,

வெய்யவன்காண்; வெய்யகனல் ஏந்தி னான்காண்;
வியன்கெடில வீரட்டம் மேவி னான்காண்;
மெய்யவன்காண்; பொய்யர்மனம் விரவா தான்காண்;
வீணையோ டிசைந்துமிகு பாடல் மிக்க
கையவன்காண்; கையில்மழு ஏந்தி னான்காண்;
காமரங்கம் பொடிவிழித்த கண்ணி னான்காண்;
செய்யவன்காண்; செய்யவளை மாலுக் கீந்த
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே.(7)

---

6. குடவாயில் (கொடவாசல்) : தஞ்சாவூர் - நாகூர் இருப்பூர்தி வழியில் கொரடாச்சேரி நிலையத்திலிருந்து 7 கல் தொலைவு. கும்பகோணத்திலிருந்து திருவாரூர் செல்லும் பேருந்து வழியிலுள்ளது.

7. நறையூர் (நறையூர் சித்தீச்சரம்): கும்பகோணத்தி லிருந்து 5 கல் தொலைவு. நாச்சியார் கோயில் போகும் பேருந்து வழி.

8. சிவபுரம்: கும்பகோணத்திலிருந்து $1\frac{1}{2}$ கல் தொலைவு. திருமால் வராக உருவிற் பூசித்ததைச் சம்பந் தரின் 1, 21; 6 பாடலும் அப்பரின் 6.87:6 என்ற தாண் டகமும் கூறும்.

என்பது ஏழாவது தமிழ்மணங் கமழும் வாடாத தாண்டக நறுமலர். இப்பதிகத்தில் 8, 9 பாடல்கள் காணப்பெற வில்லை.

சிவபுரத்துச் செல்வனிடம் விடைபெற்றுக்கொண்டு அரிசிற்கரைப்புத்தூர்[9] வருகின்றார். ''முத்தூரும்'' (5.61) என்று தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

அருப்புப் போன்முலையார் அல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் லிட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச்செயக்
கருப்புச் சாற்றிலும் அண்ணிக்குங் காண்மினே. (5)

என்பது ஐந்தாவது பாடல். இதிலுள்ள பாடல்கள் யாவுமே பயில்வார்க்குக் கருப்புச்சாறுபோல் இனிமை பயக்கும்.

புத்தூர்ப் புனிதரிடம் விடைபெற்றுக் கொண்டு திருக் கடுவாய்க்கரைப் புத்தூருக்கு[10] வருகின்றார். ''ஒருத்தனை'' (5.62) என்று தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகத் தில்,

---

9. அரிசிற் கரைப்புத்தூர் (அழகார் புத்தூர்): கும்ப கோணத்திலிருந்து 4 கல் தொலைவு. தளர் வெய்திய கிழப் பருவத்திலும் தவிராது நாள்தோறும் முப்போதும் திருமேனி தீண்டிப் பூசிக்கும் புகழ்த்துணை நாயனார் திருமுழுக்காட்டும்போது, ஒருநாள் குடம் நழுவிச் சிவலிங் கத் திருமேனியின்மேல் விழுந்தது. இந்தத் தவற்றுக்கு மிக மிக அஞ்சிய நாயனாருக்கு இறைவன் அபயம் அளித்து ஓய்வு கொடுத்து அவர் உணவுக்காக நாடோறும் ஒரு பொற்காசு கொடுத்த வரலாற்றைச் சம்பந்தரின் 2.6:7 பாடலும் சுந்தரரின் 7.9:6 பாடலும் கூறும்.

10. கடுவாய்க்கரைத்தென்புத்தூர் (ஆண்டான் கோயில்): கும்பகோணத்திலிருந்து 6 கல் தொலைவிலுள்ளது.பேருந்து வழி.

பந்த பாச மறுத்தெனை ஆட்கொண்ட
மைந்த னைம்மண வாளனை மாமலர்க்
கந்த நீர்க்கடு வாய்க்கரைத் தென் புத்தூர்
எந்தை யீசனைக் கண்டினி தாயிற்றே. (6)

என்பது ஆறாவது பாசுரம்.

கடுவாய்ப் புனலாடிய ஈசனிடம் விடை பெற்றுக் கொண்டு திருவாஞ்சியம்[11] வருகின்றார். ''படையும் பூதமும்'' (5.67) என்று தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகத்தில்

புற்றில் ஆடர வோடு புனல்மதி
தெற்றும் செஞ்சடைத் தேவர்பி ரான்பதி
சுற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்
பற்றிப் பாடுவார்க்குப் பாவ மில்லையே. (3)

என்பது மூன்றாவது பாடல். இப்பதிகத்தில் 8, 9, 10-ஆம் பாடல்கள் கிடைக்க வில்லை.

வாஞ்சியத்தெம்பெருமானிடம் விடை பெற்றுக் கொண்டு அப்பர் பெருமான் பெருவேளூர்[12] வருகின்றார். ''மறையணி நாவினானை'' (4.66.) என்ற திருநேரிசைச் செந்தமிழ் மாலை பாடிப் பெருவேளூர்ப் பேணிய பெம்மானை ஏத்துகின்றார். இதில்,

விரிவிலா அறிவி னார்கள்
வேறொரு சமயம் செய்து
எரிவினாற் சொன்னா ரேனும்
எம்பிராற் கேற்ற தாகும்

11. வாஞ்சியம் (ஸ்ரீ வாஞ்சியம்): நன்னிலத்திலிருந்து 6 கல் தொலைவு. திருமால் ஸ்ரீ என்னும் இலக்குமியை வாஞ்சித்துச் சிவபூசை செய்து பெற்றமையால் ஸ்ரீ வாஞ்சியம் ஆயிற்று. காசிக்கு நிகர் எனப்படும் தலங்களுள் ஒன்று.

12. பெருவேளூர் (காட்டூர் ஐயம் பேட்டை): தஞ்சை-நாகூர் இருப்பூர்தி வழியில் கொரடாச்சேரியிலிருந்து $8\frac{1}{2}$ கல் தொலைவிலுள்ளது.

பரிவினாற் பெரியோ ரேத்தும்
பெருவேளூர் பற்றி னானை
மருவிநான் வாழ்த்தி உய்யும்
வகையது நினைக்கின் றேனே. (9)

என்பது ஒன்பதாவது திருநேரிசை வாடா நறுமலர். எல்லாப் பாடல்களும் படித்து இன்புறத் தக்கவை.

பெருவேளூர்ப் பெம்மானிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு விளமர்[13] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். விளமர் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை வழிபட்டுத் (பதிகம் இல்லை) திருவாரூர்[14] சென்றடைகின்றார். அப்பர் பெருமான் இத்தலத்து இறைவனை 21 பதிகங்களால் வழுத்துகின்றார். இதனை அடுத்துவரும் 'திருவாரூர் நிகழ்ச்சிகள்' என்ற தலைப்பில் காண்போம்.

திருவாரூர்ப் பதியில் பல நாட்கள் தங்கி அணி வீதிப் பணி செய்து இருக்கும் நாளில், சில தலங்களை வழிபட நினைக்கின்றார்.

---

13. விளமர்: திருவாரூர் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 2 கல் தொலைவிலுள்ளது. சம்பந்தர் பாடல் பெற்றது.

14. திருவாரூர் (ஆரூர்): மயிலாடுதுறை-காரைக்குடி இருப்பூர்தி நிலையத்திலிருந்து 1 கல் தொலைவு. கச்சி ஏகம்பத்தையும் இத்தலத்தையும் பஞ்ச பூதத் தலங்களுள் பிருதிவித் தலமாகக் கருதுவதுண்டு. சந்நிதிக்குத் தெற்கே தனிச் சந்நிதியாகவுள்ள தியாகராசர் சந்நிதி மிகுபுகழ் வாய்ந்தது. திருமூலட்டானத்தின் பெயர் பூங்கோயில் என்பது. தலம் மூர்த்தியின் சிறப்புக்கு ஒத்த சிறப்புடையது. சோழ மன்னர்கள் முடிசூட்டு விழா கொண்டாடிய 5 நகரங்களுள் ஒன்று. ஏயர்கோன் கலிக்காமர், காடவர் கோன், கழற்சிங்கர், செருந்துணையார், தண்டியடிகள், திருநீலகண்ட யாழ்ப்பாணர், நமிநந்தியடிகள், விறன்மிண்டர் முதலிய நாயன்மார்கள் வாழ்க்கைத் தொடர்புடைய தலம்.

நீராரும் சடைமுடியார் நிலவுதிரு
வலிவலமும் நினைந்து சென்று
வாராரு முலைமங்கை உமைபங்கர்
கழல்பணிந்து மகிழ்ந்து பாடிக்
காராரும் கறைக்கண்டர் கீழ்வேளூர்
கன்றாப்பூர் கலந்து பாடி
ஆராத காதலினால் திருவாரூர்
தனில்மீண்டும் அணைந்தார் அன்றே.[15]

என்ற பாடலில் வலிவலம், கீழ்வேளூர், கன்றாப்பூர் ஆகிய தலங்களைப் பணிந்து இறைஞ்ச நினைப்பதைக் காட்டுவார் சேக்கிழார் பெருமான்.

திருவாரூரிலிருந்து திருநாவுக்கரசர் முதலில் வலிவலம்[16] வந்து சேர்கின்றார். "நல்லான் காண்" (6.48) என்ற திருத் தாண்டகப் பதிகத்தால் வலிவலத் தீசனை வழிபடுகின்றார்.

ஏயவன் காண்; எல்லார்க்கும் இயல்பா னான்காண்;
இன்பங்காண்; துன்பங்கள் இல்லா தான்காண்;
தாயவன்காண்; உலகுக்கோர் தன்னொப் பில்லாத்
தத்துவன்காண்; உத்தமன்காண்; தானே எங்கும்
ஆயவன்காண்; அண்டத்துக் கப்பா லான்காண்;
அகங்குழைந்து மெய்வருந்தி அழுவார் தங்கள்
வாயவன்காண்; வானவர்கள் வணங்கி ஏத்தும்
வலிவலத் தான்காண்; அவனென் மனத்துளானே. (3)

என்பது இப்பதிகத்தின் மூன்றாவது தாண்டகம்.

---

15. பெ.பு. திருநாவுக்-228

16. வலிவலம் : மயிலாடுதுறை - காரைக்குடி இருப் பூர்தி வழியில் மாவூர்ரோட் என்ற நிலையத்திலிருந்து (திருவாரூர் அருகில் உள்ளது) $5\frac{1}{2}$ கல் தொலைவிலுள்ளது. இது கட்டுமலைக் கோயில். சுற்றிலும் அகழ்.

வலிவலத்தானிடம் விடைபெற்றுக் கொண்டு கீழ்வேளூருக்கு[17] வருகின்றார். "ஆளான அடியவர்க்கு" (6. 67) என்ற முதற்குறிப்புடைய செந்தமிழ் மாலையைப் பாடிக் கீழ்வேளூர் ஆளும் கோவைப் போற்றி வணங்குகின்றார். இத்தாண்டகப் பதிகத்தில்,

மாண்டா ரெலும்பணிந்த வாழ்க்கை யானை
மயானத்திற் கூத்தனை வாளரவோ டென்பு
பூண்டானைப் புறங்காட்டி லாடலானை
போகாதென்னுள் புகுந்துஇடம் கொண்டு என்னை
ஆண்டானை அறிவரிய சிந்தை யானை
அசங்கையனை அமரர்கள்தம் சங்கை யெல்லாம்
கீண்டானைக் கீழ்வேளூர் ஆளும் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. (9)

என்பது ஒன்பதாவது தாண்டகம்.

கீழ்வேளூர்க் கேடிலியப்பனிடம் விடைபெற்றுக் கொண்டு கன்றாப்பூர்[18] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார் அப்பர் பெருமான். "மாதினையோர்" (6.61) என்று தொடங்கும் திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையைச் சூட்டி மகிழ்கின்றார். இதில்,

ஐயினால் மிடரடைப்புண் டாக்கை விட்டு
ஆவியார் போவதுமே அகத்தார் கூடி
மையினார்க் கண்ணெழுதி மாலை சூட்டி
மயானத்தி லிடுவதன்முன் மதியஞ் சூடும்

---

17. கீழ்வேளூர் (கீவளூர்); தஞ்சாவூர்-நாகூர் இருப்பூர்திப் பாதையில் கீவளூர் நிலையத்திலிருந்து ½ கல் தொலைவிலுள்ளது. முருகன் பூசித்த தலங்களுள் ஒன்று.

18. கன்றாப்பூர் (கோயில் கன்றாப்பூர்): மயிலாடுதுறை-காரைக்குடி இருப்பூர்தி வழியில் மாவூர் ரோட் என்ற நிலையத்திலிருந்து 5½ கல் தொலைவிலுள்ளது. கன்றுக்குட்டியைக் கட்டி வைக்கும் தறியிலிருந்து இறைவன் வழிபாட்டை ஏற்றருளினான், "கன்றாப்பூர் நடுதறியைக்

ஐயனார்க் காளாகி அன்பு மிக்கு
அகங்குழைந்து மெய்யரும்பி அடிகள் பாதங்
கையினால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே. (7)

என்பது திருத்தாண்டக வாடா நறுமலர். இப்பதிகத்தில் ஒன்பது திருப்பாடல்களே உள்ளன. ஒவ்வொரு பாடலும் "அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே" என்று இறுகின்றது. 'கன்றாப்பூர் நடுதறி' என் பது இறைவனின் திருப்பெயர்.

இங்ஙனம் இத்திருத்தலங்களையெல்லாம் சென்று சேவித்தமையைச் சேக்கிழார் பெருமான்,

நீராரும் சடைமுடியார் நிலவுதிரு
வலிவலமும் நினைந்து சென்று
வாராரு முலைமங்கை உமைபங்கர்
கழல்பணிந்து மகிழ்ந்து பாடிக்
காராரும் கரைகண்டர் கீழ்வேளூர்
கன்றாப்பூர் கலந்து பாடி
ஆராத காதலினால் திருவாரூர்
தனில்மீண்டும் அணைந்தார் அன்றே.[19]

என்ற திருப்பாடலால் குறிப்பிடுவர். இவர் திருவாரூர் திரும்பும்போது திருவாதிரைத் திருநாள் நடைபெற்றுக் கொண்டுள்ளது. இந்த விழாவில் வீதிவிடங்கப் பெரு மானின் திருவுலாவைக் கண்டு அடியார்களுடன் வணங்கி மகிழ்ந்திருக்கின்றார்!

---

காணலாமே" என வருதல் காண்க. அப்பர் பெருமான் மட்டிலுமே பாடியுள்ளார்.

19. பெ. பு: திருநாவுக். 228

சில நாட்கள் திருவாரூரில் தங்கித் திருப்பயற்றூர்[20] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். 'உரித்திட்டார்' (4.32) என்ற முதற் குறிப்புடைய திருநேரிசைச் செந்தமிழ் மாலையில் தலத்து ஈசனை வழிபடுகின்றார்.

தந்தையாய்த் தாயு மாகித்
 தரணியாய்த் தரணி யுள்ளார்க்
கெந்தையும் என்ன நின்ற
 ஏழுல குடனு மாகி
எந்தைஎம் பிரானே என்றென்
 றுள்குவார் உள்ளத்தென்றும்
சிந்தையும் சிவமும் ஆவார்
 திருப்பயற் றூர னாரே. (8)

என்பது எட்டாவது பாமலர். பாடல்கள் யாவும் பக்தி உணர்ச்சியை எழுப்புபவை.

திருப்பயற்றூரனாரிடம் விடை பெற்றுக்கொண்டு திருப்பள்ளியின் முக்கூடல்[21] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். 'ஆராத இன்னமுதை' (6-69) என்ற செந்தமிழ்த் திருத்தாண்டக மாலையால் தலத்துப் பெருமானை வழிபடுகின்றார்.

அடைந்தார்தம் பாவங்கள் அல்லல் நோய்கள்
 அருவினைகள் நல்குரவு செல்லா வண்ணங்
கடிந்தானைக் கார்முகில்போல் கண்டத்தானைக்
 கடுஞ்சினத்தோன் தன்னுடலை நேமி யாலே

---

20. பயற்றூர் (திருப்பயற்றங்குடி) மாயூரம்-காரைக்குடி இருப்பூர்தி வழியில் திருவாரூர்க் கருகிலுள்ள விற்குடி என்ற நிலையத்திலிருந்து 4 கல் தொலைவு.

21. பள்ளியின் முக்கூடல் (திருப்பள்ளி முக்கூடல், அரிக்கரையான்பள்ளி); விற்குடி என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து $1\frac{1}{2}$ கல் தொலைவிலுள்ளது.

தடிந்தானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தத்துவனை உத்தமனை நினைவார் நெஞ்சில்
படிந்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. (5)

என்பது தமிழ் மணக்கும் ஐம்பதாவது வாடாத நறுமலர். இப்பதிகத்திலுள்ள பாடல்கள் யாவும் உள்ளத்தை உருக்கிப் பக்தியின் கொடுமுடிக்கு இட்டுச் செல்பவை. இந்த இரண்டு தலங்களையும் திருவாரூரில் இருந்தபோது வழிபட்டிருக்கலாம். இவற்றை வழிபட்ட நாள்பற்றி எந்தவிதக் குறிப்புகளும் கிடைக்கவில்லை.

இங்ஙனம் திருவாரூரிலிருந்து சில தலங்களைச் சேவித்து வரும் நாட்களில் திருப்புகலூர்ப் பெருமானைச் சேவிக்க வேண்டும் என்ற எண்ணம் அப்பர் பெருமானின் திருவுள்ளத்தில் முகிழ்க்கின்றது. இதனைச் சேக்கிழார் பெருமான்,

மேவுதிரு வாதிரைநாள் வீதிவிடங்
கப்பெருமான் பவனி தன்னில்
தேவருடன் முனிவர்கள்முன் சேவிக்கும்
அடியார்கள் உடன்சே வித்து
மூவுலகும் களிகூர வரும்பெருமை
முறையெல்லாம் கண்டு போற்றி
நாவினுக்குத் தனியீசர் நயக்கும்நாள்
நம்பர்திரு வருளி னாலே.

திருப்புகலூர் அமர்ந்தருளும் சிவபெருமான்
சேவடிகள் கும்பிட் டேத்தும்
விருப்புடைய உள்ளத்து மேவிஎழும்
காதல்புரி வேட்கை கூர
ஒருப்படுவார் திருவாரூர் ஒருவாறு
தொழுதுஅகன்றுஅங்கு உள்ளம் வைத்துப்
பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகர்
பதிபிறவும் பணிந்து போந்தார்.[22]

22. பெ, பு. திருநாவுக்-229, 230

இங்குப் 'பிறபதிகள்' என்பதற்குத் திருப்பயற்றூர், திருப் பள்ளியின் முக்கூடல், திருவிற்குடி, திருப்பனையூர் முதலிய வையாகக் கொள்ளலாம். திருவிற்குடி. திருப்பனையூர் தலங்கட்குப் பதிகங்கள் இல்லை.

**சம்பந்தர் சந்திப்பு ;** திருவாரூர்ப் பெருமானை வணங்கி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு **திருப்புகலூரை**[23] அடை கின்றார். அப்போது அங்கு முருகநாயனார்[24] திருமடத் தில் பல திருத்தலங்களையும் சேவித்த சம்பந்தர் பெருமான் எழுந்தருளியிருக்கின்றார். நாவுக்கரசர் வருகையைக் கேள்வியுற்ற காழிப்பிள்ளையும் அடியார்களுடன் எதிர் கொண்டு வரவேற்கின்றார். இருவரும் ஒருவரையொருவர் வணங்கி மகிழ்கின்றனர். இச் சந்திப்பைச் சேக்கிழார் பெருமான்,

> **இரண்டுநில வின்கடல்கள் ஒன்றாகி**
> **அணைந்தனபோல் இசைந்த அன்றே.**[25]

என்று கூறி மகிழ்வர். ஆளுடைய பிள்ளையார் நாவுக் கரசரை நோக்கி, ''அப்பரே, நீவீர் திருவாரூரில் இருந்த

---

23. **புகலூர்** (திருப்புகலூர்): நன்னிலத்திலிருந்து 4 கல் தொலைவு. நன்னிலத்திலிருந்து நாகப்பட்டினம் செல்லும் பேருந்தில்செல்லலாம். திருக்கோயிலைச் சுற்றி நாற்புறமும் திருக்குளம் அகழ் போலுள்ளது. கோயிலுக்குப்போக மட்டும் ஒரு வழியுள்ளது. இறைவன் சற்றுச் சாய்ந்துள்ளபடியால் கோணப்பிரான் என்று பாசுரம் (அப்பர் 4. 105:10) கூறும். முருகநாயனார் நாடோறும் பூத்தொடுத்து இறைவனை அலங்கரித்துத் தொண்டாற்றியதைப் பாசுரம் (சம்பந்தர் 2-92:5) கூறும். சுந்தரர் செங்கல்லைத் தலையணையாக வைத்து உறங்கும்போது அதைப் பொன்னாக்கி அவருக் களித்த அற்புதத் தலம் இது. அப்பர் பெருமான் முக்தி யடைந்த திருத்தலம். (திருக்கண்ணபுரம் சேவித்தபோது அடியேன் இத்தலத்தையும் சேவித்தேன்.)

24. அறுபத்து மூவரில் ஒருவர்.

25. பெ. பு. திருநாவுக் 233.

போது நிகழ்ந்த பெருமையினை விரித்துரைப்பீர்'' என்று கேட்க, அவரும் ''வீதிவிடங்கப் பெருமானது ஆதிரைத் திருநாளின் பெருமையினை இன்ன தன்மையினதென்று எவ்வாறு உரைப்பேன்'' என்று கூறி 'முத்துவிதானம்' (4.21) என்ற திருப்பதிகத்தால் விளக்குகின்றார். ''திருவாரூர் இறைவன் ஆதிரைத் திருநாளில், முத்துவிதானத்தில், கவரியுடன் பக்தர்களும் பாவையரும் சூழ, வித்தகக் கோலத்தில் வந்தருள்வார். அண்மையில் உள்ளார்க்கும் சேயார்க்கும், போற்றித்துதிப்பவர்க்கும் அணியராவார்; கொடி வீதிகளும் மணி மாடங்களும், பவள மாலைகளுடன் தோன்றும் ஆரூரில், தொண்டர்கள் பித்தரைப்போல் பிதற்றுவர். சங்கும் பாறையும், கல்லவடம் என்னும் கருவியும் ஒலிக்க, அதனை இடி முழக்கம் என்றெண்ணி மயில்கள் ஆடும். இந்திரன் முதலானவரும் துதிப்பர். இங்ஙனம் தொண்டர் புடைசூழ இறைவன் எழுந்தருள்வார்'' என்று கூறுகின்றார். இதனைக் கேட்டருளிய காழிப்பிள்ளையார் திருவாரூர்ப் பெருமானைச் சேவிக்கும் பெருவிருப்புடையவராய், அப்பரிடம் ''திருவாரூர் வழிபட்டு இங்கு வந்து உம்முடன் உடன் அமர்வேன்'' என்று கூறி விடைபெற்றுச் செல்கின்றார்.

இந்நிலையில் நாவுக்கரசர் திருப்புகலூரில் சிவபெருமானைப் பணிந்து திருமாலைகள் சாத்திக்கொண்டும் கைத்தொண்டு புரிந்துகொண்டும் காலம் கழிக்கின்றார். இப்பொழுது திருப்புகலூர்ப் பெருமானை ஐந்து திருப்பதிகங்களால் வழிபடுகின்றார். ''செய்யர் வெண்ணூலர்'' (4.16) என்ற முதற் குறிப்பினையுடைய பதிகத்தில்,

> பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக்
> கருந்தாழ் குழலியும் தாமும் கலந்து
> திருந்தா மனமுடை யார்திறத் தென்றும்
> பொருந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. (3)

என்பது மூன்றாவது பாடல். ''பகைத்திட்டார்'' (4.54) என்று தொடங்கும் திருநேரிசைப் பதிகத்தில்,

நீருமாய்த் தீயு மாகி
நிலனுமாய் விசும்பு மாகி
ஏருடைக் கதிர்க ளாகி
இமையவர் இறைஞ்ச நின்று
ஆய்வதற் கரிய ராகி
அங்கங்கே யாடு கின்ற
தேவர்க்குந் தேவ ராவார்
திருப்புக லூர னாரே. (8)

என்பது எட்டாவது திருநேரிசை.

''தன்னைச்சரண்'' (4.105) என்ற திருவிருத்தப் பதிகத்தில்,

பொன்னை வகுத்தன்ன மேனியனே
புணர்மென் முலையாள்
தன்னை வகுத்தன்ன பாகத்தனே
தமியேற் கிரங்காய்
புன்னை மலர்த்தலை வண்டுறங்கும்
புகலூ ரரசே
என்னை வருத்திலையேல் இடும்பைக்
கிடம்யாது சொல்லே (2)

என்பது இரண்டாவது திருவிருத்தம். இப்பதிகத்தில் 3, 5, 6, 7, 8, 9, என்ற எண்ணுடைய ஆறு பாடல்கள் காணப்பெற வில்லை. ''துன்னக் கோவண'' (5.46) என்ற திருக்குறுந் தொகைப் பதிகத்தில்,

தத்து வந்தலை கண்டறி வாரிலைத்
தத்து வந்தலை கண்டவர் கண்டிலர்
தத்து வந்தலை நின்றவர்க் கல்லது
தத்து வனலன் தண்புக லூரனே. (8)

என்பது ஏழாவது திருக்குறுந்தொகை. 'எண்ணுகேன்' (6.99) என்ற திருத்தாண்டகம் இவர் சிவப்பேறு அடைந் ததைக் கூறும் இயலில் காட்டப் பெற்றுள்ளது.

மேலும் திருப்புகலூரில் உறையும் நாட்களில் வேறு சில சிவத்தலங்களையும் வணங்கிப் போற்றுகின்றார்.

முதலில் செங்காட்டங்குடிக்கு[26] வருகின்றார். ''பெருந் தகையைப் பெறற்கரிய'' (6.84) என்ற திருத்தாண்டகப் பதிகம் பாடி வழிபடுகின்றார் செங்காட்டங்குடிச் செல்

உருகுமனத் தடியவர்கட் கூறும் தேனை
உம்பர்மணி முடிக்கணியை உண்மை நின்ற
பெருகுநிலைக் குறியாளர் அறிவு தன்னைப்
பேணியஅந் தணர்க்குமறைப் பொருளைப் பின்னும்
முருகுவிரி நறுமலர்மேல் அயற்கும் மாற்கும்
முழுமுதலை மெய்த்தவத்தோர் துணையை வாய்த்த
திருகுகுழல் உமைநங்கை பங்கன் றன்னைச்
செங்காட்டங் குடியதனில் கண்டேன் நானே. (3)

வனை. என்பது மூன்றாவது பாடல். 'உருகுமனத் தடியவர் கட்கு ஊறும் தேனை' என்ற தொடர் திருமங்கையாழ்வாரின் 'உளங்கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்தில் ஊறும் தேனை'[27] என்ற திருமொழித் தொடரை நினைவு கூரச் செய்கின்றது. அப்பர் பெருமானே இப்பதிகத்து இன்னொரு பாடலில் (7) 'தித்தித்து என் மனத்துள் ஊறுந்தேனை' என்று சொல்லி மகிழ்கின்றார். சிறார்கள் தாயையோ தந்தையையோ நினைக்கும்போது அவர்கள் உள்ளத்தில் எழுவது போன்ற உணர்ச்சியை இறைவனை நினைக்கும் போது அடியவர்கள் மனத்தில் 'அடியவர்க்கு ஆரமுதம் ஆனான்' என்றாற் போலத் தேனாக இனிக்கின்றான்.

---

26. செங்காட்டங்குடி (திருச்செங்காட்டங்குடி): இத் தலம் நன்னிலத்திலிருந்து 6 கல் தொலைவிலுள்ளது. வழி யில் திருப்புகலூர், இராமனதீச்சரம், திருக்கண்ணபுரம் (வைணவத் தலம்) உள்ளன. சிறுத்தொண்ட நாயனார் பிள்ளைக்கறி யளித்த அற்புதத் தலம். இவ்வற்புதம் 'அமுது படையல் உற்சவம்' என்று சித்திரைத் திங்கள் பரணியன்று மிகச் சிறப்பாக நடைபெறுகின்றது. உத்திராபதி சுவாமி திருவெழுச்சி, அவர் தங்கியிருந்த திரு ஆத்தி மரம் முதலியன காணலாம். சிறுத்தொண்டர் வாதாவிப் போர் வென்று கொணர்ந்த கணபதியைப் பூசித்ததால் கோயிற் பெயர் 'கணபதீச்சரம்' ஆயிற்று.

27. பெரி. திரு. 4.3:9

செங்காட்டங்குடிச் செம்மேனி எம்மானிடம் விடை பெற்றுக்கொண்டு திருநள்ளாறு[28] வருகின்றார் திருநாவுக்கரசர்; இரண்டு திருப்பதிகங்களால் வழிபடுகின்றார். "உள்ளாறாத" (5.68) என்ற திருக் குறுந்தொகைப் பதிகத்தில்,

வஞ்ச நஞ்சிற் பொலிகின்ற கண்டத்தர்
விஞ்செயிற் செல்வப் பாவைக்கு வேந்தனார்
வஞ்ச நெஞ்சத் தவர்க்கு வழிகொடார்
நஞ்ச நெஞ்சர்க் கருளுநள் ளாறரே. (7)

என்பது ஏழாவது திருக் குறுந்தொகை. "ஆதிக் கண் நான் முகத்தில்" (6.20) என்று தொடங்கும் திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையில்,

---

28. நள்ளாறு (திருநள்ளாறு): பேரளம்-காரைக்கால் இருப்பூர்தி வழியில் திருநள்ளாறு என்ற நிலையத்திலிருந்து ½ கல் தொலைவு. சப்தவிடங்கங்களுள் இங்கு நகவிடங்கர் உன்மத்த நடனம். மதுரையில் சம்பந்தப் பெருமான் அனல் வாதம் செய்தபோது தமது தேவார ஏடுகளில் ஒன்றை எடுத்து அனலில் இடும்போது இத்தலப் பதிகம் வரைந்த ஏடு கிடைத்தது. அதனால் வாதத்தில் இந்த ஏடு எரியாமல் பச்சென்றிருந்தபடியால் இப்பதிகம் (சம்பந்தர் 1.49)- "போகமார்த்த பூண்முலையாள்" என்று தொடங்குவது- "பச்சைப்பதிகம்" எனப் பெயர் பெற்றது. நளன் பூசித்துக் கலி நீங்கப் பெற்ற தலம். கோயிலுக்குப் போகும் வழியில் உட்பகுதியில் ஒருபுறம் சனீஸ்வரன் உருவம் உள்ளது. 12 இராசிகளுள் ஒன்றைவிட்டு மற்றொன்றிற்கு முன்னாகவோ அல்லது வக்ரமாகவோ (பின்னாகவோ) பெயர்வது சனி பெயர்ச்சியாகும். இச் சனிப்பெயர்ச்சி விழா ஒவ்வொன்றும் இத்தலத்தில் மிகச் சிறப்பாக நடைபெறும். சனிபகவான் தங்கக் காக்கை வாகனத்தில் வீதி வலம் வருதல் கண் கொள்ளாக் காட்சியாகும். 1976இல் திருப்பதியில் இருந்த போது ஒரு முறையும், 1985 பிப்ரவரியில் காரைக்காலில் நடைபெற்ற தமிழாசிரியர் பயிற்சி முகாமில் கலந்து கொண்டபோது மீண்டும் ஒரு முறையும் சனிபகவானை வழிபட்டதும், இரண்டாம் முறையில் ஓதுவாரைக் கொண்டு திருக்கோயில் வலம் வந்து தரிசனம் செய்ததும் இன்றும் (1986) என் மனத்தில் பசுமையாக உள்ளது.

குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான் தன்னைக்
குலவரையின் மடப்பாவை இடப்பா லானை
மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட
மறையவனைப் பிறைதவழ்செஞ் சடையி னானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னும்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. (6)

என்பது இச் செந்தமிழ் மாலையில் ஆறாவது வாடாத நறுமலர்.

நள்ளாற்று நாயகனிடம் விடை பெற்றுக்கொண்டு சாத்த மங்கை[29] என்னும் திருத்தலத்திற்கு வருகின்றார். சாத்தமங்கலத்து ஈசனை வழிபடுகின்றார் (பதிகம் இல்லை). சாத்த மங்கலத்தினின்றும் மருகல்[30] என்ற திருத்தலத்துக்கு எழுந்தருள்கின்றார். "பெருகலாந் தவம்" (5.88) என்னும் திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

ஓது பைங்கிளிக் கொண்பா லமுதூட்டிப்
பாது காத்துப் பலபல கற்பித்து
மாது தான்மரு கற்பெரு மானுக்குத்
தூது சொல்ல விடத்தான் தொடங்குமே. (4)

என்பது நான்காவது திருக்குறுந்தொகை. இப் பதிகத்தில் பாடல் 4 முதல் 9 முடிய அகப் பொருள் துறையமைந்த தாய்ப் பாசுரங்களாக அமைந்துள்ளன.

---

29. சாத்தமங்கை (சீயாத்தமங்கை): நன்னிலத்தி லிருந்து 7 கல் தொலைவு. பேருந்து வழியில் திருப்புகலூர் உள்ளது. திருநீலநக்கநாயனார் தொண்டு புரிந்த தலம். சம்பந்தர் தேவாரம் பெற்றது.

30. மருகல் (திருமருகல்): நன்னிலத்திலிருந்து 7 கல் தொலைவு. நஞ்சு தீண்டிய செட்டிப் பிள்ளையை உயிர்ப் பித்து, அவனுடன் வந்த பெண்ணை அவனுக்குத் திருஞான சம்பந்தர் திருமணம் செய்வித்த அற்புதத் தலம் (சம்பந்தர் 2.18 காண்க).

இங்ஙனம் இத்தலங்களை வழிபட்டுத் திருநாவுக்கரசர் திருப்புகலூருக்கு மீள்கின்றார். ஆளுடைய பிள்ளையாரும் திருவாரூர்ப் பெருமானை வழிபட்டுத் தன் கெழுதகை நண்பர் நாவுக்கரசரை நினைந்த வண்ணம் திருப் புகலூர்க்குத் திரும்புகின்றார். அப்பர் பெருமான் பிள்ளை யாரை எதிர்கொண்டு அழைத்து வந்து முருக நாயனார் திருமடத்தில் அவருடன் அளவளாவி அமர்கின்றார். அப் பொழுது சிறுத்தொண்டர், நீல நக்கர்[31] ஆகிய அடியார்கள் அங்குப் போந்து இந்த இரு பெருமக்களை வணங்கி மகிழ் கின்றனர்.

---

31. இவர்கள் இருவரும் அறுபத்து மூவர்களைச் சேர்ந்த அடியார்கள்.

# 11. திருவாரூர் நிகழ்ச்சிகள்

தேவாரப் பாடல்கள் பெற்ற தலங்களுள் திருவாரூர் பல சிறப்புகளை ஒருங்கே பெற்றுள்ளது. ஏழு திருமுறைகளிலும் மிகுதியான பாடல்கள் இத்திருத்தலத்திற்கே உண்டு.[1] இத்தலத்திற்கு அதிகமான பதிகங்கள் அருளியவர் அப்பர் பெருமான்; இவர் இத்தலத்தை வழிபட்ட பதிகங்கள் 21 (சம்பந்தர்-6; சுந்தரர் 8) இத்தலம் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய இம்மூன்றாலும் சிறந்தது.

மூர்த்தி : புற்றிடங் கொண்டார், வன்மீகநாதர், திருமூலட்ட நாதர். கச்சி ஏகம்பத்தையும் இத்தலத்தையும் பஞ்ச பூதத் தலங்களுள் பிருதிவி தலமாகக் கருதுவதுண்டு. மூலத்தானத்திலுள்ள சிவலிங்க மூர்த்திக்கு (ஏகம்பத்தில் செய்வதுபோலவே) புனுகு சட்டமே சாத்தப்பெறுகின்றது. திருமுழுக்கு ஆவுடையாருக்கே. சந்நிதிக்குத் தெற்கே தனிச் சந்நிதியாகவுள்ள தியாகராச சுவாமியின் சந்நிதி மிகு புகழ் வாய்ந்தது. திருமால் நாடோறும் இம் மூர்த்தியைப் பூசித்துத்தமது இதயத் தானத்திலேயே எழுந்தருளுவித்தனர். முசுகுந்த சக்கரவர்த்தி பெற்ற ஏழுவிடங்க மூர்த்திகளுள் இங்குள்ள மூர்த்தியையே திருமால் பூசித்தது. இவரைப்

---

1. ஆரூர், கச்சி ஏகம்பம், மறைக்காடு ஆகிய மூன்று தலங்கட்கே ஏழுதிருமுறைகளிலும் பதிகங்கள் உண்டு. சீகாழிக்கு மிகுதியான பதிக எண்ணிக்கை 71 ஆக இருப்பினும், ஆறாம் திருமுறையில் ஒரு பாடல்கூட இல்லை.

பவனி வீதி விடங்கன்' (5.7:8) என்று பாசுரம் கூறும். சிதம்பரத்தில் படிகலிங்க பூசை நடப்பது போலவே உச்சிக் காலத்தில் ஏழு விடங்கங்களிலும் நடைபெறுகின்றது. திரு மூலட்டானத்தின் பெயர் பூங்கோயில் என்பது (4.19:5). ஆரூர் கோயில் 5 வேலிப் பரப்புள்ளது (4.53:7)

**தலம் :** மூர்த்தியின் சிறப்புக்கு ஒத்த சிறப்புடையது. சோழ மன்னர்கள் முடிசூட்டு விழாக் கொண்டாடிய 5 நகரங்களுள் ஒன்று. மனுநீதிச் சோழன் பெயர் அன்றும் இன்றும் என்றும் நிலவுவதால் திக்கெலாம் நிறைந்த புகழ்த் திருவாரூர் (6.30:2); சிவபெருமானும் எமதர்மனுமே பசுவாகவும் கன்றாகவும் வந்ததாக வரலாறு. பிறந்தாலே முத்திதரும் பெரும்பதி. ஆரூரிற் பிறந்தார் எல்லாம் சிவ சாரூப்ய இலட்சணம் பொருந்திய சிவகணங்கள் என்று நமி நந்தியடிகட்கு ஆரூர்ப் பெருமான் கண்கூடாகக் காட்டினர்.[2] 'திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்' (6.39:19) என்பர் தம்பிரான் தோழர். "நாளும் வானோர் சிறப்போடு பூசிக்கும் திருவாரூர்" (6.30:4). இத்தலப் பெயரையே தேவாரம் அருளிய மூவர் முதலிகளும் அநுபவித்தனர்.

**தீர்த்தம் :** மூர்த்தி, தலச் சிறப்புகள் போலவே தீர்த்தச் சிறப்பும் பெற்றுள்ளது. கமலாலயம் என்ற திருக் குளம் திருக்கோயிலை யொத்து 5 வேலி அளவுள்ளது. இக் குளத்து நீர்கொண்டே நமிநந்தியடிகள் திருவிளக்கேற்றினர்[3] (4.102:2). பிறவிக்குருடராகிய நமிநந்தியடிகள் இத் திருக்குளத்தின் மேற்குப் புறத்தை அகழ்ந்து விரிவாக்கும் போது, தடை செய்த சமணர்களைக் குருடர்களாக்கி வென்று தாம் பார்வை பெற்று "நாட்டம் மிகு தண்டி" அடிகளாயினர். பெருமான் பங்குனி உத்தரப்பெருவிழாவின்

---

2. பெ. பு. நமிநந்தி-27
3. ஷை. ஷை. 13, 14

இறுதியில் 'உருத்திர பாத தீர்த்தம்' கொடுத்தருள்வதும் இத் திருக்குளத்தில் நிகழ்வது. இவ்வாறு மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகிய மூன்றாலும் சிறந்திருப்பதனால் "அமரர் நாடாளாதே ஆரூர் ஆண்ட அயிராவணமே" (6.25:1) என்று வாயாரப் புகழ்வர் அப்பர் பெருமான்.

மூன்றாவது சுற்றுச் சோழ நாட்டுத் திருத்தலப் பயணத்தை நிறைவு செய்துகொண்டு திருவாரூர் வருகின்றார் அப்பர் பெருமான். சமணர்கள் செய்த வஞ்சனைகளையெல்லாம் கடந்து கல்லையே புணையாகக் கொண்டு கடல் கடந்தேறிய திருநாவுக்கரசர் திருவாரூர் வருவதைக் கேள்வியுற்ற அளவில்லாத அடியார்கள் அவ்வூரின் வெளி மதிலை அடைந்து அவரை எதிர்கொண்டு வரவேற்கின்றனர். பற்றுக்கோடு ஒன்றும் இல்லாத கொடியவர்களான "சமணர்களிடத்தே பொருந்தியிருந்ததனால் ஏற்பட்ட சூலை நோயினால் அவர்களைவிட்டு நீங்கிய எளியேனால் பெறத்தக்கதோ புற்றிடங் கொண்ட பெருமானுடைய அடியார்கட்குத் தொண்டு செய்யும் பெரும் பேறாகிய இப்புண்ணியம்?" என்று கூறித் 'தான்' எனும் உணர்வற்ற நிலையில் 'குலம்பலபாவரு' (4.101) என்ற திருவிருத்தப் பதிகத்தைப் பாடிக்கொண்டு திருவாரூர்த் திருவீதியை அடைகின்றார்.

புண்ணிய சாத்திரப் பேய்கள்
பறிதலைக் குண்டரைவிட்(டு)
எண்ணில் புகழீசன் றன்னருள்
பெற்றேற்கும் உண்டுகொலோ
திண்ணிய மாமதில் ஆரூர்த்
திருமூலட் டானனெங்கள்
புண்ணியன் தன்னடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. (7)

என்பது இப் பதிகத்தின் ஏழாவது பாடல். இப்பதிகத்தின் எல்லாப் பாடல்களுமே 'உண்டுகொலோ......மூலட்டானப்

பெருமான் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே' என்று முடிவது அப்பர் பெருமான் உள் குழைந்து பாடுவதைக் காட்டுகின்றது.

அடியார்களுடன் திருக்கோயிலின் தோரண வாயிலை அடைந்து தேவாசிரிய மண்டபத்தை[4] இறைஞ்சுகின்றார். பின்னர், திருமாளிகை வாயிலினுட் புகுந்து புற்றிடங் கொண்ட பெருமான் திருமுன்னர் நின்று பணிந்து 'கற்றவர்கள் உண்ணும்' (6.32) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்த் திருத்தாண்டக மாலையால் சேவிக்கின்றார்.

மலையான் மடந்தை மணாளா போற்றி
  மழவிடையாய் நின்பாதம் போற்றி போற்றி
நிலையாக என்னெஞ்சில் நின்றாய் போற்றி
  நெற்றிமேல் ஒற்றைக்கண் உடையாய் போற்றி
இலையாய மூவிலைவே லேந்தீ போற்றி
  ஏழ்கடலும் ஏழ்பொழிலும் ஆனாய் போற்றி
சிலையாலன் றெயிலெரித்த சிவனே போற்றி
  திருமூலட் டானனே போற்றி போற்றி. (3)

என்பது இச்செந்தமிழ் மாலையில் மூன்றாவது வாடா நறுமலர். எல்லாப் பாடல்களையும் நெஞ்சுருகப் பாடினால் அப்பர் பெருமானின் உணர்ச்சியைப் பெற முயலலாம். இப் பதிகப் பாடல்கள் யாவும் 'போற்றி போற்றி' என்று முடிவதால் இது 'போற்றித் திருத்தாண்டகம்' என்ற பெயர் பெறுகின்றது.

அடுத்து 'காண்டலே கருத்தாய்' (4.20) என்ற கலைப் பதிகம் பாடிப் பரவுகின்றார்.

பிறத்தலும் பிறந்தாற் பிணிப்பட
  வாய்த்தசைந் துடலம் புகுந்துநின்

4. கீழைக்கோபுரவாயிலுக்குள் நுழைந்தவுடன் காணப் பெறும் 1000 கால் மண்டபமே இத் தேவாசிரிய மண்டபம்.

றிறக்குமா றுளதே இழிந்தேன் பிறப்பினைநான்
அறத்தையே புரிந்த மனத்தனாய்
ஆர்வச்செற் றக்குரோத நீக்கியுன்
திறத்தனா யொழித்தேன் திருவாரூ ரம்மானே. (8)

என்பது இப்பதிகத்தின் எட்டாவது திருப்பாடல்.

பின்னர் திருக்கோவிலை வலம் வந்து புறம்போந்து தேவாசிரிய மண்டபத்தை அடைகின்றார். அடைந்தவர், 'மெய்யெலாம்' (4.5) என்ற முதற் குறிப்பையுடைய செந் தமிழ்ப் பதிகம் பாடித் தம் செயலற்ற நிலையைப் புலப் படுத்துகின்றார். இதில்,

என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட்
டென்னையோர் உருவமாக்கி
இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட்
டென்னுள்ளம் கோயிலாக்கி
அன்பிருத்தி அடியேனைக் கூழாட்கொண்
டருள்செய்த ஆரூரர்தம்
முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக்
காக்கைபின் போனவாறே. (2)

என்பது மூன்றாம் பாடல். இப்பதிகத்தின் ஒவ்வொரு பாட லின் இறுதியிலும் ஒரு பழமொழி அமைந்திருப்பதால் இது 'பழமொழிப் பதிகம்' என்ற பெயரைப் பெறுகின்றது.

நாவுக்கரசர் பெருமான் ஆரூர்ப் பெருமானைக் காலந் தோறும் கும்பிட்டுத் திருத்தொண்டு புரியும் நிலையைச் சேக்கிழார் பெருமான்,

மார்பாரப் பொழி கண்ணீர் மழைவாருந்
திருவடியும் மதுர வாக்கில்
சேர்வாகுந் திருவாயில் தீந்தமிழின்
மாலைகளும் செம்பொற் றாளே

சார்வான திருமனமும் உழவாரத்
தனிப்படையும் தாமு மாகிப்
பார்வாழத் திருவீதிப் பணி செய்து
பணிந்தேத்திப் பரவிச் செல்வார்.[5]

என்று விவரிப்பார். மழைபோலக் கண்ணீர் வழியும் திருவடிவமும், இனிய தமிழ்ப் பதிகங்கள் பிறக்கும் திருவாயும், இறைவன் திருவடிகளையே சார்ந்திருக்கும் மனமும், உழவாரப் படையைத் தாங்கிய வண்ணமும் கொண்ட நிலையில் அப்பர் பெருமான் திருவீதிப் பணிகளைச் செய்கின்றார். ஒவ்வொரு காலமும் புற்றிடம் கொண்ட பெருமானைக் கும்பிட்டு 'பாடிளம் பூதத்தினானும்' (4.4) என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம் பாடி மனங் கரைந்து உருகுகின்றார்.

ஆயிரந் தாமரை போலும்
ஆயிரம் சேவடி யானும்
ஆயிரம் பொன்வரை போலும்
ஆயிரம் தோளுடை யானும்
ஆயிரம் ஞாயிறு போலும்
ஆயிர நீண்முடி யானும்
ஆயிரம் பேருகந் தானும்
ஆரூ ரமர்ந்தஅம் மானே. (8)

என்பது இதன் எட்டாவது பாடல். பாடல்கள் யாவும் படித்து அநுபவிக்கத் தக்கவை. இவற்றில் இறைவனின் தன்மைகள் கூறப் பெறுகின்றன.

அடுத்து, 'வேம்பினை' (4.102) என்ற திருவிருத்தச் செந்தமிழ்ப் பதிகம் பாடிப் பூங்கோயிலமர்ந்துள்ள பெருமானைப் போற்றுகின்றார். இதில்,

5. பெ. பு. திருநாவுக். 225

ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன்
    ஆரூர் அகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி
    உத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாதன்
    அடித்தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை
    நீணா டறியுமன்றே. (2)

*என்பது இரண்டாவது திருவிருத்தம். இதில், திருவாரூர்த் திருக்கோயிலில் நீரால் திருவிளக்கெரித்தும் இறைவனுக்குப் பங்குனி உத்திரப் பெருவிழாவைச் சிறப்புற நடைபெறச் செய்தும் திருத்தொண்டு புரிந்த நான்மறைவல்ல அந்தணராகிய நமிநந்தியடிகளைப் பாராட்டிப் போற்றுவதைக் கண்டு மகிழலாம். இப்பதிகத்தில் 7,8,9,10 ஆம் பாடல்கள் காணப்பெறவில்லை.*

*அடுத்து, ஆரூர் அரநெறித்*[6] *திருக்கோயில் பெருமானை வழிபடுகின்றார் இரண்டு திருப்பதிகங்களால்.* 'எத்தீ புகினும்' *(4.17) என்ற திருப்பதிகத்தால் முதலில் போற்றுகின்றார்.*

முடிவண்ணம் வானமின் வண்ணந்தம் மார்பின்
பொடிவண்ணம் தம்புக ழூர்தியின் வண்ணம்
படிவண்ணம் பாற்கடல் வண்ணம்செஞ் ஞாயி(று)
அடிவண்ணம் ஆரூர் அரநெறி யார்க்கே. (9)

*என்பது இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடல். அடுத்து* 'பொருக்கை மதக்' *(6.33) என்ற முதற் குறிப்பையுடைய செந்தமிழ் மாலையால் வழிபடுகின்றார்.*

---

*6. ஆரூர் அரநெறி : ஆரூர்க் கோயிலின் தெற்குப் பிரகாரத்தில் மேற்குச் சந்நிதித் தனிக்கோயிலாக உள்ளது. இக்கோயிலிலேயே நமிநந்தியடிகள் பல தொண்டுகள் புரிந்து நீரால் விளக்கேற்றியது,*

பொருளியல்நற் சொற்பதங்க ளாயினானைப்
புகலூரும் புறம்பயமும் மேயான் தன்னை
மருளியலும் சிந்தையர்க்கு மருந்து தன்னை
மறைக்காடும் சாய்க்காடும் மன்னி னானை
இருளியல்நல் பொழிலாரூர் மூலட் டானத்
தினிதமரும் பெருமானை இமையோ ரேத்த
அருளியனை அரநெறியி லப்பன் தன்னை
அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. (7)

என்பது ஏழாவது தமிழ் மணம் கமழும் நறுமலர். இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலும் 'அரநெறியிலப்பன் தன்னை அடைந்தடியேன்அறுவினைநோய் அறுத்தவாறே' என்று முடிகின்றது. பாடல்களைப் பன்முறை படித்து அநுபவிக்கும் போது இந்த இறுதித் தொடர் நம்மைப் பக்தியின் கொடுமுடிக்கு இட்டுச் செல்வதை அறியலாம்.

மீண்டும் புற்றிடங்கொண்ட பெருமான் திருக்கோயிலுக்கே வருகின்றார். 'சூலப்படையானை' (4.19) என்ற திருப்பதிகம் பாடி மூலட்டான இறைவனைப் போற்றுகின்றார்.

வஞ்சனையா ரார்பாடும் சாராத மைந்தனைத்
துஞ்சிருளில் ஆடல் உகந்தானைத் தன்தொண்டர்
நெஞ்சிருள் கூரும்பொழுது நிலாப் பாரித்
தஞ்சுடராய் நின்றானை நான்கண்ட தாரூரே. (8)

என்பது எட்டாவது பாடல். அடுத்து 'படுகுழிப் பவ்வத்' (4.52) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ் திருநேரிசை மாலையால் வழிபடுகின்றார்.

உயிர்நிலை உடம்பே காலாம்
உள்ளமே தாழி யாகத்
துயரமே ஏற்ற மாகத்
துன்பக்கோ லதனைப் பற்றிப்

பயிர்தனைச் சுழிய விட்டுப்
பாழ்க்குநீர் இறைத்து மிக்க
அயர்வினால் ஐவர்க் காற்றேன்
ஆரூர்மூ லட்ட னாரே. (7)

என்பது ஏழாவது வாடாத தமிழ் மணம் கமழும் நறுமலர். இப்பதிகத்தின் பாடல்கள் யாவும் படித்து அநுபவிக்கத் தக்கவை. ஐம்புலன்கள் படுத்தும் பாட்டைப் பட்டவர்த்தன மாக எடுத்துக் காட்டுகின்றார். 'குழல் வலங் கொண்ட' (4.53) என்ற திருநேரிசைப் பதிகத்தில்,

'நாகத்தை நங்கை அஞ்ச
நங்கையை மஞ்ஞை என்று
வேகத்தைத் தவிர நாகம்
வேழத்தின் உரிவை போர்த்துப்
பாகத்தின் நிமிர்தல் செய்யாத்
திங்களை மின்னென் றஞ்சி
ஆகத்திற் கிடந்த நாகம்
அடங்கும்ஆ ரூர னார்க்கே. (2)

என்பது இரண்டாம் பாடல். இதிலுள்ள கற்பனை சிந்தித்து மகிழத் தக்கது.

அடுத்து, இரண்டு திருக்குறுந்தொகைப் பதிகங்களால் மூலட்டானத்தானை இறைஞ்சுகின்றார். 'எப்போதும்' (5.6) என்ற முதற் குறிப்புடைய குறுந்தொகைப் பதிகத்தில்,

துளைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்
வளைக்கை யாளையோர் பாக மகிழ்வெய்தித்
திளைக்குந் திங்கட் சடையில் திசைமுழு
தளக்குஞ் சிந்தையர் போலும்ஆ ரூரரே. (4)

என்பது நான்காவது நறுமலர். அடுத்து "கொக்கரை" (5.7) என்ற முதற் குறிப்பையுடைய திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

வண்டு லாமலர் கொண்டு வளர்சடைக்(கு)
இண்டை மாலை புனைந்தும் இராப்பகல்
தொண்ட ராகித் தொடர்ந்து விடாதவர்க்(கு)
அண்டம் ஆளவும் வைப்பர்ஆ ரூரரே. (3)

என்பது மூன்றாம் பாடல். இப்பதிகத்தின் 7, 8 ஆகிய பாடல்கள் 'தாய்ப் பாசுரங்களாக' அமைந்துள்ளன, இவை இரண்டும் வேறு பதிகத்தைச் சார்ந்தவையோ என்று ஐயப் படுபவர் சிவக் கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார்.

அடுத்துவரும் எட்டுத் திருத்தாண்டகச் செந்தமிழ் மாலைகள் அற்புதமாகப் புனையப் பெற்றவை. இவற்றுள் 'கைம்மான' (6,24) என்ற முதற் குறிப்புடைய திருத் தாண்டக மாலையில்,

மலைவளர்த்த மடமங்கை பாகத் தான்காண்;
மயானத் தான்காண்;மதியஞ்சூடி னான்காண்;
இலைவளர்த்த மலர்க்கொன்றை மாலை யான்காண்;
இறையவன்காண்; எரிதிரைநீர் நஞ்சுண் டான்காண்;
கொலைவளர்த்த மூவிலைய சூலத் தான்காண்;
கொடுங்குன்றன் காண்;கொல்லை யேற்றி னான்காண்;
நிலைவளர்த்த சரந்துரந்த திறத்தி னான்காண்;
திருவாரு ரான்காண்;என் சிந்தை யானே. (9)

என்பது இப்பதிகத்தின் ஒன்பதாவது வாடா நறுமலர்' தொடர்ந்து பாடல்களை இசையுடன் படிக்கும்போது 'காண்...காண்' என்று திரும்பத் திரும்ப ஒலித்து, பக்தியின் கொடுமுடியை எட்டத் துணை செய்கின்றது.

'உயிராவணம்' (6.25) என்ற முதற் குறிப்பினையுடைய திருத்தாண்டக மாலையில்,

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்;
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்;
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்;

அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்;
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்;
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே. (7)

என்பது இப்பதிகத்திலுள்ள ஒரே ஒரு அகத்துறைப் பாடல். உள்ளத்தை உருக்கும் ஒப்பற்ற பாடல்; இது தாய்க் கூற்றாக உள்ளது. இது சைவ சித்தாந்தக் கருத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. முதலில் தலைவி (சீவான்மா) தலைவனின் பெயர் கேட்கின்றாள்; பின் அவனது வண்ணம் கேட்கின்றாள்; அவனுடைய ஆரூர் கேட்கின்றாள்; அவனிடத்தில் பித்தாகின்றாள்; உலகப் பற்றை விடுகின்றாள்; தன்னிலையை மறக்கின்றாள்; தன் பெயரையும் இழக்கின்றாள்; தலைவனுடைய தாளினைத் தலைப்படுகின்றாள். (பாசத்தை நீக்கிப் பதியை அடையும் உயிரின் தன்மை ஈண்டுக் கூறப்பெறுகின்றது). தனியாக ஓர் அகப்பாடல் எப்படி வந்து இப்பதிகத்திலேறியது என்பதை அறியக்கூடவில்லை.

இதனை அடுத்து "பாதித்தன்" (6.26) என்ற செந்தமிழ்த் திருத்தாண்டக மாலையால் வழிபடுகின்றார். இதில்,

மெய்ப்பால்வெண் ணீறணித்த மேனி யானை
வெண்பளிங்கி னுட்பதித்த சோதி யானை
ஒப்பானை யொப்பில்லா வொருவன் தன்னை
உத்தமனை நித்திலத்தை உலக மெல்லாம்
வைப்பானைக் களைவானை வருவிப் பானை
வல்வினையேன் மனத்தகத்தே மன்னி னானை
அப்பாலைக் கப்பாலைக் கப்பா லானை
ஆரூரிற் கண்டடியேன் அயர்ந்த வாறே (4)

என்பது நான்காம் பாடல். இப்பதிகத்தின் 7, 8, 9, 10ஆம் பாடல்கள் கிடைக்கப் பெறவில்லை.

*இதனை அடுத்து வழிபடுவதற்காக அருளப் பெற்றது* **"நீற்றினையும்"** *(6.28) என்ற முதற்குறிப்புடைய பதிக மாகும். இதில்,*

காமனையும் கரியாகக் காய்ந்தார் போலும்
கடல்நஞ்ச முண்டிருந்த கண்டர் போலும்
சோமனையும் செஞ்சடைமேல் வைத்தார் போலும்
சொல்லாகிச் சொற்பொருளாய் நின்றார் போலும்
நாமனையும் வேதத்தார் தாமே போலும்
நங்கையோர் பால்மகிழ்ந்த நம்பர் போலும்
ஆமனையும் திருமுடியார் தாமே போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. (6)

*என்பது ஆறாவது பாடல்: எல்லாப் பாடல்களும் படித்து இன்புறத் தக்கவை. 'திருமணியை' (6.29) என்ற முதற் குறிப்புடைய தெய்வத் திருத்தாண்டக செந்தமிழ் மாலை யில்,*

முந்திய வல்வினைகள் தீர்ப்பான் தன்னை
மூவாத மேனிமுக் கண்ணி னானைச்
சந்திரனும் வெங்கதிரு மாயி னானைச்
சங்கரனைச் சங்கக் குழையான் தன்னை
மந்திரமும் மறைப்பொருளும் ஆனான் தன்னை
மறுமையும் இம்மையு மானான் தன்னை
அந்திரனை ஆரூரி லம்மான் தன்னை
அறியா தடிநாயேன் அயர்ந்த வாறே. (4)

*என்பது நான்காம் வாடா செந்தமிழ் நறுமணமலர். பொது வாகத் தாண்டகச் செய்யுட்கள் யாவுமே உள்ளத்தை உருக்குபவை.*

"எம்பந்த வல்வினை நோய்' *(6.30) என்ற முதற் குறிப் புடைய திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையில்,*

பிறப்போ டிறப்பென்று மில்லா தான்காண்;
பெண்ணுருவோ டாணுருவ மாயி னான்காண்;
மறப்பெடுமென் சிந்தைமருள் நீக்கி னான்காண்;
வானவரு மறியாத நெறிதந் தான்காண்:
நறப்படுபூ மலர்தூபந் தீப நல்ல
நறுஞ்சாந்தங் கொண்டேத்தி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்கும் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. (5)

*என்பது ஐந்தாவது தமிழ் மணங் கமழும் வாடாத நறுமலர். இம் மாலையிலுள்ள பா மலர்கள் யாவுமே சிறந்த துதி மலர்கள்.*

'இடர்கெடுமாறெண்ணுதியேல்' *(6.31) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்ப் பாமாலையில்,*

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுகு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடி
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ என்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே. (3).

*என்பது மனத்தை உருக்கும் அற்புதப் பாடல்.*[7] *இந்தப் பதிகத்திலுள்ள பாடல்களனைத்தையும் பாடிப் பாடி உள்ளம் உருக வேண்டும். நாவுக்கரசர் தமது நெஞ்சைத் தனியே நிறுத்திச் சொல்வது சிவகோடிகள் அனைத்திற்கும் சொல்வது போன்ற பாவனையில் அமைந்துள்ளது இப் பதிகம்.*

---

*7. இது தம் தமக்கையார் திலகவதியாரின் சிவத் தொண்டினை நெஞ்சில் நிறுத்திப் பாடியதுபோல் தோன்றுகின்றது.*

அடுத்து 'ஒருனாய் உலகேத்த' (6.34) என்ற திருத் தாண்டகப் பதிகத்தால் ஆரூர்ப் பெருமானை நோக்கிச் செய்யும் வழிபாடு மிகவும் அற்புதமானது.

ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவும் ஆன நாளோ
கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையும் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும் விண்ணும் தெரிந்த நாளோ
மான்மறிக்கை யேந்தியோர் மாதோர் பாகத்
திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே. (1)

என்பது இப்பதிகத்தின் முதல் பாடல். எல்லாப் பாடல் களையும் படித்து நாவேந்தரின் இறையநுபவத்தைப் பெற முயல வெண்டும். பதிகம் இறைவனின் தொன்மையைக் கூறுவதாக அமைந்துள்ளது. ',எம்பெருமான் திருவாரூர்க் கோயிலைக் கொண்டமை மாதோர் பாகம் கொள்ளும் முன்போ? பின்போ? முப்புரம் எரித்த முன்னோ? பின்னோ? தில்லை அம்பலத்து ஆடும் முன்போ? பின்போ? மதியைச் சூடும் முன்னோ? பின்னோ? ஆலின்கீழ் அறம் உரைப் பதற்கு முன்னோ? பின்னோ? சலந்தரனைக் கொல்லும் முன்போ? பின்போ? வேதத்தை விரிப்பதற்கு முன்போ? பின்போ? திசை எட்டும் தெரிப்பதற்கு முன்னோ? பின்னோ? தேசம் உம்மை அறிவதற்கு முன்னோ? பின்னோ?'' என்று வினவுவதாகப் பாசுரங்கள் அமைந் துள்ளன.

இங்ஙனம் திருவாரூரில் இறைவன்மீது பாமலைகள் சாத்திக் காலங்கழித்துக் கொண்டிருந்த நாட்களில்தான் திருப்புகலூர்ப் பெருமானை வழிபடவேண்டும் என்னும் எண்ணம் நாவேந்தரின் சிந்தையில் முகிழ்க்கின்றது. இதற்கு முன் வலிவலம் முதலான திருத்தலங்களை வழிபடு கின்றார். பின்னர்தான் திருப்புகலூர் வருகின்றார், சம்பந்தப் பெருமானின் சந்திப்பும் நேர்கின்றது.

# 12. காழிப் பிள்ளையாருடன் தல வழிபாடு

திருப்புகலூரில் எழுந்தருளியிருந்த நாவுக்கரசர் பெருமானும் காழிப்பிள்ளையாரும் திருநீல நக்கர், சிறுத்தொண்டர், முருக நாயனார் முதலிய அடியார்கள் விடை பெற்றேகத் திருஅம்பர்[1] என்னும் திருப்பதியை அடைகின்றனர். இதனைச் சேக்கிழார் பெருமான்,

திருநீல நக்கடிகள்
　　சிறுத்தொண்டர் முருகனார்
பெருநீர்மை அடியார்கள்
　　பிறரும்விடை கொண்டேக
ஒரு நீர்மை மனத்துடைய
　　பிள்ளையா ருடன்அரசும்
வருநீர்செஞ் சடைக்கரந்தார்
　　திருஅம்பர் வணங்கினார்[2].

1. அம்பர் பெருந்திருக்கோயில் (அம்பல் கோயில்): மயிலாடு துறை - காரைக்குடி இருப்பூர்தி வழியில் பூந்தோட்டம் என்ற நிலையத்திலிருந்து 2 கல் தொலைவு. கோட்செங்க சோழ நாயனார் எடுப்பித்த எழுபது கோயிலுள் இதுவும் ஒன்று; செயற்கையாலான கட்டுமலைக் கோயில். யானை உள் நுழையாதபடிச் சிறு வாயில் வைத்துக் கட்டப் பெறும். இவ்வகைக் கோயிலுக்கு மாடக் கோயில், பெருங் கோயில் என்று பெயர். சோமாசி மாற நாயனார் தமது மறையோர் குலத்துக்கேற்ப நாடோறும் முத்தீ வளர்த்து வழிபட்டு முத்தி பெற்ற தலம்.

2. பெ. பு. திருநாவுக். 246.

என்று கூறுவர். (இத்தலத்துக்கு அப்பர் பதிகம் இல்லை). இத்திருப்பதிப் பெருமானை வணங்கி விடைபெற்று திருக் கடலூர்'[3] என்னும் திருத்தலத்துக்கு வருகின்றனர். அப்பர் பெருமான் மூன்று பதிகங்களால் அமிர்தலிங்கத்தை வழிபடு கின்றார். "பொள்ளத்த காயமாய" (4.31) என்ற முதற் குறிப்பையுடைய திருநேரிசைப் பதிகத்தில்,

பழியுடை யாக்கை தன்னில்
　　பாழுக்கே நீரி றைத்து
வழியிடை வாழ மாட்டேன்
　　மாயமும் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை
　　ஐவரால் அலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன்
　　கடலூர்வீ ரட்ட னாரே (6).

---

3. திருக்கடலூர் வீரட்டம் (திருக்கடையூர்): மாயூரம் -தரங்கம்பாடி இருப்பூர்தி வழியிலுள்ள திருக்கடையூர் நிலையத்திலிருந்து $\frac{1}{4}$ கல் தொலைவு. மார்க்கண்டன் 'என்றும் பதினாறாக' இருக்க வரம்பெற்ற அற்புதத்தலம். அமிர்த கடமே சிவலிங்கமாயிருத்தலின்அமிர்த கடேசுவரர் என்பது இறைவன் பெயர். குங்கிலியக்கலய நாயனாரும் காரிநாயனாரும் தொண்டு செய்து முத்தி பெற்ற தலம். 'திருக்களிற்றுப் படியார்' என்ற சித்தாந்த சாத்திரம் இயற்றிய உய்யவந்த தேவநாயனார் அவதரித்த தலம். அபிராமபட்டர் அபிராமி அந்தாதி பாடி அபிராமி அம்மை யின் அருளால் அமாவாசையன்று முழுமதியை ஆகாயத்தில் காட்டிய அற்புதம் நிகழ்ந்த தலம். சித்திரைப் பெருவிழா வில் 6 - ஆம் நாள் கால சம்கார உற்சவம் புகழ் பெற்றது. கார்த்திகை சோம வாரம்தோறும் 1008 சங்காபிடேகமும் புகழ்பெற்றது. அன்பர்கள் தமது 60-ஆம் ஆண்டு நிறைவை இத்தலத்தில் ஆயுள் ஓமம் முதலியன செய்து கொண் டாடுவது வழக்கமாக இருந்து வருகின்றது. அட்டவீரட்ட ஙங்களுள் இத்தலமும் ஒன்று.

என்பது ஆறாவது திருநேரிசை. இப்பதிகத்திலுள்ள பாடல்கள் யாவும் உள்ளத்தை உருக்குபவை. ''மருள் துயர்தீர'' (4.107) என்ற திருவிருத்தப் பதிகத்தில்,

பதத்தெழு மந்திரம் அஞ்செழுத்
தோதிப் பிரிவினொடும்
இதத்தெழு மாணிதன் இன்னுயிர்
உண்ண வெகுண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குருதிப்
புனலா றொழுக
உதைத்தெழு சேவடி யான்கட
வூருறை உத்தமனே. (2)

என்பது இரண்டாவது திருவிருத்தம். மார்க்கண்டன் உயிரைக் கவர வந்த காலனை அடர்த்து அந்தச் சிறுவனுக்கு ''என்றும் பதினாறு'' என்ற சிரஞ்சீவித்துவத்தை அளித்த நிகழ்ச்சி பத்துத் திருவிருத்தத்திலும் குறிப்பிடப் பெற்றிருத்தலைக் கண்டு மகிழலாம். ''மலைக்கொளானை'' (5.37) என்ற குறுந்தொகைப் பதிகத்தில்,

ஞான மாகிய நன்குண ரானையார்
ஊனை வேவ உருக்கிய வானையார்
வேன லானை யுரித்துமை யஞ்சவே
கான லானைக் கண்டீ கடவூரே. (3)

என்பது மூன்றாவது குறுந்தொகை. இப்பதிகத்தின் பாடல் 6 - இல் ''கடுத்த காலனைக் காய்ந்த'' என்ற தொடரால் மார்க்கண்டன் வரலாறு குறிப்பிடப்பெறுகின்றது. திருக்கடவூரில் இருந்தபொழுது இந்த இரு பெரு அடியார்களும் அடியார் குழுவுடன் குங்குலியக் கலயனார் திருமடத்தில் திருவமுது செய்கின்றனர்.[4]

---

4. பெ. பு. திருநாவுக். 247

அடுத்து, திருக்கடவூர் மயானம்[5] என்ற திருத்தலத்துக்கு வருகின்றனர். இங்கு அப்பர் பெருமான் "குழைகொள் காதினர்'' (5.38) என்று தொகைப் பதிகம் பாடித் திருக்கடவூர் மயானத்தாரை வழிபடுகின்றார். இதில்

உன்னி வானவர் ஓதிய சிந்தையில்
கன்னல் தேன்கட வூரின் மயானத்தார்
தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெலாம்
பின்னை என்னார் பெருமா னடிகளே (2)

என்பது இரண்டாவது பாடல்.

மயானத்துப் பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு ஆக்கூர்[6] வந்தடைகின்றனர். அப்பர் பெருமான் "முடித் தாமரையணிந்த'' (6.21) என்ற திருத்தாண்டகப் பதிகம் பாடித் தான்தோன்றியப்பனை வழிபடுகின்றார். இப் பதிகத்தின்,

மாதூரும் வாள்நெடுங்கண் செவ்வாய் மென்தோள்
மலைமகளை மார்பத் தணைந்தார் போலும்
மூதூர்முது திரைகள் ஆனார் போலும்
முதலும் இறுதியும் இல்லார் போலும்
தீதூர நல்வினையாய் நின்றார் போலும்
திசையெட்டும் தாமேயாஞ் செல்வர் போலும்
ஆதிரை நாளாய் அமர்ந்தார் போலும்
ஆக்கூரில் தான்தோன்றி அப்ப னாரே. (6)

---

5. திருகடவூர் மயானம் (திருமெய்ஞ்ஞானம்): திருக்கடையூர் இருப்பூர்தி நிலையத்திலிருந்து $1\frac{1}{2}$ கல் தொலைவு. பிரம்மதேவனை நீறாக்கிய மயானம்.

6. ஆக்கூர்: மயிலாடுதுறை-தரங்கம்பாடி இருப்பூர்தித் தடத்தில் ஆக்கூர் என்ற நிலையத்திலிருந்து $\frac{1}{4}$கல் தொலைவு சிறப்புலி நாயனார் தலம். ஆலயப் பெயர் 'தான்தோன்றி மாடம்' என்பது. (தான்தோன்றி—சுயம்பு)

என்பது ஆறாவது திருத்தாண்டகப் பாடல். இப்பதிகத் திருத்தாண்டகங்கள் யாவும் பன்முறை படித்து அநுபவிக்கத் தக்கவை.

ஆக்கூர் அப்பனிடம் விடைபெற்றுக்கொண்டு மீயச்சூர்[7] என்ற தலத்திற்கு வருகின்றனர் இரு பெருமக்களும். மீயச்சூர் இளங்கோயில் எம்பெருமான்மீது அப்பர் தோற்றுங் கோயிலும் (5.11) என்ற திருக்குறுந்தொகைப் பதிகம் பாடிப் போற்றுகின்றார்.

படைகொள் பூதத்தன் பைங்கொன்றைத் தாரினன்
சடைகொள் வெள்ளத்தன் சாந்தவெண் ணீற்றினன்
விடைகொ ளூர்தியி னான்திரு மீயச்சூர்
இடைகொண் டேத்தநின் றாரிளங் கோயிலே. (7)

என்பது இப் பதிகத்தின் ஏழாவது பாடல். இளங்கோயிலின் பெருமையை நாவுக்கரசர் போற்றியிருப்பதைவிட யாரும் போற்றியிருத்தல் முடியாது.

---

7. மீயச்சூர்: பேரளம் - காரைக்கால் இருப்பூர்திப் பாதையில் பேரளம் நிலையத்திலிருந்து ½ கல் தொலைவு. தேவியார் திருக்கோலம் அமர்ந்த நிலையில் உள்ளது; அழகு மிக்கது. மீயச்சூர் இளங்கோயில் மேற்படிக் கோயிலின் திருச்சுற்றில் (பிரகாரத்தில்) உள்ளது. இளங்கோயில் என்பது பாலாலயம் என்று வடமொழியில் வழங்குவர். கோயில் திருப்பணி நடைபெறுங் காலத்தில் மூலத்தான மூர்த்தியைக் கலா கர்ஷணம் செய்து ஒரு பாலாலயத்தில் வேறொரு மூர்த்தியில் ஆவாஹனம் செய்து பூசிப்பது ஆகமமுறை. அப்பர் சுவாமிகள் இத்தலம் சென்ற காலத்தில் திருப்பணி நடந்தது போலும். அவர் திருவாக்கில் மீயச்சூருக்குப் பதிகம் இல்லாமல் இளங்கோயிலுக்கே பதிகம் இருப்பதும், இப்பதிகத்திலும் "தோற்றும் கோயிலும் தோன்றிய கோயிலும்' (அப்பர் 5.11:1) என்ற குறிப்பிருப்பதும் சம்பந்தர் திருவாக்கில் இளங்கோயிலுக்கு இல்லாதிருப்பதும் மீயச்சூருக்கே பதிகம் (சம்பந்தர் 2:02) இருப்பதும் மேற்கூறிய உண்மையை வலியுறுத்தும். இது காவிரியின் தென்கரைத்தலம்.

*மீயச்சூர் அப்பனிடம் விடைபெற்றுக்கொண்டு* **திருவீழிமிழலை**[8] *வருகின்றனர். திருவீழிமிழலையிலுள்ள பெருமக்கள் இருவருக்கும் பெரிய வரவேற்பு நல்க, இருவரும் விண்ணிழி விமானத்தில் வீற்றிருந்தருளும் பெருமானை வணங்கி மகிழ்கின்றனர். இதனைச் சேக்கிழார் பெருமான்,*

**வீழி மிழலை வந்தணைய**
**மேவு நாவுக் கரசினையும்**
**காழி ஞானப் பிள்ளையையும்**
**கலந்த உள்ளக் காதலினால்**
**ஆழி வலவன் அறியாத**
**அடியார் அடியார் அவர்களுடன்**
**வாழி மறையோர் எதிர்கொண்டு**
**வணங்க வணங்கி உள்புக்கார்**

**மாட வீதி அலங்கரித்து**
**மறையோர் வாயின் மணிவிளக்கு**
**பீடு கதலி தழைப்பூகம்**
**நிரைத்து நிறைபொற் குடமெடுத்துப**

---

8. திருவீழிமிழலை : மயிலாடுதுறை - காரைக்குடி இருப்பூர்திப் பாதையில் பூந்தோட்டம் என்ற நிலையத்திலிருந்து 7 கல் தொலைவிலுள்ளது. சக்கராயுதம் பெறுவதற்காகத் திருமால் நாடோறும் 1000 தாமரை மலர்களால் இத்தலத்து ஈசனைக் அருச்சித்து வர ஒருநாள் ஒரு மலர் குறைய, தன் கண்ணையே எடுத்து அருச்சனை முடித்ததை 4.64:8 என்ற பாசுரம் கூறும். திருமால் விண்ணிலிருந்து கொணர்ந்த விமானமே கோயிலாயிற்றென்பதை சம்பந்தரின் பாசுரம் (3.119:7) கூறும். கருவறை இலிங்கமூர்த்தியின் பின்புறம் பார்வதி - பரமேசுவரன் திருமணக்கோலம் உள்ளது. பஞ்சம் வந்தபோது அப்பருக்கும் சம்பந்தருக்கும் அடியார்க்கமுதளிப்பதற்காக இறைவன் நாடோறும் காசு படி கொடுத்ததைப் பாசுரம் (சுந்தரர் தேவாரம் 7.88;8) கூறும். இக்காசுகளுள் அப்பருக்களித்த காசு சுலபமாக மாறிற்று. சம்பந்தருக்களித்த காசு வாசியுள்ளதாக

பூடு பெருகும் வாகீசர்
பிள்ளை யாரும் தொண்டர்களும்
கூட மகிழ்ந்து விண்ணிழிந்த
கோயில் வாயில் சென்றணைந்தார். (9)

என்று காட்டுவர். இருவரும் திருக்கோயிலினுட் புகுந்து, "வலம் வந்து, முன்றில் வணங்கி, முக்கட் செக்கர்ச் சடைமவுலி வென்றிவிடையார் சேவடிக் கீழ் விழுந்தார் எழுந்தார் விம்மினார்"[10] நாவுக்கரசர் பெருமான் "போரானை ஈருரிவைப் போர்வையானை" (6.50) என்னும் முதற் குறிப்பையுடைய செந்தமிழ்த் தாண்டக மாலையைத் திருவீழிமிழலையானுக்குச் சாத்தி வணங்குகின்றார்.

தூயானைச் சுடர்பவளச் சோதி யானைத்
தோன்றிய எவ்வுயிர்க்கும் துணையாய் நின்ற
தாயானைச் சக்கரமாற் கீந்தான் தன்னைச்
சங்கரனைச் சாந்தோக சாமம் ஓதும்
வாயானை மந்திரிப்பார் மனத்து ளானை
வஞ்சனையல் அஞ்செழுத்தும் வழுத்து வார்க்குச்
சேயானைத் திருவீழி மிழலை யானை
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. (4)

என்பது நான்காவது திருத்தாண்டக வாடாமலர். "செய்ய சடையார் தமைச் சேரார் தீங்கு நெறி சேர்கின்றார்" என்னும் கருத்தமையத் 'திருவீதி மிழலையானைச் சேராதார் தீ நெறிக்கே சேர்கின்றாரே' என ஒவ்வொரு தாண்டகமும் முடியும் வண்ணம் பாடியுள்ளதால் இந்தாண்டகம் 'உய்யும் நெறித்தாண்டகம்' என்ற பெயர் பெறுகின்றது. அரசரும் பிள்ளையாரும் இருவேறு திருமடங்களில்

---

இருந்தது. சித்திரைப் பெருவிழாவில் 6-ஆம் நாள் காத்யாயனி திருமண உற்சவம் மிகவும் சிறப்புடையது.

9. பெ. பு: திருநாவுக். 250, 251
10. ஷை. ஷை - 252

தங்கியிருந்து வீழிமிழலைப் பெருமானைக் காலந்தோறும் போற்றி வருகின்றனர்.

**படிக்காசு பெறுதல் :** அக்காலத்தில் மழையின்மையாலும் வற்றாத காவிரியிலும் நீர் வற்றிப் போனமையாலும் பஞ்சம் ஏற்பட்டு விடுகின்றது. மக்கள் பசியால் வாடுகின்றனர். இந்நிலையில் திருவீழிமிழலைப் பெருமான் ஞானப் பிள்ளையாருக்கும் நாவுக்கரசருக்கும் கனவில் தோன்றி, "நீங்கள் கால வேறுபாட்டினால் வருத்தம் அடைய மாட்டீர்கள். எனினும், உங்களைச் சார்ந்து வழிபடும் இயல்புடைய தொண்டர்களுக்கு உணவளிக்கும் பொருட்டு நாம் உங்களுக்குப் படிக்காசு தருகின்றோம்" என்று கூறி விண்விழி விமானத்தின் மேற்குப் பீடத்திலும் கிழக்குப் பீடத்திலும் அவ்விருவர்கட்கும் நாடோறும் படிக்காசு வைத்தருள்கின்றார். அப்பெருமக்கள் இருவரும் வீழிமிழலைப் பெருமான் அளித்த படிக்காசினைக் கொண்டு உணவுப் பொருள்கள் வாங்கித் திருவமுது சமைப்பித்துச் "சிவனடியார்களெல்லாம் எய்தி உண்க" என இருபொழுதும் (காலை - மாலை) பறைசாற்றி அடியார்களை அமுது செய்வித்துப் பசித்துன்பத்தைப் போக்கியருள்கின்றனர்.[11]

திருநாவுக்கரசர் சிவபெருமானுக்குக் கைத்தொண்டு புரியும் அடியவராதலால் அவர் பெறும் காசு வட்டமின்றி வணிகர்களால் ஏற்றுக் கொள்ளப்பெறுகின்றது. அதனால் அவருடைய திருமடத்தில் நாள்தோறும் உரிய காலத்தில் அடியார்கள் திருவமுது செய்கின்றனர். திருஞான சம்பந்தர் உமையம்மையின் முலைப்பால் உண்டு திருமகனார் ஆதலினால் அவர் பெறும் காசு வணிகர்கள்பால் வட்டம் கொடுத்து மாற்றும் நிலை ஏற்படுகின்றது. இதனால் உணவுப் பொருள்கள் வாங்கக் காலதாமதம் ஏற்படுகின்றது; காலந்தாழ்த்து அடியார்கள் அமுது செய்ய வேண்டிய நிலையும் ஏற்படுகின்றது. இதனையுணர்ந்த

11. பெ. பு. திருநாவுக். 257-258.

காழிப்பிள்ளையார் வீழிமிழலைப் பெருமானை இறைஞ்சி "வாசிதீரவே காசு நல்குவீர்" (சம்பந்தர் 1.92) என வேண்டி வாசியில்லாக் காசு பெற்று உரிய காலத்தில் அடியார்களை உண்பிக்கின்றார். பின்னர் எங்கும் மழை பெய்து உணவுப் பொருள்கள் பெருகவே பஞ்சமும் நீங்கி விடுகின்றது.

**நாவுக்கரசரின் செந்தமிழ் மாலைகள் :** திருவீழி மிழலையில் இருவரும் தங்கியிருந்தபொழுது அப்பர் பெருமான் பல செந்தமிழ் மாலைகளால் வீழிமிழலையானைப் போற்றிப் பரவுகின்றார். "பூதத்தின் படையார்" (4.64) என்று தொடங்கும் திருநேரிசைப் பதிகத்தில்,

நீற்றினை நிறையப் பூசி
நித்தல்ஆ யிரம்பூக் கொண்டு
ஏற்றுழி யொருநா ளொன்று
குறையக்கண் நிறைய விட்ட
ஆற்றலுக் காழி நல்கி
அவன் கொணர்ந் திழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழி
மிழலையுள் விகிர்த னாரே. (8)

என்பது எட்டாவது பாடல்: "வான் சொட்டச் சொட்ட" (4,95) என்று தொடங்கும் திருவிருத்தச் செந்தமிழ் மாலையில்,

தீத்தொழி லான்தலை தீயிலிட்டுச்
செய்தவேள்வி செற்றீர
பேய்த்தொழி லாட்டியைப் பெற்றுடையீர்
பிடித்துத் திரியும்
வேய்த்தொழி லாளர் மிழலையுள்ளீர்
விக்கிஅஞ் செழுத்தும்
ஓத்தொழிந் தும்மை மறக்கினும்
என்னைக் குறிக்கொண்மினே. (4)

என்பது நான்காவது வாடா நறுமலர்.

"என்பொனே" (5.13) என்னும் குறுந்தொகைப் பதி கத்தில்,

பழகி நின்னடி சூடிய பாலனைக்
கழகின் மேல்வைத்த காலனைச் சாடிய
அழக னே! அணி வீழி மிழலையுள்
குழக னேஅடி யேனைக் குறிக்கொளே. (8)

என்பது எட்டாவது பாடல். "கயிலாயமலை" (6.51) என்று தொடங்கும் திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையில்,

மறைக்காட்டார் வலிவலத்தார் வாய்மூர் மேயார்
வாழ்கொளிபுத் தூரார் மாகா ளத்தார்
கறைக்காட்டுக் கண்டனார் காபாலியார்
கற்குடியார் விற்கொடியார் கானப் பேரார்
மறைக்காட்டுங் குழிவிழிகண் பல்பேய் சூழ
பழையனூர் ஆலங்காட் டடிகள் பண்டோர்
மிறைக்காட்டுங் கொடுங்காலன் வீடப் பாய்ந்தார்
வீழி மிழலையே மேவி னாரே (7)

என்பது ஏழாவது நறுமலர். இதற்கு அடுத்த பதிகமான "கண்ணவன் காண்" (6.52) என்று தொடங்குவதும் இத் தலத்தைப்பற்றியதே. இதில்,

மெய்த்தவன்காண்; மெய்த்தவத்தில் நிற்பார்க் கெல்லாம்
விருப்பிலா இருப்புமன வினையர்க் கென்றும்
பொய்த்தவன்காண்; புத்தன் மறவா தோடி
யெறிசல்லி புதுமலர்க ளாக்கி னான்காண்;
உய்த்தவன்காண்; உயர்கதிக்கே உள்கி னாரை
உலக னைத்தும் ஒளித்தளித்திட் டுய்யச் செய்யும்
வித்தகன்காண்; வித்தகர்தாம் விரும்பி யேத்தும்
விண்ணிழிதன் வீழி மிழலை யானே. (8)

என்பது எட்டாம் பாசுரம.

*இதற்கடுத்த* "மானேறுகரமுடைய" (*6.53*) *என்ற* செந் *தமிழ் மாலையும்* இத்தலத்து *எம்பெருமானைப் பற்றியதே யாகும்*. இதில்,

பஞ்சடுத்த மெல்விரலாள் பங்கர் போலும்;
பைந்நாகம் அரைக்கசைத்த பரமர் போலும்;
மஞ்சடுத்த மணிநீல கண்டர் போலும்;
வடகயிலை மலையுடைய மணாளர் போலும்;
செஞ்சடைக்கண் வெண்பிறைகொண் டணிந்தார் போலும்;
திருவீழி மிழிலையமர் சிவனார் போலும்;
அஞ்சடக்கும் அடியவர்கட் கணியார் போலும்;
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. (7)

என்பது ஏழாவது *திருத்தாண்டகம். இங்ஙனம் அப்பர் பெருமான் திருவீழிமிழலையானை திருநேரிசை*, திருவிருத் *தம்*, திருக்குறுந் *தொகை*, *திருத்தாண்டகம்* ஆகிய திருப் *பாடல் வகைகளால் போற்றிப் பரவுகின்றார்.*

*மிழலை மாமணியிடம் பிரியா விடைபெற்றுக்கொள்ளும் பிள்ளையாரும் அரசரும்* திருக்கொண்டீச்சரம்[12] என்னும் *திருத்தலத்திற்கு வருகின்றனர்*, இத்தலத்து *ஈசனை அப்பர் பெருமான் இரண்டு செந்தமிழ் மாலைகளால் வழிபடுகின் றார்*. 'வரைகிலேன்' (*4.67*) *என்ற திருநேரிசை மாலையில்,*

பாலனாய்க் கழிந்த நாளும்
பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும்
மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும்
குறிக்கோ ளிலாது கெட்டேன்
சேலுலாம் பழன வேலித்
திருக்கொண்டீச் சரத்து ளானே. (9)

---

*12.* கொண்டீச்சரம் *: நன்னிலத்திலிருந்து* $1\frac{1}{2}$ *கல் தொலைவிலுள்ளது. பார்வதி தேவியார் பூசித்த தலங் களுள் ஒன்று.*

என்பது ஒன்பதாவது பாடல். இப்பதிகம் முழுவதும் உடல் பற்றிய நினைவுகளே மீதூர்ந்து நிற்கின்றன. இப்போக்கை நோக்கினால் நாவுக்கரசரின் மிக முதுமையில் இஃது பாடியருளியிருக்க வேண்டும் என்பது தெரிய வரும். பாடல்கள் யாவும் பன்முறை படித்து அநுபவிக்கத் தக்கவை.

'கண்டபேச்சினிற்' (5-70) என்ற திருக்குறுந் தொகைப் பதிகத்தில்,

வெம்பு நோயும் இடரும் வெறுமையும்
துன்ப முந்துய ரும்மெனும் சூழ்வினை
கொம்ப னார்பயில் கொண்டீச் சுரவனை
எம்பி ரானென வல்லவர்க் கில்லையே. (6)

என்பது ஆறாவது பாடல். இப்பதிகத்தின் வரலாறு பற்றிய குறிப்பு கிடைத்திலது. புகலூரில் 'பொய்ப்பாசம்' போக்குவதற்குமுன், நாவுக்கரசர், புகலூருக்கு அருகேயுள்ள இத் தலத்திற்குப் போந்து வழிபட்டிருக்கலாம் எனக் கருத இடம் உண்டு.

கொண்டீச்சரத்து எம்பெருமானிடம் பிரியா விடை பெற்றுக்கொண்டு ஆளுடைய பிள்ளையாரும் ஆளுடைய அரசரும் திருவாஞ்சியம்[13] என்னும் தலத்திற்கு வருகின்றனர். தலத்திறைவனை வழிபடுகின்றனர் (இப்போது பதிகம் பாடவில்லை). திருவாஞ்சியத்திலிருந்து திருத்தலையாலங்காடு[14] என்னும் திருத்தலத்திற்கு வருகின்றனர். 'தொண்டர்க்குத் தூநெறியாய் (6.79) என்ற முதற் குறிப்புடைய திருத்தாண்டகச் செந்தமிழ் மாலை பாடித் தலத்துப் பெருமானைச் சேவிக்கின்றார். இதில்,

---

13. வாஞ்சியம். முன்னரே காட்டப்பெற்றது. பக். 130 காண்க.

14. தலையாலங்காடு : நாகூர்—தஞ்சை இருப்பூர்திப் பாதையில் கொரடாச்சேரி என்ற நிலையத்திலிருந்து 6 கல் தொலைவு.

கங்கையெனும் கடும்புனலைக் கரந்தான் தன்னைக்
காமருபூ பொழிற்கச்சிக் கம்பன் தன்னை
அங்கையினில் மான்மறியொன் றேந்தி னானை
ஐயாறு மேயானை ஆரூ ரானைப்
பங்கமிலா அடியார்க்குப் பரிந்தான் தன்னைப்
பரிதிநிய மத்தானைப் பாகூ ரானைச்
சங்கரனைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. (5)

என்பது தமிழ் மணங் கமழும் ஐந்தாவது வாடா நறுமலர். நறுமலர்கள் அனைத்தும் பாடி அநுபவிக்கத் தக்கவை.

தலையாலங்காடனிடம் விடைபெற்றுக்கொண்டு திருப் பேரெயில்[15] வருகின்றனர். மறையும் ஓதுவர் (5.16) என்னும் திருக்குறுந்தொகைப் பதிகத்தால் தலத்துப் பெருமானை வழிபடுகின்றார் அப்பர் பெருமான்.

முன்னை யார்மயி லூர்தி முருகவேள்
தன்னை யாரெனில் தானோர் தலைமகன்
என்னை யாளும்இ றையவ னெம்பிரான்
பின்னை யாரவர் பேரெயி லாளரே. (7)

என்பது ஏழாவது திருக்குறுந்தொகை.

திருப்பேரெயில் ஈசனிடம் விடைபெற்றுக்கொண்டு இரு பெருமக்களும் திருமறைக்காட்டை[16] அடைகின்றனர்.

---

15, பேரெயில் (திருப்பேரெயில்) : ஓகைப் பேரையூர் என்பது மக்கள் வழங்கும் பெயர். தஞ்சை - நாகூர் இருப் பூர்திப் பாதையில் திருவாரூரையொட்டியுள்ள குழிக் கரை என்னும் நிலையத்திலிருந்து 3 கல் தொலைவு. காவிரியின் தென் கரைத்தலம்.

16. மறைக்காடு(வேதாரண்யம்): திருத்துறைப்பூண்டி - கோடிக்கரை இருப்பூர்தி வழியிலுள்ள வேதாரண்யம் என்ற நிலையத்திலிருந்து $\frac{1}{2}$ கல் தொலைவு. வேதங்கள் பூசித்து மூடிவிட்டுச் சென்றிருந்த கதவுகளைப் பதிகம் பாடி

திருக்கோயிலை வலம் வந்து பண்டை நாளில் வேதங்கள் இறைவனை வழிபட்டு அடைத்த திருக்கதவு அமைந்த திருவாயிலுக்கு வருகின்றனர். முன்னாளில் மறைகளால் அடைக்கப்பெற்ற திருக்கதவு மறைகளில் வல்ல அன்ப ரொருவரும் வாராமையால் நெடுநாள் திறக்கப்பெறா திருந்தது. அதனால் அவ்வூர்ப் பெருமக்கள் வேறொரு வாயில் அமைத்து வேதவனப் பெருமானை வழிபட்டு வருவாராயினர். இச்செய்தியை அறிந்த காழிப் பிள்ளை யார் நாவுக்கரசரை நோக்கி "அப்பரே, நாம் எப்படியும் நேர்முகமாகவுள்ள இத்திருவாயிலின் வழியே சென்று மறைக் காட்டிறைவரை வழிபட வேண்டும். ஆதலால் இத் திருக்கதவு திறக்கும்படி பதிகம் பாடுவீராக" என்று வேண்ட, அன்புப் பிள்ளையாரின் விருப்பத்திற்கிசைந்து வாகீசப் பெருமானும் "பண்ணினேர் மொழியாளுமை" (5.10) என்ற திருக்குறுந்தொகைத் திருப்பதிகத்தைப் பாடிப் பரவுகின்றார்.

**பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ**
**பண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ**
**கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்**
**திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. (1)**

என்ற முதற்பாடலைப் பாடினவுடன் செந்தமிழ்ப் பாடல் களின் சுவை நலன்களைத் துய்க்க விரும்பிய மறைக்காட் டீசர், திருக்கதவின் திருக்காப்பு நீக்கக் காலந் தாழ்த்துகின்

---

அப்பர் திறக்கவும் சம்பந்தர் மூடவும் செய்த அற்புதத் தலம். தமிழ் மொழியிலுள்ள தேவாரம் வடமொழி வேதத் திற்குத் தாழ்ந்ததல்ல என்பதைக் கட்புலனாக உலகுக்கு அறிவித்தது இவ்வற்புதம். பாண்டி நாட்டிற்கெழுந்தருளும் படி சம்பந்தருக்கு அழைப்பு வந்தது. அவர் இத்தலத்தி லிருந்தபோது கோயிலில் உள்ள விளக்கு ஒன்றைத் தனது மூக்கினால் தூண்டிய எலி, அப் புண்ணியத்தின் பயனாக மறு பிறவியில் மாவலிச் சக்கரவர்த்தியான வரலாற்றைப் பாசுரம் (4.49:8) கூறும். மேலைக்கோபுர வாயிலின் எதிரி லுள்ள விநாயகர் சந்நிதி புகழ் வாய்ந்தது.

றார். திருநாவுக்கரசரும் பதிகம் முழுதும் பாடி முடிக்கும் நிலையில் தம் வேண்டுகோட்கிணங்கி இறைவன் திருக்கதவு திறந்தருளாமை கண்டு வருத்தமுறுகின்றார். இந்நிலையில் "இராவணனை விரலால் அடர்த்திட்ட நீவிர் ஒரு சிறிதும் இரக்க முடையவர் அல்லீர்" என இறைவனை நோக்கிப் பிணங்கிப் பேசும் முறையில்,

**அரக்க னைவிர லால்அடர்த் திட்டநீர்**
**இரக்க மொன்றி லீர்எம் பெருமானிரே**
**சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ**
**சரக்க இக்கத வந்திறப் பிம்மினே. (11)**

என்ற இறுதிப் பாடல் அமைகின்றது. இந்நிலையில் பன்னெடு நாட்களாக அடைக்கப்பெற்றிருந்த திருக்கதவு இறைவனருளால் திறக்கப்பெறுகின்றது.

அப்பொழுது பிள்ளையாரும் அரசரும் நிலமிசை வீழ்ந்திறைஞ்சி நேர்முக வாயில்வழியே திருக்கோயிலுட் புகுந்து மறைக்காட்டீசரை வணங்கி வண்தமிழ் மாலைகள் பாடிப் போற்றுகின்றனர். அப்பொழுது நாவுக்கரசர் காழிப் பிள்ளையாரை நோக்கி, "இறைவன் திருவருளால் இத்திருக்கதவு நாடோறும் திறக்கவும் அடைக்கவும் பெறும் நிலையில் இந்நிறைக் கதவம் அடைத்திடும்படி பாடியருளுக" என வேண்ட, பிள்ளையாரும் "சதுரம் மறை" (சம்பந்தர் 2.37) என்பதை முதற்குறிப்பாகக் கொண்ட திருப்பதிகத்திதைத் தொடங்கி முதற்பாடலைப் பாடியவுடன் இறையருளால் திருக்கதவம் விரைவில் அடைக்கப் பெறுகின்றது. அதுகண்டு இருவரும் பெருமகிழ்ச்சி அடைந்து மறைக்காட்டீசரைப் போற்றுகின்றனர். பிள்ளையார் தாம் எடுத்த திருப்பதிகத்தின் ஏனைய திருப்பாடல்களையும் பாடித் திருக்கடைக்காப்புச் சாத்தியருளுகின்றார். அன்று முதல் அத்திருக்கதவு திறத்தலும் சாத்துதலுமான வழக்கத்தைப் பெறுகின்றது.

*இந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்டு அடியார் கூட்டம் அடைந்த நிலையைச் சேக்கிழார் பெருமான்,*

அங்கு நிகழ்ந்த அச்செயல்கண்
டடியார் எல்லாம் அதிசயித்துப்
பொங்கு புளகம் எய்திடமெய்
பொழியும் கண்ணீர் பரந்திழிய
எங்கும் நிகரொன் றில்லாத
இருவர் பாதம் இறைஞ்சினார்
நங்கள் புகலிப் பெருந்தகையும்
அரசும் மடத்தில் நண்ணியபின். [17]

*என்று போற்றி மகிழ்வர். இவ்வாறு வேதங்களால் வழி படப்பெற்று அடைக்கப்பெற்ற திருக்கதவு அவ்வேதங்களில் வல்ல எவரும் வாராமையினால் நெடுங்காலம் திறக்கப் பெறாதிருந்து பின்பு நாவுக்கரசரின் திருவாய் மொழியால் திறக்கப்பெற்றதாகிய இந்த அற்புத நிகழ்ச்சி, பண்டை நான்மறைகட்கும் திருநாவுக்கரசர் அருளிய தேவாரத் திரு முறைகட்கும் சிறிதும் வேற்றுமை இல்லை என்பதனைத் தெளிவாக வலியுறுத்தலைக் காண்கின்றோம். திருநாவுக் கரசரின் செந்தமிழ் மறைகளாகிய திருமுறைகளின் பெருமையினை,*

மணியினை மாமறைக் காட்டு
மருந்தினை வன்மொழியால்
திணியன நீள்கதவம் திறப்பித்
தனதெண் கடலிற்
பிணியன கன்மிதப் பித்தன
சைவப் பெருநெறிக்கே
அணியன நாவுக் கரையர்
பிரான்றன் அருந்தமிழே. [18]

---

*17. பெ. பு. திருநாவுக். 274.*
*18. திருத்தொண்டர் திருவந்தாதி-25*

என்று நம்பியாண்டார் நம்பியும் விரித்துரைத்துப் போற்றுவர்.

திருமறைக் காடரின் திருவருள் பெற்ற இரு பெருமக்களும் திருமறைக் காட்டிலுள்ள ஒரு திருமடத்தில் அடியார்களுடன் வந்து அமர்கின்றனர். தாம் அரிதில் திறக்கப்பாடிய தன்மையும், காழிப் பிள்ளையார் விரைவில் அடைக்கப் பாடிய எளிமையும் நாவுக்கரசரைச் சிந்திக்க வைக்கின்றன. "திருக்கதவு திறக்கத் தாழ்ந்ததன் காரணம் இறைவனது திருக்குறிப்பினை யான் உணராது அயர்ந்தமையே" எனக் கவலையுற்ற மனத்தினராய் அத்திரு மடத்தின் ஒருபால் துயில் கொள்ளுகின்றார் 'வாய்மை திறம்பா வாகீசர்'.

வாய்மூரடிகளின் காட்சி : திருமறைக் காட்டு மாமணியின் பாதங்களை மனத்திடையே வைத்து எண்ணித் துயிலுகையில் அம்மையப்பர், பொன்மேனியில் வெண்ணீறு பூசிய சைவ வேடத்தினராய் அவர் கனவில் தோன்றுகின்றார். தோன்றியவர், "அன்பனே, வாய்மூரில் இருப்போம்; எம்மைத் தொடர்ந்து வருக" என்று கூறி முன்னே செல்லுகின்றார். இந்நிலையில் மெய்யுணர்வு பெற்று விழித்தெழுகின்றார் நாவுக்கரசர். "யான் இருந்த இடத்தில் என்னைத் தேடிக் கொண்டு வந்து தம்மைத் திருவாய்மூர்த்[19] தலைவரென் ? அடையாளங்களுடன் சொல்லி 'அங்கேவா' என்று கூறிப் போயினர். அஃதென்கொல்?" என ஐயமுற்று,

எங்கே என்னை இருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாளம் அருளினார்
தெங்கே தோன்றும் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனார தென்கொலோ (5.50:1)

19. வாய்மூர் (திருவாய்மூர்) : மயிலாடுதுறை காரைக் குடி வழியில் திருநெல்லிக் காவல் என்ற நிலையத்திலிருந்து 8 கல் தொலைவு. அப்பருக்கு வருமாறு இறைவன் கட்டளையிட, அவர் சென்று தரிசித்ததை 5.50: 1; 5.50: 2 என்ற பாசுரங்கள் பகரும்.

மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி உன்னி உறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி
என்னை வாவென்று போனார தென்கொலோ. (5.50:2)

என்ற குறுந்தொகைப் பதிகம் பாடிக்கொண்டு, ''ஈது எம் பெருமான் அருளாகில் யானும் ஏகுவேன்'' என எழுந்து செல்லத் தொடங்குகின்றார். இறைவனும் அப்பரடிகட்குக் கனவில் தோன்றிய திருக்கோலத்துடன் விரைந்து நடந் தருள்கின்றார். இங்ஙனம் நெடும் பொழுது விரைந்து நடந் தும் தமக்குமுன் செல்லும் வாய்மூர் அடிகளை அணுக முடியவில்லை. இந்நிலையில் இறைவன் அணிமையில் காட்சி நல்குபவர் போலப் பொன் மயமான திருக்கோயிலை எதிரே காட்டி அதனுள்ளே புகுந்து மறைந்தருள்கின்றார்: நாவுக்கரசருக்கு இம் மறைவு மனக்கலக்கத்தை உண் டாக்குகின்றது.

இந்நிலையில் ஆளுடைய பிள்ளையார் அடியார்கள் மூலம் நாவுக்கரசர் திருவாய்மூருக்குச் செல்வதைக் கேள்வி யுற்று அவரைப் பின் தொடர்கின்றார்; தம்பால் வைத்த பேரன்பினால் தம்மைத் தேடிவருகின்ற சம்பந்தப் பிள்ளை யாரைச் சேய்மையில் காண்கின்றார் நாவுக்கரசர். பிள்ளை யார் தம்மை அணுகிய நிலையில், ''இறைவனின் திருக் குறிப்பறியாது திருக்கதவம் திறக்கப்பாடிய என்னைக் காட்டிலும், செந்தமிழ்ப் பதிகத்தால் அடைப்பித்த ஞான சம்பந்தப் பிள்ளையார் இதோ வந்து நிற்கின்றார். எளி யேற்கே அல்லாது இப்பெருமானுக்கும் தம்மை மறைக்கும் வன்மையுடையரோ வாய்மூரடிகள்?'' என வினவும் குறிப் புடன்,

திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தா ருந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே. (5.50:8)

என்ற திருப்பாடலைப் பாடுகின்றார். வாய்மூர் இறைவனும் பிள்ளையார் காண நேரே தோன்றி ஆடல் காட்டி அருள் புரிகின்றார். அந்த அழகிய தெய்வக் காட்சியைக் கண்ட காழிப்பிள்ளையார் "தளரிளவளரென வுமைபாட" (சம்பந்தர் 2.111) என்ற திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றித் தாம் கண்ட தெய்வக் காட்சியினைத் தம் கெழுதகை நண்பர் ஆளுடைய அடிகட்கும் காட்டி மகிழ்கின்றார்.

இந்நிகழ்ச்சியைச் சேக்கிழார் பெருமான்,

> மாட நீடு திருப்புகலி
> மன்னர் அவர்க்கு மாலயனும்
> நேடி இன்னங் காணாதார்
> நேரே காட்சி கொடுத்தருள
> ஆடல் கண்டு பணிந்தேத்தி
> அரசுங் காணக் காட்டுதலும்
> 'பாட அடியார்' என்றெடுத்துப்
> பரமர் தம்மைப் பாடினார்.[20]

என்று கூறுவர். "இப்பாடலில் 'அரசுரங் காணக் காட்டுதலும்' என்ற தொடரில் 'காட்டுதல்' என்கின்ற வினை இறைவனுக்குரியது. 'காணுதல்' இருவர்க்கும் பொதுவான தொழில். ஈண்டு இதுபோலப் பொருள் கொள்ளாமல் ஞானசம்பந்தர்க்கு நேரே காட்சி கொடுத்ததாகவும், பின்பு அவர் அப்பருக்குக் காட்டியதாகவும் பொருள் கொள்ளுதல் சேக்கிழாரைச் சரியாகப் புரிந்து கொள்ளாததாக முடிந்து விடும்."[21]

---

20. பெ.பு: திருநாவுக்-281

21. அப்பர் பெருமான் - வாழ்வும் வாக்கும். பக்-442. (பூம்புகார்ப் பேரவைக் கல்லூரி வெளியீடு-மேலையூர்-609 107 (மே-1980)

மேலும் இதே பதிகத்தில் (5.50) அப்பர் பெருமான்,

எங்கே என்னை இருந்திடத் தேடிக்கொண்டு
அங்கே வந்துஅடை யாளம் அருளினார் (1)

தஞ்சே கண்டேன், தரிக்கிலாது ஆரென்றேன்! (3)

கழியக் கண்டிலேன்; கண்ணெதிரே கண்டேன் (4)

என்றெல்லாம் பாடியவை இக் கருத்தினை (அதாவது இறைவன் அப்பருக்கு நேரே காட்சி நல்கியதை) வலியுறுத்துகின்றன. மேலும் சேக்கிழார் பெருமான் இந்நிகழ்ச்சியினைத் திருஞான சம்பந்தர் புராணத்தில்

அந்நிலை அணைந்த போதில்
அம்பிகை உடனே கூட
மன்னிய ஆடல் காட்டத்
'தளரிள வளரும்' பாடிச்
சென்னியால் வணங்கி வாய்மூர்
அரசொடும் சென்று புக்கங்கு
இன்னியில் புறமுன் கூடி
இருவரும் போற்றி செய்தார்.[22]

என்றே பாடுதலில் 'ஆடல் காட்ட' என்று திருக்கோலம் காட்டிய செயலை இறைவன் செயலாகவே கொண்டிருப்பது மேலும் இக்கருத்திற்கு அரணாக அமைகின்றது.

வாய்மூர் அடிகள் தமக்கும் நேரே காட்டிய ஆடலைக் கண்டு மகிழும் அப்பர் பெருமான் "பாட அடியார்" (6.77) என்ற திருத்தாண்டகப் பதிகத்தில் தம் மகிழ்ச்சியைப் புலப்படுத்துகின்றார்.

22. பெ. பு: ஞான சம்பந்தர்-596

பாட அடியார் பரவக் கண்டேன்;
பத்தர் கணங்கண்டேன்; மொய்த்த பூதம்
ஆடல் முழவம் அதிரக் கண்டேன்;
அங்கை அனல்கண்டேன்; கங்கை யாளைக்
கோட லரவார் சடையிற் கண்டேன்;
கொக்கி னிதழ்கண்டேன்; கொன்றை கண்டேன்;
வாடல் தலையொன்று கையில் கண்டேன்;
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. (1)

என்பது முதற் பாடல். இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும், 'வாய்மூ ரடிகளை நான் கண்டவாறே' என்று தாம் கண்ட தெய்வக் காட்சியை வியந்துரைத்துப் போற்றி மகிழ்தலை நாமும் கண்டு மகிழலாம். இங்கு 'நான் கண்டவாறே' என்பதில் 'பொய்யடையாத' அப்பரின் உள்ளம் புலப்படுகின்றது. திருஞான சம்பந்தர் காட்டவே தாம் கண்டிருப்பாரானால் 'காட்டக் கண்டேன்' என்பது போலவே பாடியிருப்பார் என்பது ஈண்டு மேலும் சிந்திக்கத் தக்கது.

நாவுக்கரசருக்கும் ஞானப் பிள்ளையாருக்கும் ஆடல் காட்டி அருள் புரிந்த வாய்மூரிறைவன் அவ்விரு பெரு மக்களும் பாடிப் போற்றிய செந்தமிழ்ப் பாமாலைகளை அன்புடன் ஏற்று மறைந்தருள்கின்றார். நாயன்மார்கள் இருவரும் திருவாய்மூர் அடைந்து அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவனை இறைஞ்சிப்போற்றி அங்குச் சில நாட்கள் தங்கியிருக்கின்றனர்.

இருவர் நட்பின் பெருமை : ''எங்கே என்னை'' (5.50) என்ற திருக்குறுந்தொகைப் பதிகத்தினால் இந்த இருபெரு மக்களின் நட்பின் பெருமையை உணர முடிகின்றது. இதைப் பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் மிக நன்கு விளக்குவர்.[23] திருநாவுக்கரசர் மறைக்காட்டுத் திருக்

23. பன்னிரு திருமுறை வரலாறு - முதற்பகுதி பக்-183

கோயிற் கதவினைத் தாம் அரிதில் திறக்கப் பாடியதும், ஞானசம்பந்தர் விரைவில் அடைக்கப் பாடியதும் ஆகிய அருமை எளிமை இவற்றைநோக்கி "இறைவன் திருவுள்ளம் அறியாது அயர்ந்தேன்" என்று அஞ்சிக் கவலை கொண்டு திருமடத்தின் ஒருபால் உறங்கும்பொழுது இறைவன் அவரது கனவில் தோன்றித் தன்னை வாய்மூர்த் தலைவன் எனக் கூறி வாய்மூர்க்கு அழைத்துச் சென்றனர் என்பதும்,

மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி உன்னி உறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி
என்னை வாவென்று போனார் அதென்கொலோ? (2)

என்று அப்பொழுது அப்பர் பெருமான் பாடிய திருப்பாடலால் இனிது புலனாகும். இவ்வாறு கனவிடைத் தோன்றிய இறைவனைக் கண்டு "நீர் யார்?" என வினவ, அவர் "நீ கொண்ட அச்சத்தைத் தவிர்வாயாக; உன்னை அழைக்க வந்தேன்" என்று மறுமொழி பகர்ந்தனர் என்பது,

தஞ்சே கண்டேன் தரிக்கிலாது ஆரென்றேன்
அஞ்சேல் உன்னை அழைக்க வந்தேன் (3)

என்ற தொடரால் அடிகள் குறிப்பிட்டுள்ளார். தம்மை அழைத்துச் செல்லும் வாய்மூர்ப் பெருமானை மிகவும் அருகில் தம் கண்ணெதிரே காணப்பெற்றும் தாம் அவரைப் பின் தொடர்ந்து சென்றபொழுது அவர் இடைவழியில் மறைந்தருளத் தாம் அவரைக் காணாது கலக்கமுற்ற நிலையை,

கழியக் கண்டிலேன் கண்ணெதிரே கண்டேன்
ஒழியப் போந்திலேன் ஒக்கவே ஓட்டந்தேன்
வழியிற் கண்டிலேன் வாய்மூ ரடிகள்தம்
சுழியிற் பட்டுச் சுழல்கின்ற தென்கொலோ? (4)

என்ற பாடலால் புலப்படுத்துவதைக் கண்டு மகிழலாம். இங்ஙனம் நட்டாற்றில் கைவிட்டதுபோல் நடுவழியில் இறைவன் மறைந்தமை கண்டு மனம் கலங்கிய நாவுக்கரசர் "இறைவன் நம்முன் தோன்றி 'வாய்மூருக்கு வா' என அழைத்து வந்ததும் பொய்யோ?" என்று ஐயுற்றனர் என்பது,

மாதே வாகிய வாய்மூர் மருவினார்
போதே யென்று புகுந்ததும் பொய் கொலோ? (6)

எனவரும் அவரது பாடற் பகுதியால் புலனாகும்.

வாய்மூர் அடிகளைக் காணாது வழியிடையே வருந்திய வாகீசர் பெருமான் தம்முடைய அரும்பெறல் நண்பர் காழிப் பிள்ளையார் தம்மை அன்புகொண்டு தேடி வருதலைச் செய்மையிற் கண்டு "வீழி மிழலை இறைவனைப் பாடி வாசி தீரக் காசு பெற்ற அப் பெருந்தகையார் என்பால் வைத்துள்ள பேரன்பினால் இப்பொழுது என்னைத் தேடி வருதல் போன்று வாய்மூர் இறைவனும் என்மீது வைத்துள்ள பெருங் கருணையால் என்னைத் தேடிவந்து 'திருவாய்மூருக்கு வருவாயாக' என்று சொல்லி வழியில் ஒளித்ததும் முறையாமோ?" என்று ஆளுடைய பிள்ளையாரது பேரன்பின் திறத்தையும் வாய்மூரடிகளின் அருட் செயலையும் நினைந்துருகினர் என்பது,

பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப்பார் அவரைப்போல்
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயெனா
ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ? (7)

என்று அவர் பாடியருளிய திருப்பாடலால் இனிது புலனாகும். இதில் காழிப்பிள்ளையார் தம்மைத் தேடி வந்த அன்பின் செயலைத் தம்மைத்திருமறைக் காட்டில் அழைக்க வந்த வாய்மூரடிகளின் அருட் செயலுக்கு நாவுக்கரசர்

உவமையாக எடுத்துக் காட்டிய அன்பின் திறம் நினைந்து மகிழ்ந்து போற்றத் தக்கதாகும். "இறைவனை மனத்தின் கண் எண்ணி யான் உறங்கிய நிலையில் அவர் என்னைத் தேடி வந்ததைக் காட்டிலும் யான் ஞானப் பிள்ளையாரை நினையாது வந்த இந்நிலையிலே அன்புடைய நண்பராகிய அவர் என்னைத் தேடி வருகின்ற இச் செயலே பெரிதும் மதிக்கத் தக்கது'' என்று கூறுவார், வாய்மூரிறைவன் தம்மைத் தேடிவந்த முன்நிகழ்ச்சிக்குக் காழிப் பிள்ளையார் தம்மைத் தேடி வருதலாகிய பின் நிகழ்ச்சியை உவமை யாகக் கூறிப் போற்றுகின்றார். எத்தகைய பெரியோர்க்கும் இறைவனின் திருக்குறிப்பு எளிதில் உணரத்தக்க தன்று எனத் தம் நெஞ்சிற்கு அறிவுறுத்தும் பாங்கில், ஞானசம்பந் தர்க்கு வீழிமிழலைப் பெருமான் வட்டங் கொடுத்து மாற்ற வேண்டிய பழங் காசினை முதலில் தந்து, பின் அவர் "வாசிதீரவே காசு நல்குவீர்'' என வேண்டிப் பாட வட்டந் தீர்த்தருளிய நிகழ்ச்சியை எடுத்துரைக்கின்றார். காழிப்பிள்ளையார் நாவுக்கரசர்பாற் கொண்ட நட்பின் பெருமையும் அப்பர் ஞானப் பிள்ளையார்பால் வைத்த பேரார்வமும் மேற்காட்டிய திருக்குறுந்தொகையால் நன்கு புலனாதல் கண்டு மகிழலாம்.

இங்ஙனம் சிவபெருமான் நாவுக்கரசரை 'திருவாய் மூருக்கு வருக' என அழைத்து வந்து இடைவழியில் மறைந்து பின் ஞான சம்பந்தர் நாவுக்கரசர் ஆகிய இரு வருக்கும் ஆடல் காட்டி அருள் புரிதற்குக் காரணம் என்ன? நாவுக்கரசர் மனக் கவலையுடன் திருமடத்தின் ஒருபால் அஞ்சித் துயில் கொண்டமையே. தாம் பத்துப் பாடல்கள் பாங்குறப் பாடுமளவும் மறைக்கதவம் திறக்கத் தாழ்த்த அருமையையும், காழிப் பிள்ளையார் முதற் பாடலைப் பாடிய அளவில் மறைக்கதவம் அடைக்கப் பெற்ற எளிமை யையும் எண்ணி, "இறைவனது திருக்குறிப்பறியாது நாம் மறைக்கதவம் திறக்கப் பாடியது தவறு'' என அப்பர் பெருமான் கருதினமையே அவர் கொண்ட மனக் கவலைக்

குரிய காரணமாகும். நாவுக்கரசர் வேண்டிய வண்ணம் மறைக்காட்டுப் பெருமான் விரைவில் திருக்கதவம் திறக்கத் தாழ்த்தமைக்குரிய உண்மையான காரணம் என்ன? அப் பரடிகள் பாடிய செந்தமிழ்ப் பாடல்களின் சுவை நலங் களைத் தாம் துய்த்து மகிழ வேண்டும் என்னும் பெரு வேட்கையேயாகும். இது,

'பண்ணி னேரு மொழியாளென்
றெடுத்துப் பாடப் பயன்துய்யான்
தெண்ணீ ரணிந்தார் திருக்காப்பு
நீக்கத் தாழ்க்க[24]

என வரும் சேக்கிழார் பெருமானின் திருவாக்காலும் நன்கு அறியப்படும்.

இனி, நாவுக்கரசர் தாம் முன்னரே உணர்ந்துகொள் ளாத இறைவனது திருக் குறிப்பாக எதனைக் கருதினார்? இதனையும் சிந்தித்து அறிதல் இன்றியமையாதது. ஒருவர் பால் ஒன்றைக் குறித்து வேண்டுவோர் அப்பொருள் நலம் குறித்துத் தம் உள்ளத்தில் நன்றாகச் சிந்தித்த பின்னரே அதுபற்றிய தம் வேண்டுகோளைத் தெளிவாக வெளியிடும் ஆற்றல் பெற்றோராவர். பண்டை நாட்களில் மறைகளால் அடைக்கப்பெற்று நெடுங்காலமாகத் திறக்கப்படாதிருந்த திருக்கதவினைத் திருக்காப்பு நீக்கி நேர்முக வழியேசென்று மறைக்காட்டு இறைவனை வழிபடுதல் வேண்டும் என முதன்முதலாக நினைத்தவர் காழிப்பிள்ளையார். ஆகவே அப்பர் பெருமான், "ஞானப் பிள்ளையார் என்னைக் காட்டிலும் செந்தமிழ் நலம் சிறக்கப் பாடித் திருக்கதவினை அடைப்பித்தருளினார். அவரே திறக்கப் பாடுதற்குரிய உரிமையும் ஆற்றலும் உடையவர். இதனைச் சிறிதும் எண்ணாத எளியேன் அன்பிற்சிறந்த பிள்ளையாரது வேண்டுகோட்கிசைந்து மறைக் கதவினைத் திறக்கப்

24. பெ. பு: திருநாவுக். 268

பாடியது என் மனத்தோடு பொருந்திய உறுதியான வேண்டுகோளாகாது. இங்ஙனம் என் மனத்திற் பதியாத நிலையில் மறைக்காட்டு இறைவனை நோக்கிக் 'கண்ணி னால் உமைக் காணக் கதவினைத் திண்ணமாகத் திறந் தருள் செய்மினே' (5.10:1) எனவும், 'அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீர், இரக்கம் ஒன்றிலீர் எம்பெருமானிரே' (5-10:11) எனவும் வருந்தி வேண்டியது இறைவனது திருக் குறிப்பினை உணராததால் செய்த பிழையாகும், இங்ஙனம் எளியேன் பிழையாக நடந்துகொண்டு தொடுத்த 'வெற் றுரையினையும்' மெய்யான வேண்டுகோளாக ஏற்றுக் கொண்டு இறைவன் மறைக்கதவினைத் திறந்தருளினன்'' என்று தம் நெஞ்சில் கவலையும் அச்சமும் உடையவராக இருக்கின்றார். பின்னர் வாய்மூர் இறைவனின் திருவரு ளால் அவை நீங்கி மகிழ்வுற்றனர். இதனை அவர் வாய் மூர்ப் பெருமானைத் தொடர்ந்து சென்று பாடிய திருக் குறுந்தொகைப் பதிகத்தில்,

திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தார் உங்நின்றார் (5-50:8)

எனவும்,

தனக்கே றாமை தவிர்கென்று வேண்டினும்
நினைத்தேன் பொய்க்கருள் செய்திடு நின்மலன் (5-50:9)

எனவும் தம்மைப்பற்றிக் கூறும் திருப்பாடற் பகுதிகளால் தெள்ளிதிற் புலனாகும்.

காழிப் பிள்ளையாரும் நாவுக்கரசர் பெருமானும் திருவாய்மூர் இறைவனை வணங்கி அவரிடம் விடை பெற்றுக் கொண்டு திருமறைக்காடு திரும்பி அங்கு சில நாட்கள் தங்குகின்றனர். அப்பர் பெருமான் மறைக்காட்டு இறைவன்மீது ஐந்து திருப்பதிகங்கள் பாடிப் போற்று கின்றார். ஒரு பதிகத்தை (5-10) மேலே குறிப்பிட்டு

பாடப் பெற்ற சந்தர்ப்பத்துடன் விளக்கினோம். ஏனைய வற்றை ஈண்டுக் காட்டுவோம். இவை சின்னாட்கள் தங்கி யிருந்தபோது பாடப் பெற்றவையாகும்.

"இந்திரனோடு தேவர்கள்" (4.33) என்ற திருநேரிசைப் பதிகத்தில்,

கால்கொடுத் திருகை ஏற்றிக்
கழிநீரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீரால்
சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத் தாவ மைத்தங்
கேழுசா லேகம் பண்ணி
மால்கொடுத் தாவி வைத்தார்
மாமறைக் காட னாரே. (4)

என்பது நான்காவது திருநேரிசை. இது நாம் 'மெய்' என்று கருதும் 'பொய்யான' உடல் கூற்றினை விளக்குவது; இப் பதிகத்தின் பாடல்கள் அனைத்துமே படிப்போரின் உள் ளத்தை உருக்குபவை. "தேரையும் மேல் கடாவி" (4.34) என்று தொடங்கும் திருநேரிசைப் பதிகமும் மறைக்காட னாரைப் பற்றியதே. இதில்,

அந்தரந் தேர்க டாவி
யாரிவ னென்று சொல்லி
உந்தி னான்மா மலையை
ஊன்ற லும்ஒள் ளரக்கன்
பந்தமாம் தலைகள் பத்தும்
வாய்கள்விட் டலறி வீழச்
சிந்தனை செய்து விட்டார்
திருமறைக் காட னாரே. (4)

என்பது நான்காவது திருநேரிசை. இந்த நேரிசை முழுவதும் கயிலை நினைவோடு பாடியது. 'இராவணனையும்' அவ

னுக்கு அருளிய முறையையும் இதில் காணலாம். பாடல்கள் யாவும் படித்து அநுபவிக்கத் தக்கவை. "ஓதமால் கடல்" (5.9) என்று தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

சங்கு வந்தலைக் குந்தடங் கானல்வாய்
வங்க மார்வலங் கொள்மறைக் காடரோ
கங்கை செஞ்சடை வைப்பதும் அன்றியே
அங்கை யில்அனல் ஏந்தல் அழகிதே. (8)

என்பது எட்டாவது திருக்குறுந்தொகை. "தூண்டு சுட ரனைய"(6.23) என்று தொடங்கும் திருத்தாண்டகச் செந் தமிழ் மாலையில்,

மூல நோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்;
முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்;
ஆலின்கீழ் நால்வர்க் கறத்தான் கண்டாய்;
ஆதியும் அந்தமும் ஆனான் கண்டாய்;
பால விருத்தனும் ஆனான் கண்டாய்;
பவளத் தடவரையே போல்வான் கண்டாய்;
மாலைசேர் கொன்றை மலிந்தான் கண்டாய்;
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. (9)

என்பது ஒன்பதாவது வாடா நறுமலர்த் தாண்டகம்.

இருபெரு நாயன்மார்களும் சேர்ந்து திருமறைக் காட்டில் இருக்கும்போது தென்னன் தேவியும் வளவர் கோன் பாவையுமான மங்கையர்க்கரசியாராலும் அமைச்சர் குலச்சிறையாராலும் அனுப்பப்பெற்ற தூது வர்கள் காழிப் பிள்ளையாரைக் காண வருகின்றனர். வந்த வர்கள் புகலி வேந்தரை வணங்கி நின்று பாண்டிய நாட் டில் சமணர்கள் சைவர்கட்குச் செய்யும் இடையூறுகள் பொறுக்கத்தக்கன அல்ல என்பதை எடுத்துரைக்கின்றனர். இதனைக் கேட்ட சண்பைத் திருமறையவர் தென்னாட்டில் சமணர்கள் செய்யும் தீமைகளைச் சைவநெறியை நிலை

நிறுத்தத் திருவுள்ளங்கொண்டு திருவருள் வண்ணமாகிய திருநீற்றினை நினைந்து பாண்டி நாட்டிற்குப் புறப்படுகின்றார்; புறப்படுங்கால் நாவுக்கரசர் சமணர்களின் வஞ்சகச் செயல்களை அவரிடம் கூறுகின்றார்: "உடல் கழுவாத அமணர், உள்ளமும் கழுவாதவர்கள்; மாயமும் சாலமும் வல்லவர்கள்; பல்லவ வேந்தன் பக்க பலத்தால் பல தீய தொழில்களை எனக்குப் புரிந்து என்னைப்பலவாறு அலைக்கழித்தனர். அந்தப் பாதகர்முன் தாங்கள் செல்ல நான் இசையேன்" என்கின்றார் வாகீசர் பெருமான்.

"மங்கையர்க்கரசியும் குலச்சிறையாரும் தெய்வத் திருநீற்றின் காதலர்கள்; புண்ணியச் சைவம் புவிதழைக்கப் போற்றுபவர்கள். அவ்விருவரையும் காணக் கருத்துடையேன்; தென்னகத்தில் அமணர்களின் தீயநெறி அவித்துத் 'திருநீறு' வளர்வதற்குச் செயல் புரிவேன். இஃது உம் ஆணை' என்று கூறுகின்றார் காழிப் பிள்ளையார். "அமணர்களின் கொடுமைகளை நானே அழித்து வருகின்றேன். நீர் அங்கு வருதல் வேண்டா. சமணர்களின் மாயங்களைச் சிதைத்துச் சைவநெறி பாரிக்கும் கருத்துடையேன்" என்று மேலும் ஞானப் பிள்ளையார் நாவுக்கரசரிடம் கூற, அவரும் மறுக்க மாட்டாது வாளா இருக்கின்றார். தென்னவன் நாடு நோக்கிச் சண்பை வேந்தரின் பொன்னடிப் புனிதப் பயணம் தொடங்குகின்றது.

நடுநாட்டில் சமணப் பேயை விரட்டி அடித்து அதன கொட்டத்தை அடக்கியவர் அப்பர் பெருமான். அது போன்றதொரு வாய்ப்பு புகலி வேந்தர்க்கும் வேண்டும் என்பது இறைவன் திருவுள்ளம்போலும். தமிழகத்தில் சிவ ஞானக் கன்றின் ஞானப் பயணம் தொடர்வதற்கு இது நல்லதொரு சூழலாக அமைகின்றது. 'ஆணை நமது, ஆணை நமது' என்றெல்லாம் பாடும் சிவக்கன்று இங்கு 'ஆணை உமது' என்று கூறிச் செல்லும்போது அன்பினால்

மறுத்த தந்தையாரிடம் விடைபெற்றுப் போர்க்களம் செல்லும் மைந்தன் போலக் காணப்பெறுகின்றார்.

வேணுபுரத்தார் விடைபெற்றேக நாவுக்கரசர் மறைக் காட்டீசரை வணங்கி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு திருவீழி மிழலை விகிர்தனாரை மீண்டும் சார வேட்கை கொண்டு திருவீழி மிழலைக்கு விரைகின்றார். இதிலிருந்து நாவுக்கரசரின் தனிமையான திருத்தலப் பயணம் தொடங்குகின்றது. இதனை அடுத்துக் காண்போம்.

# 13. தனிமையில் தலவழிபாடு

காழிப் பிள்ளையார் மதுரை மாநகருக்கு ஏகியதையும், நாவுக்கரசர் பெருமான் தலவழிபாட்டை மீண்டும் தொடங்கியதையும் சேக்கிழார் பெருமான்,

வேணு புரக்கோன் எழுந்தருள
விடைகொண் டிருந்த வாகீசர்
பூணு மன்பால் மறைக்காட்டிற்
புனிதர் தம்மைப் போற்றிசைத்துப்
பேணி யிருந்தங் குறையுநாள்
பெயர்வார் வீழி மழலையமர்
தாணு வின்றன் செய்யகழல்
மீண்டுஞ் சார நினைக்கின்றார்.[1]

என்று கூறுவர். திருஞானசம்பந்தரைப் பிரிய மனம் இல்லாத நாவுக்கரசருக்குத் திருவீழி மிழலை, முன் அவர்கள் இருவரும் சேர்ந்து பலகாலம் தங்கியிருந்த நினைவுகளை எழுப்பியதால் அத்தலத்திற்கு ஏக நினைந்தார் எனச் சிவக் கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் குறிப்பிடுவார்.

முதலில் வாகீசர் கோளிலி[2] என்ற தலத்திற்கு வருகின்றார். இத்தலத்து எம்பெருமானை அப்பர் இரண்டு

1. பெ. பு. திருநாவுக் 290

2. கோளிலி (திருக்குவளை): மயிலாடுதுறை-காரைக்குடி இருப்பூர்தி வழியிலுள்ள திருநெல்லிக்காவல்

செந்தமிழ் மாலைகளால் போற்றுகின்றார். 'மைகொள் கண்ணுமை' (5. 56) என்ற திருக்குறுந்தொகைப் பாமாலையில்,

கேடு மூடிக் கிடந்துண்ணு நாடது
தேடி நீர்திரி யாதே சிவகதி
கூட லாந்திருக் கோளிலி யீசனைப்
பாடு மின்இர வோடு பகலுமே. (6)

என்பது ஒன்பதாவது பாடல். 'முன்னமே' (5.57) என்ற முதற்குறிப்புடைய திருக்குறுந்தொகைப் பதிகமும் இத் தலத்து ஈசனைப் பற்றியதே.

விண்ணு ளார்தொழு தேத்தும் விளக்கினை
மண்ணு ளார்வினை தீர்க்கும் மருந்தினைப்
பண்ணு ளார்பயி லுந்திருக் கோளிலி
அண்ண லாரடி யேதொழு துய்மினே. (2)

நாளும் நம்முடை நாள்க ளறிகிலோம்
ஆளும் நோய்களோ ரைம்பதோ டாறெட்டும்
ஏழை மைப்பட் டிருந்துநீர் நையாதே
கோளி லியான் பாதமே கூறுமே. (3)

என்பன இப்பாமாலையின் இரண்டாவது, மூன்றாவது நறு மலர்கள்.

---

நிலையத்திலிருந்து 6 கல் தொலைவு. சப்தவிடங்களுள் இங்குள்ளவர் அவனிவிடங்கர். நடனம் பிருங்க நடனம். குண்டையூரிற் பெற்ற நெல்லைத் திருவாரூருக்கு எடுத்துச் செல்ல ஆள் வேண்டிப் பதிகம் பாடிச் சுந்தரர் பூத கணங் களால் ஆரூருக்குக் கொண்டு சேர்த்த அற்புதம் நிகழ்ந்த தலம். குண்டையூர் இங்கிருந்து ¾ கல் தொலைவிலுள்ளது. குண்டையூரிலிருந்து திருவாரூர் 16 கல் தொலைவிலுள்ளது.

திருவீழிமிழலைக்கு ஏகுவதற்கு முன்னர் நாகைக் காரோணத்திற்கு[3] வருகின்றார். இத்தலத்து எம்பெருமானை நான்கு பதிகங்களால் ஏத்துகின்றார். "மனைவி தாய் தந்தை" (4. 71) என்று தொடங்கும் திருநேரிசைப் பதிகத்தில்,

மனைவிதாய் தந்தை மக்கள்
மற்றுள சுற்ற மென்னும்
வினையுளே விழுந்த ழுந்தி
வேதனைக் கிடமா காதே
கனையுமா கடல்சூழ் நாகை
மன்னுகா ரோணத் தானை
நினையுமா வல்லீ ராகில்
உய்யலாம் நெஞ்சி னீரே. (1)

என்பது முதல் திருநேரிசைப் பாடலாகும். "வடிவுடை மாமலை" (4. 103) என்ற திருவிருத்தப் பதிகத்தில்,

வங்க மலிகடல் நாகைக்கா
ரோணத்தெம் வானவனே
எங்கள் பெருமானொர் விண்ணப்பம்
உண்டதுகேட் டருளீர்
கங்கை சடையுட் கரந்தாய்அக்
கள்ளத்தை மெள்ளவுமை
நங்கை அறியிற்பொல் லாதுகண்
டாய்எங்கள் நாயகனே(8)

3. நாகைக்காரோணம் (நாகப்பட்டணம்): இருப்பூர்தி நிலையத்திலிருந்து ½ கல் தொலைவு. ஓர் இருடியைக் காயத்தோடு வானுலகிற்கு ஆரோஹணம் செய்யும்படி இறைவன் அருளியதால் காயாரோஹணம் என்பது மருவிக் காரோணம் எனத் தலப்பெயருடன் சேர்ந்தது. அதிபத்த நாயனார் அவதரித்துப் பொன்மீனைச் சிவார்ப்பணம் செய்து முத்தி பெற்ற தலம். தம்பிரான் தோழர் பொன் பெற்ற தலங்களுள் ஒன்று. சப்தவிடங்களுள் இங்கு சுந்தர விடங்கர், பாராவார தரங்க நடனம்.

என்பது எட்டாவது திருவிருத்தம். கங்கையைச் சடையுள் கரந்து வைத்துள்ள கள்ளத்தை மெல்ல நங்கை உமை அறியில் அது பொல்லாததாக முடியும் என்கின்றார்.

''பாணத்தால்'' (5. 83) என்ற முதற் குறிப்பினை யுடைய திருக்குறுந்தொகைப் பதிகத்தில்

புனையும் மாமலர் கொண்டு புரிசடை
நனையும் மாமலர் சூடிய நம்பனைக்
கனையும் வார்கடல் நாகைக்கா ரோணனை
நினைய வேவினை யாயின நீங்குமே. (3)

என்பது மூன்றாவது பாடல், ''பாரார் பரவும்'' (6. 22) என்ற முதற்குறிப்பையுடைய திருத்தாண்டகச் செந்தமிழ் மாலையில்,

சொல்லார்ந்த சோற்றுத் துறையான் தன்னைத்
தொல்நரகம் நன்னெறியால் துரப்பான் தன்னை
வில்லானை மீயச்சூர் மேவி னானை
வேதியர்கள் நால்வர்க்கும் வேதஞ் சொல்லிப்
பொல்லாதார் தம்அரணம் மூன்றும் பொன்றப்
பொறியரவம் மார்பாரப் பூண்டான் தன்னைக்
கல்லாலின் கீழானைக் கழிசூழ் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றும் காண லாமே. (9)

என்பது இம்மாலையில் ஒன்பதாவது நறுமணம் வீசும் மலர். கல்லாலின்கீழ்ச் சனகாதி முனிவர் நால்வர்க்கும் வேதம் சொல்லியவன், தொல் நரகம் தூர்த்துப் பக்தர்க்கு நன்னெறியருளுபவன் என்கின்றார்.

திருநாகையிலிருந்து திருவீழிமிழலைக்கு[4] வருகின்றார் அப்பர் பெருமான். இஃது இரண்டாவது முறையாக வந்தது

4. இத்தலம் பற்றி முன்னமே எழுதப் பெற்றுள்ளது. பக். 163 காண்க.

என்பதாகக் கருதுவர்பேராசிரியர் க. வெள்ளைவாரணனார்.[4] இப்பொழுது 'கரைந்து' (5. 12) என்ற முதற்குறிப்புடைய பாமாலை பாடி மிழலை மாமணியை வழுத்துகின்றார். இதில்,

எடுத்த வெல்கொடி யேறுடை யான்தமர்
உடுப்பர் கோவணம் உண்பது பிச்சையே
கெடுப்ப தாவது கீழ்நின்ற வல்வினை
விடுத்துப் போவது வீழிமி ழலைக்கே.(5)

என்பது ஐந்தாவது பாடல்.

வீழிமிழலையானிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு வன்னியூர்[6] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். 'காடு கொண்ட' (5. 26) என்ற திருக்குறுந்தொகைச் செந்தமிழ் மாலையால் சேவிக்கின்றார்.[6]

ஞானம் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானம் காட்டுவர் தம்மடைந் தார்க்கெலாம்
தானங் காட்டித்தன் தாளடைந் தார்கட்கு
வானங் காட்டுவர் போல்வன்னி யூரரே(3)

என்பது மூன்றாவது பாடல்.

---

5. பன்னிரு திருமுறை வரலாறு - இரண்டாம் பகுதி. (திருநாவுக்கரசு தேவாரம் - வரலாற்று முறைத் திருப்பதிகத்தில் அட்டவணை-பக். 64)

6. வன்னியூர்: மயிலாடுதுறை-காரைக்குடி இருப்பூர்தி வழியிலுள்ள பூந்தோட்டம் (பேரளத்தருகிலுள்ளது) என்ற நிலையத்திலிருந்து 7 கல் தொலைவு. வன்னி (அக்கினி) பூசித்ததலம். திருமுறைகளில் ஒரே ஒரு பதிகத்தை யுடைய திருத்தலம். காவிரி தென்கரைத் தலமான இதற்கு வந்த சூழல் தெளிவாகத் தெரியவில்லை.

வன்னியூரரிடம் விடைபெற்றுக் கொண்டு கருவிலிக் கொட்டிட்டை என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். வந்தவர், "மட்டிட்ட குழலார்" (5. 69) என்ற திருக்குறுந் தொகைச் செந்தமிழ் மாலையால் வழிபடுகின்றார்.

நில்லா வாழ்வு நிலைபெறும் என்றெண்ணிப்
பொல்லா வாறு செயப்புரி யாதுநீர்
கல்லா ரும்மதிள் சூழ்தண் கருவிலிக்
கொல்லே றூர்பவன் கொட்டிட்டை சேர்மினே. (7)

என்பது ஏழாவது வாடா நறுமலர். இப்பதிகம் 'அறம் பாடும் குறுந்தொகை'; 'அரன்பாடி உய்க' என்று அறிவுறுத்தும் தனிச் சிறப்புடையது.

கொட்டிட்டைப் பெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு திருநல்லம்[8] என்ற திருத்தலத்திற்குவருகின்றார் வாகீசர் பெருமான். 'கொல்லத்தான்' (5.43) என்ற முதற் குறிப்பினையுடைய திருக்குறுந்தொகைச் செந்தமிழ் மாலையால் தலத்து ஈசனை வழுத்துகின்றார்.

உரைத ளர்ந்துட லார்நடுங் காமுனம்
நரைவி டையுடை யானிடம் நல்லமே
பரவுமின்; பணி மின்;பணி வாரொடே
விரவு மின்;விர வாரை விடுமினே. (5)

என்பது இம்மாலையில் ஐந்தாவது மலர்.

---

7. கருவிலிக் கொட்டிட்டை : கும்பகோணத்திலிருந்து 12 கல் தொலைவு. நாச்சியார் கோயில், குடவாயில் இத் தலங்கட்குப் போகும் பேருந்து வழி. காவிரியின் தென் கரைத் தலம். ஊர்-கருவிலி: கொட்டிட்டை-திருக்கோயில். அப்பர் தேவாரம் மட்டும் உடைய தலம்.

8. நல்லம் (கோனேரி ராஜபுரம்): ஆடுதுறை இருப் பூர்தி நிலையத்திலிருந்து 5 கல் தொலைவு. காவிரியின் தென்கரைத் தலம். இத்தலத்திற்கு அப்பர் பெருமான் வந்த சூழலும் பாடிய சந்தர்ப்பமும் தெளிவாக அறியக்கூட வில்லை.

நல்ல நக்கனிடம் விடைபெற்றுக்கொண்டு திருநீலக்குடி[9] என்ற தலத்திற்கு வருகின்றார். 'வைத்தமாடும்' (5.72) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந்தொகை செந்தமிழ்ப் பதிகம் பாடி நீலக்குடியானைச் சேவிக்கின்றார்.

கல்லி னோடெனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக்குடி யரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேனன்றே. (7)

என்பது ஏழாவது தமிழ் மணம் கமழும் வாடா நறுமலர். இதில் தம்மைக் கல்லில் கட்டி கடலில் பாய்ச்சிய நிகழ்ச்சியை நினைவுகூர்கின்றார்.

நீலக்குடியானிடம் விடைபெற்றுக் கொண்டு திருவாவடு துறைக்கு[10] வந்து ''மாயிரு ஞாலம் எல்லாம்' (4.56) என்ற திருநேரிசைப் பதிகத்தால் மாசிலாமணியீசர் மலரடிகளைப் போற்றிப் பரவுகின்றார்.

மாயிரு ஞால மெல்லாம்
மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப்
படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த
கழுமல வூரார்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலும்
ஆவடு துறைய னாரே. (1)

என்பது பதிகத்தின் முதல் நேரிசை. இதில் ஆவடுதுறை இறைவன் காழிப் பிள்ளையாருக்கு ஆயிரம் பொன்

---

9. நீலக்குடி (தென்னலக்குடி): ஆடுதுறை என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து 2 கல் தொலைவு.

10. ஆவடுதுறை (திருவாவடுதுறை): முன்னர் எழுதப் பெற்றுள்ளது. பக்கம் 97 காண்க.

நிறைந்த உலவாக் கிழியினைக் கொடுத்தருளிய அருட் செயலை நினைந்துருகிப் போற்றுவதைக் காணலாம்.

**நாவுக்கரசரின் உண்ணா நோன்பு :** பின்னர் பழையாறை (வடதளி)[11] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். அங்குச் சமணர்களால் மறைக்கப்பெற்ற 'வடதளி' என்னும் கோயிலின் அருகில் வரும்பொழுது அவருடைய திருக் கைகள் தாமே கூப்பி வடதளி இறைவனைச்சேவிக்கின்றன. அவ்விடத்தில் எதிர்ப்பட்டார் சிலர் 'இது சிவபெருமா னுக்கு உரிய திருக்கோயிலே. இப்பொழுது இங்குள்ள விமானம் அமணர்களால் மறைத்துக் கட்டப்பெற்ற பொய் யான விமானமே' எனக் கூறுகின்றனர். இச் செய்தியை அறிந்த நாவுக்கரசர் அவ்விமானத்தின் அருகே ஓரிடத்தில் அமர்ந்து இறைவன் இணையடிகளைச் சிந்திக்கின்றார். 'பெருமானே, அமணர் வஞ்சனையால் மறைத்த மறைப் பினையகற்றி அவர்களின் ஆற்றலைச் சிதைத்திடுவீர். அடியேன் நுமது திருமேனி வண்ணத்தைக் கண்டு சேவிக் காமல் இவ்விடத்தை விட்டு அகலேன்' என்றுகூறி உண்ணா நோன்பினை மேற்கொள்ளுகின்றார்.[12]

---

11. பழையாறை (வடதளி): கும்பகோணம் இருப்பூர்தி நிலையத்திற்கு மேற்கில் அடுத்துள்ள தாராசுரம் நிலையத் திலிருந்து $1\frac{1}{2}$ கல் தொலைவு. அமர்நீதி நாயனார் வாழ்ந்த தலம்.

ஒரு காலத்தில் இராஜதானியாக இருந்த பழையாறை இப்போது ஒதுக்கப்பெற்ற சிற்றூராகக் காணப்பெறு கின்றது. பழையாறை வடதளி, மேற்றளி, கீழ்த்தளி, தென்தளி என்ற நான்கு கோயில்கள் இருந்தன. வடதளி என்ற கற்கோயில்தான் தென்னாட்டிலுள்ள முதலாவது கற்கோயில்; சோழர் காலத்துக் கற்கோயில். இப்போது இக்கோயில் பாழடைந்த நிலையில் உள்ளது (சிவபாத சுந்தரம், சோ; சேக்கிழார் அடிச்சுவட்டில் பக். 157).

12. பெ. பு. திருநாவுக். (294-296)

வடதளி ஈசன் பழையாறை நகரத்தின் வேந்தனின் கனவில் தோன்றி 'நாம் சமணர்களால் வடதளியில் மறைக்கப் பட்டுள்ளோம்' என்று அடையாளங்களுடன் சொல்லி, 'நம்மை நாவுக்கரசன் வெளிப்படக் கண்டு வழிபடும்படியாக நீ முறையற்ற அமணர்களை அழித்துப் போக்குவாயாக' என்று அருளி மறைந்தருள்கின்றார். விழிப்புற்றெழுந்த வேந்தன் தான் கண்ட கனவினை அமைச்சர்கட்குத் தெரிவிக்கின்றான். இறைவன் அருளிச் செய்த அடையாளங்களின்படி அமைச்சர்களுடன் வடதளியை அடைந்து அமணர்கள் புரிந்துள்ள வஞ்சனையைக் கண்டறிகின்றான். திருத்தொண்டராகிய நாவுக்கரசரின் அடி பணிகின்றான். வடதளியை வஞ்சனையால் மறைத்த சமணர்களின்மீது யானைகளை ஏவி 'தொக்க அமணர் தூர் அறுக்கின்றான்.' அவர்கள் கட்டிய பொய்யான விமானத்தை நீக்கிச் சிவபெருமானுக்குப் புதியதொரு விமானத்தை அமைக்கின்றான்; நாள் வழிபாட்டுக்கு வேண்டும் நிபந்தங்களையும் வழங்கி வடதளியீசனை வணங்கி மகிழ்கின்றான்[13].

இவ்வாறு இறையருளால் தாம் எண்ணியது நிறைவேறியமைகண்டு மகிழ்ந்த நாவுக்கரசர் 'தலையெலாம் பறிக்கும்'(5.58) என்ற திருக்குறுந்தொகைப் பதிகத்தால் வடதளியீசனை வழிபடுகின்றார். இதன் முதற் பாடல்,

தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலையி னான்மறைத் தால்மறைக் கொண்ணுமே
அலையி னார்பொழில் ஆறை வடதளி
நிலையி னானடி யேநினைந் துய்ம்மினே. (1)

என்பது 'தலை பறித்து நின்றுண்ணும் இயல்பினராகிய சமணர்கள் தம் வஞ்சனையால் எம்பெருமானை மறைக்க முயன்றனராயினும் நிலையற்ற அவர்களால்

13. ஷை 297—299.

நிலையுடைய மெய்ப்பொருளாகிய இறைவனை மறைத்தல் கூடுமோ?' என்ற கருத்து இதில் அடங்கியுள்ளதைக் கண்டு மகிழலாம்.

வரலாற்று நிகழ்ச்சிகள் அடங்கிய இக்குறுந்தொகைப் பதிகப் பாடல்களைச் சிறிது நுணுகி ஆராய்வோம். சமணர்கள் அமைத்த விமானத்தருகே நாவுக்கரசர் சென்ற பொழுது திருக்கோயிலைத் தொழுவதில் பயிற்சி மிக்க அவரது கைகள் தாமே தொழுதன என்பதை,

அண்ட ரைப்பழை யாறை வடதளிக்
கண்ட ரைத்தொழு துய்ந்தன கைகளே. (3)

என்ற அவரது திருவாக்கால் இனிது விளங்கும். 'வண்ணங் கண்டு நான் உம்மை வணங்கியன்றிப் போகேன்'[14] என்று இறைவனைச் சிந்தித்து உண்ணா நோன்பு மேற்கொண்டிருந்த நாவேந்தர், தம் பொருட்டு இறைவன் பழையாறை வேந்தனது கனவில் தோன்றி வடதளி மறைக்கப் பட்டிருப்பதனை அடையாளங்களுடன்கூறித் தெளிவித்த செய்தியை,

அருட்டி றத்தணி யாறை வடதளித்
தெருட்ட ரைத்தொழத் தீவினை தீருமே. (7)

என்ற தொடரால் குறிப்பிட்டமை தெளியலாம். அமணர்களின் வஞ்சனையைக் கண்டுணர்ந்த காவலன் முறையற்ற செயலில் ஈடுபட்ட சமணர் ஆயிரவரையும் யானைகளால் அழித்தமை,

மூக்கி னான்முரன் றோதிய குண்டிகை
தூக்கி னார்க்குலந் தூரறுத் தேதனக்
காக்கி னான்அணி யாறை வடதளி. (2)

எனவும்,

14. ஷை. 296

குண்ட ரைக்குண மில்லரைக் கூறையில்
மிண்ட ரைத்துரந்த விமலன் (3)

எனவும்,

நீதி யைக்கெட நின்றம ணேயுணும்
சாதியைக் கெடுமா செய்த சங்கரன் (6)

எனவும்,

ஆளுறா,
ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினான் (9)

எனவும் வரும் தொடர்களால் இறைவனது செயலாகக் குறிப்பிட்டுள்ளார் ஆளுடைய அடிகள். இவ்வாறு வேந்தன் செயலை இறைவன்மேல் ஏற்றிக் கூறியது மன்னன் மேற்கொண்டு புரியும் முறைசெய்தலாகிய தொழில் இறைவனது தொழிலாகவே கொள்ளப்படும் என்பதும், ஆவதும் அழிவதும் எல்லாம் இறைவனது செயலே என்பதுமாகிய உண்மையினை யறிவுறுத்தும் குறிப்புடையதாதல் தெளிவாகும்.

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப்படும்[15]

என்ற வள்ளுவர் கூறும் மரபையும் காண்க.

காவிரியின் இருகரைக் கோயில்கள் : காவிரியின் இரு கரையிலும் அமைந்திருக்கும் திருக்கோயில்களை வழிபட எண்ணுகின்றார் வாகீசர் பெருமான். இதனைச் சேக்கிழார் பெருமான்,

பொங்கு புனலார் பொன்னியினில்
இரண்டு கரையும் பொருவிடையார்
தங்கும் இடங்கள் புக்கிறைஞ்சித்
தமிழ்மா லைகளும் சாத்திப்போய்

15. குறள்—388 (இறைமாட்சி)

எங்கும் நிறைந்த புகழாளர்
 ஈறில் தொண்டர் எதிர்கொளச்
செங்கண் விடையார் திருவானைக்
 காவின் மருங்கு சென்றணைந்தார். [16]

என்று கூறுவார். திருவானைக்கா வருவதற்குமுன் காவிரியின் இருகரையிலும் உள்ள கோயில்களைச் சேவித்திருக்க வேண்டும் என்பது இப் பாடலின் 'பொங்குபுனலார்... சாத்திப் போய்' என்ற தொடரால் அறியக்கிடக்கின்றது. இதனைக் கருத்தில் கொண்டுதான் பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் 'இன்னம்பர்' முதல் அன்பிலாலந் துறை' வரை ஏழு கோயிலைப் பட்டியலிட்டுக் காட்டுவர்.[17] ஆகவே, இக்கோயில்களைச் சேவித்த பின்னரே நாவுக்கரசர் ஆனைக்காவுக்கு வந்திருக்க வேண்டும் என்று கருதுவது சரியான ஊகமே.

ஆகவே வாகீசர் பெருமான் பழையாறை வடதளியிலிருந்து இன்னம்பர்[18] தலத்திற்கு வருகின்றார் என்று கொள்ளலாம். இத்தலத்துப் பெருமானை அப்பர் பெருமான் நான்கு செந்தமிழ் மாலைகளால் சேவிக்கின்றார். 'விண்ணவர் மகுடகோடி '(4.72) என்ற முதற் குறிப்புடை நேரிசைச் செந்தமிழ் மாலை என்பது முதல் மாலை. இதில்,

அளிமலர்க் கொன்றை துன்றும்
 அவிர்சடை யுடையர் போலும்
களிமலர்ச் சாய லோடும்
 காமனை விழிப்பர் போலும்

---

16. பெ. பு. திருநாவுக். 300

17. பன்னிரு திருமுறை வரலாறு - இரண்டாம் பகுதி - நாவுக்கரசர் வரலாற்றுத் திருப்பதிகத்தல அட்டவணை பக்-64.

18. இன்னம்பர் (இன்னம்பூர்): கும்பகோணம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 4½ கல் தொலைவு.

வெளிவளர் உருவர் போலும்
வெண்பொடி யணிவர் போலும்
எளியவர் அடியற் கென்றும்
இன்னம்பர் ஈச னாரே. (8)

என்பது இம் மாலையில் தமிழ் மணம் கமழும் ஐந்தாவது வாடா நறுமலர்.

அடுத்த செந்தமிழ் மாலை 'மன்னு மலைமகள்' (4-100) என்ற முதற் குறிப்புடைய திருவிருத்தப் பாமாலை.

போற்றுந் தகையன பொல்லா
முயலகன் கோபப்புன்மை
ஆற்றுந் தகையன ஆறு
சமயத் தவரவரைத்
தேற்றுந் தகையன தேறிய
தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றுந் தகையன இன்னம்ப
ரான்றன் இணையடியே. (7)

என்பது இம்மாலையின் ஏழாவது வாடா நறுமலர். சிவபெருமானின் ,திருவடிப் புகழ்ச்சி' இப்பதிகத்தின் தனித் தன்மையாகும். கலம்பகம் போன்ற சிற்றிலக்கியங்களில் 'புய வகுப்பு, திருவடி வகுப்பு' போன்ற உறுப்புகளில் பாடல்கள் அமைவதற்குத் திருமுறை வித்திட்டிருக்கலாம் என்பதற்கு இப்பதிகம் நல்லதொரு சான்று.

இத்திருத்தலத்தீசனுக்குச் சாத்திய மூன்றாவது தமிழ் மாலை 'என்னிலாரும்' (5.21) என்ற முதற்குறிப்புடைய திருக்குறுந்தொகைச் செந்தமிழ் மாலை. இதில்,

என்னி லாரும் எனக்கினி யாரிலை
என்னி னும்மினி யானொரு வன்னுளன்
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே. (1)

தொழுது தூமலர்த் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே. (8)

என்பவை முதலாவது, எட்டாவது *தமிழ்மணங் கமழும் நன் மலர்கள்.*

நான்காவது *நறுந்தமிழ் மாலை* 'அல்லிமலர்' (*6.89*) *என்ற முதற்குறிப்புடைய திருத்தாண்டக மாலை.*

கருவுற்ற காலத்தே என்னை யாண்டு
கழற்போது தந்தளித்த கள்வர் போலும்;
செருவிற் புரமூன்றும் அட்டார் போலும்
தேவர்க்கும் தேவராம் செல்வர் போலும்;
மருவிற் பிரியாத மைந்தர் போலும்;
மலரடிகள் நாடி வணங்க லுற்ற
இருவர்க் கொருவராய் நின்றார் போலும்;
இன்னம்பர்த் தான்தோன்றி ஈச னாரே. (9)

*என்பது* இப்பதிகத்தின் ஒன்பதாவது *தமிழ் மணங் கமழும் நறுமலர்.*

*நான்கு பதிகங்கள் பெற்ற* இத்தலத்து *ஈசனைத்* திரு நேரிசை, *திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் என அப்பரின் அருந்தமிழ் கொஞ்சுகின்ற* இனிய பதிகங்கள் இத் *தலத்துப் பாமாலைகள்.* இவற்றில் ஈடுபாடும் *பக்தியும் கொஞ்சிக் குலவுவதைக் கண்டு மகிழலாம்.*

இன்னம்பர் *ஈசனிடம் விடைபெற்றுக் கொண்டு* திருப் புறம்பயம்[19]*என்ற திருத்தலத்திற்கு வருகின்றார் நாவேந்தர். வந்தவர்* 'கொடிமாட' (*6.13*) *என்று தொடங்கும் செந் தமிழ்த் தாண்டகமாலையால் வழுத்துகின்றார்.* இதில்,

---

*19.* புறம்பயம் (திருப்புறம்பியம்): கும்பகோணத்திலிருந்து 6 கல் தொலைவு. இங்குச் சங்க காலத்தில் பாண்டியனுக்கும் சோழனுக்கும் இடையே நடைபெற்றபோரில் சோழன்

மறியிலங்கு கையர் மழுவொன் றேந்தி
மறைக்காட்டேன் என்றோர் மழலை பேசிச்
செறியிலங்கு திண்தோள்மேல் நீறு கொண்டு
திருமுண்ட மாஇட்ட திலக நெற்றி
நெறியிலங்கு கூந்தலார் பின்பின் சென்று
நெடுங்கண் பனிசோர நின்று நோக்கிப்
பொறியிலங்கு பாம்பார்த்துப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் ஊரென்று போயி னாரே. (7)

ஏழாவது தமிழ் மணம் வீசும் செந்தமிழ்ப் பாமலர்.

இஃது அப்பர் பெருமானின் அருமையான அகத்துறைப் பதிகம். தலைவி தோழியிடம் கூறும் பாவனையில் அமைந்தது. 'கனவு நிலை' கலந்த அப்பரின் அநுபவங்கள் இதில் அழகுற வடிக்கப்பெற்றுள்ளன. காதல் பக்தியாக மலர்ந்துள்ளதைக் காட்டும் அரிய பதிகம். இறைவன் வெளிநின்றருளும் பாங்கு இப்பதிகத்தில் தத்துவப் பொருள் துலங்கச் சித்திரிக்கப்பெற்றுளது. ஒவ்வொரு பாடலும் 'புறம்பயம் நம் ஊர் என்று போயினாரே' என்று முடிவதுபோல் திருமங்கையாரின் திருநெடுந்தாண்டகத்திலும் 'புனல் அரங்கம் ஊர் என்று போயினாரே' (திருநெடுந் 24, 25) என்று முடிகின்றன. தாண்டக வேந்தர் அப்பர் பெருமானின் அச்சு மங்கை மன்னனின் பாடல்களில் தெரிகின்றது.

புறம்பயத்துப் பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு 'விசய மங்கை[20] என்ற திருத்தலத்துக்கு எழுந்தருளுகின்

---

வெற்றிபெற்றுத் தென்னவனாய் உலகாண்டான் (சுந்தரர் 7-39:11). திருமருகல் வரலாற்றைப்போல் இங்கும் ஒரு வணிகப் பெண்ணின் திருமணத்தை மெய்ப்பிக்க இறைவன் சாட்சி சொல்லியதால் தலத்து இறைவன் 'சாட்சி நாதேசுவர்' என்ற பெயருடன் திகழ்கின்றார்.

20. விசயமங்கை : சுந்தரப் பெருமான் கோயில் இருப்பூர்தி நிலையத்திலிருந்து (கும்பகோணத்திற்கு மேற்கிலுள்ளது) 4 கல் தொலைவு. விசயன் (= அருச்சுனன்) வழி

றார் வாகீசர் பெருமான். எழுந்தருளியவர் 'குசையும் அங் கையில்' (5.71) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந் தொகைச் செந்தமிழ் மாலையால் சேவிக்கின்றார் இத் தலத்து ஈசனை. இதில்,

வந்து கேண்மின் மயல்தீர் மனிதர்காள்!
வெந்த நீற்றன் விசயமங் கைப்பிரான்
சிந்தை யால்நினை வார்களைச் சிக்கெனப்
பந்து வாக்கி உயக்கொளும் காண்மினே. (9)

என்பது ஒன்பதாவது தமிழ்மணங் கமழும் நறுமலர். எல்லாப் பாடல்களுமே பக்தியநுபவத்தைத் தருபவை.

'விசயமங்கையின் வேதியனிடம்' விடைபெற்றுக் கொண்டு 'திருவாலம் பொழில்'[21] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார் திருநாவுக்கரசர். 'கருவாகி' (6.86) என்ற முதற்குறிப்பையுடைய செந்தமிழ்த் திருத்தாண்டக மாலை யில் வழிபடுகின்றார் ஆலம் பொழிலானை.

வரையார்ந்த மடமங்கை பங்கன் தன்னை
வானவர்க்கும் வானவனை மணியை முத்தை
அரையார்ந்த புலித்தோல்மேல் அரவ மார்த்த
அம்மானைத் தம்மானை அடியார்க் கென்றும்
புரையார்ந்த கோவணத்தெம் புனிதன் தன்னைப்
பூந்துருத்தி மேயானைப் புகலூ ரானைத்
திரையார்ந்த தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. (5)

---

பட்டு வரம் பெற்றதைப் (நாவுக் 5.71:8) பாசுரம் கூறும். இன்னம்பர், திருப்புறம்பயம், விசயமங்கை அருகருகே உள்ள திருத்தலங்கள்.

21. ஆலம்பொழில் : தஞ்சை நகரிலிருந்து 7 கல் தொலைவிலுள்ளது. பேருந்து வழி. சப்த ஸ்தானத் தலங் களுள் திருப்பூந்துருத்தியிலிருந்து 1 கல் தொலைவு.

என்பது இத்தமிழ் மாலையின் ஐந்தாவது நறுமலர். இப்பதிகத்தின் பத்தாம் பாடல் சிதைந்துபோயிற்று. 'திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே' என்று ஒவ்வொரு பாடலும் முடிந்து இப்பதிகம் நெஞ்சுக்கு அறிவுறுத்துவதாக அமைகின்றது.

அடுத்து, திருக்கானூர்[22] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். வந்தவர் 'திருவின் நாதனும்' (5.76) என்ற திருக்குறுந்தொகைப் பதிகத்தால் வழிபடுகின்றார். இதில்,

பொத்தல் மண்சுவர் பொல்லாக் குரம்பையை
மெய்த்தன் என்று வியந்திடல் ஏழைகாள்!
சித்தர் பத்தர்கள் சேர்திருக் கானூரில்
அத்தன் பாதம் அடைதல் கருமமே. (5)

என்பது ஐந்தாம் திருப்பாடல்.

கானூர் அத்தனிடம் விடைபெற்றுக் கொண்டு காட்டுப்பள்ளி[23] (மேலை) என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். 'மாட்டுப்பள்ளி' (5.84) என்று தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகத்தால் காட்டுப்பள்ளி ஈசனை வழுத்துகின்றார். இதில்,

வேலை வென்ற கண்ணாளை விரும்பிநின்
சீலங் கெட்டுத் திகையன்மின் பேதைகாள்!
காலை யேதொழும் காட்டுப்பள் ளிய்யுறை
நீல கண்டனை நித்தல் நினைமினே. (8)

ன்பது எட்டாவது பாடல். சதா சிவச்சிந்தனையுடன் )ருக்குமாறு அறிவுறுத்துகின்றார்.

---

22. திருக்கானூர் (கானூர்): தஞ்சை - திருச்சி இருப்பூர்திப் பாதையில் பூதலூர் என்ற நிலையத்திலிருந்து 7 கல் தொலைவு. மண்மூடிப் போயிருந்த கோயில் சென்ற நூற்றாண்டில் அகழ்ந்தெடுக்கப் பெற்றது.

23. காட்டுப்பள்ளி (மேலை): பூதலூர் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 5 கல் தொலைவு. தஞ்சையிலிருந்து பேருந்து வசதி உண்டு. காவிரியின் தென்கரையிலுள்ள தலம்.

காட்டுப்பள்ளி ஐயனிடம் விடைபெற்றுக்கொண்டு அன்பில் ஆலந்துறை[24] அடைந்து 'வானச்சேர்' (5-80) என்ற திருக்குறுந் தொகைச் செந்தமிழ்ப் பதிகத்தால் வழிபடு கின்றார். இதில்,

பிறவி மாயப் பிணக்கில் அழுந்தினும்
உறவெ லாம்சிந்தித்து உன்னி உகவாதே
அறவன் எம்பிரான் அன்பிலா லந்துறை
மறவா தேதொழு தேத்தி வணங்குமே. (7)

என்பது ஏழாவது பாடல்.

அன்பில் ஆலந்துறை மெய்யனிடம் விடைபெற்றுக் கொண்டு திரு ஆனைக்கா[25] வருகின்றார். ஆனைக்கா ஈசனை மூன்று பதிகங்களால் வழிபடுகின்றார். 'கோணைக் காவி' (5-31) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந் தொகை முதல் பதிகமாகும். இதில்,

ஒழுகு மாடத்துள் ஒன்பது வாய்தலும்
கழுகு அரிப்ப தன்முன்னங் கழலடி
தொழுது கைகளால் தூமலர் தூவிநின்று
அழும வர்க்கன்பன் ஆனைக்கா அண்ணலே. (7)

என்பது ஏழாவது பாடல். அடுத்து வழிபடுவது இரண்டு திருத்தாண்டகப் பதிகங்களால். 'எத்தாயர்' (6.62) என்ற முதற் குறிப்புடையது முதல் திருத்தாண்டகம். இதில்,

---

24. அன்பில் ஆலந்துறை (அன்பில்): இலால்குடியின் கிழக்கே 3 கல் தொலைவிலுள்ளது. பேருந்து வழி. கொள் ளிடத்துக்குத் தென்கரையிலுள்ள தலம்.

25. ஆனைக்கா (ஜம்புகேஸ்வரம்): திரு அரங்கம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து ½ கல் தொலைவு. காவிரி கொள்ளிடம் என்ற இரண்டு ஆறுகட்கு இடைப்பட்ட தலம். பஞ்ச பூதத் தலங்களுள் இது நீர் அல்லது அப்புத் தலம். மூலத்தான மூர்த்தி இருக்கும் இடம் இரண்டு ஆறு களின் தரைமட்டத்திற்குக் கீழிருப்பதால் எப்போதும் தண்

எத்தாயர் எத்தந்தை எச்சுற் றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்
செத்தால்வந் துதவுவார் ஒருவ ரில்லை
சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா! என்றன்
அத்தா! உன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. (*1*)

என்பது முதல் *திருத்தாண்டகம்*. *இதனை அடுத்துத் துதிப்பது 'முன்னானே' (6.63) என்ற திருத்தாண்டகத்தால்*. இதில்,

பொய்யேது மில்லாத மெய்யன் தன்னைப்
புண்ணியனை நண்ணாதார் புரம்நீ றாக
எய்தானைச் செய்தவத்தின் மிக்கான் தன்னை
ஏறமரும் பெருமானை இடமான் ஏந்தும்
கையானைக் கங்காள வேடத் தானை
கட்டங்கக் கொடியானைக் கனல்போல் மேனிச்
செய்யானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. (5)

என்பது ஐந்தாவது *திருத்தாண்டகம்*.

*இத் திருத்தாண்டகப் பதிகத்தில் பாடலின் அடிகள் தோறும், 'ஆனை' 'ஆனை' என 'மருந்தானை, 'தாரானை' 'கலையானை', 'இசையானை', 'பார்த்தானை'-எனச் சொல்லோவியமாகத் தீட்டியிருப்பது—அவை 'திரு ஆனைக் காவை' இடைவிடாது நம் மனத்தில் நிலைபெறச் செய்கின்றது.*

---

*ணீர்க் கசிவுள்ளது. ஆற்றில் வெள்ளம் பெருகும்போது ஓயாமல் நீர் இறைத்துக்கொண்டே இருந்தாலன்றி மூலத்தான மூர்த்தியைத் தரிசிக்க முடியாது. நீர் இறைப்பதற்கென்றே எண்ணெய்ப் பொறி உள்ளது. புராணச் சிறப்பு மிக்க தலம். கச்சியப்ப முனிவரால் இயற்றப்பட்ட அருமையான தலபுராணம் இத் தலத்திற்குண்டு.*

*ஆனைக்கா அண்ணலிடம் விடைபெற்றுக்கொண்டு* 'திருஎறும்பியூர்'[26] *என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். இத்திருத்தலத்துப் பெருமானை இரண்டு செந்தமிழ் மாலை களால் போற்றுகின்றார் அப்பர் பெருமான்.* 'விரும்பியூறு' (*5.74*) *என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந் தொகைப் பதிகம் முதலாவது. இதில்,*

இன்ப மும்பிறப் பும்மிறப் பின்னொடு
துன்ப மும்முட னேவைத்த சோதியான்
அன்ப னேஅ னேயென் றரற்றுவார்க்
கின்ப னாகும் எறும்பியூ ரீசனே. (*8*)

*என்பது எட்டாவது பாடல்.* 'பன்னிய செந்தமிழ்' (*6.91*) *என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்த் திருத்தாண்டக மாலை இரண்டாவது. இதில்,*

அறந்தெரியா ஊத்தைவாய் அறிவில் சிந்தை
 யாரம்பக் குண்டரோ டயர்த்து நாளும்
மறந்துமரன் திருவடிகள் நினைய மாட்டா
 மதியிலியேன் வாழ்வெலாம் வாளா மண்மேல்
பிறந்தநாள் நாளல்ல வாளா ஈசன்
 பேர் பிதற்றிச் சீரடிமைத் திறத்து ளன்பு
செறிந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
 செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. (*8*)

*என்பது தமிழ் மணங் கமழும் வாடா நறுமலர். 'எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தைச் செழுஞ்சுடரைச் சென்ற டையப் பெற்றேன் நானே' என்று எல்லாப் பாடல்களும் இறுவது கண்டு மகிழத் தக்கது.*

---

26. எறும்பியூர் *(திருவெறும்பூர்): திருச்சி - தஞ்சை இருப்பூர்தி வழியில் திருவெறும்பூர் என்ற நிலையத்தி லிருந்து* ¼ *கல் தொலைவு. எறும்பு பூசித்த தலம். கோயில் சிறு குன்றின்மேல் உள்ளது. காவிரியின் தென்கரைத்தலம்.*

எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்திடம் விடைபெற்று கொண்டு 'சிராப்பள்ளி'[27] வருகின்றார். 'மட்டுவார் குழலாளொடு' (5.85) என்ற குறுந்தொகைப் பதிகம் பாடி இறைவனை வழிபடுகின்றார். இதில்,

அரிச்சி ராப்பகல் ஐவரால் ஆட்டுண்டு
சுரிச்சி ராதுநெஞ் சே!யொன்று சொல்லக்கேள்
திருச்சி ராப்பள்ளி என்றலும் தீவினை
நரிச்சி ராது நடக்கும் நடக்குமே. (3)

என்பது மூன்றாவது பாடல். இத்திருப்பதிகத்தில் 4 முதல் 9 வரை செய்யுட்கள் காணப்பெறவில்லை. சில பிரதிகளில் இக் குறுந்தொகைப் பதிகமே இல்லை என்பர் சிவக்கவிமணி.

---

27. சிராப்பள்ளி (திருச்சிராப்பள்ளி): திருச்சி டவுன் இருப்பூர்தி நிலையத்திலிருந்து ½ கல் தொலைவு. நடந்தே வந்து விடலாம். திரிசிரன் என்ற அரக்கன் வழிபட்டதாலும் ஆதி சேடனுக்கும் வாயுதேவனுக்கு ஏற்பட்ட சச்சரவில் வாயுவன்மையால் திருக்கயிலாயத்திலிருந்து தூக்கியெறியப்பட்ட மூன்று துண்டுகளுள் ஒருதுண்டு இங்குவந்து மலையாயினமையாலும் தலப்பெயர் ஏற்பட்டதென்பது புராண வரலாறு. காளத்தி, சிராப்பள்ளி, திருக்கோண மலை ஆகிய மூன்றும் இதுபற்றித்தென்கயிலை எனப்படும். இரத்தினாவதி என்ற வணிகப் பெண்ணின் பிரசவ காலத்தில் இறைவன் தாய்போல் வந்துதவியதால் இறைவன் தாயுமானவன் என்ற பெயரால் வழங்கப்பெறுகின்றான். இந்த அற்புதம் சித்திரைப் பெருவிழாவில் 5-ஆம் திருநாளன்று காலை உற்சவத்தில் நடைபெறுகின்றது. மலையின் உயரம் 273 அடி; ஏறுவதற்கு 417 படிகள் உள்ளன. மலைக்கோயிலுக்கு மேல் உச்சிப்பிள்ளையார் கோயில் உள்ளது. 300 ஆண்டுகட்குமுன் தாயுமான சுவாமிகள் அவதரித்து மூலன் மரபில் வந்த மவுனகுருவினிடம் உபதேசம் பெற்று உருக்கமான பல பாடல்களை அருளிய தலம். எல்லப்ப நாவலர் இயற்றிய செவ்வந்திப் புராணமே இத்தலத்துக்குரிய புராணம். காவிரியின் தென்கரைத்தலம்.

சிராப்பள்ளிச் செல்வரிடம் விடைபெற்றுக்கொண்டு **கற்குடி**[28] என்ற தலத்திற்கு வருகின்றார். இத்தலத்து எம் பெருமான்மீது **'மூத்தவனை'** (6.60) என்ற திருத்தாண்டகச் செந்தமிழ் மாலை பாடிக் கற்குடிக் கற்பகத்தைப் பாடிப் பரவுகின்றார். இதில்,

**மண்ணதனில் ஐந்தைமா நீரில் நான்கை**
**வயங்கெரியில் மூன்றைமா ருதத்தி ரண்டை**
**விண்ணதனில் ஒன்ற விரிக திரைத்**
**தண்மதியைத் தாரகைகள் தம்மின் மிக்க**
**எண்ணதனில் எழுத்தைஏ ழிசையைக் காமன்**
**எழிலரிய எரியுமிழ்ந்த இமையா நெற்றிக்**
**கண்ணவனைக் கற்குடியில் விழுமி யானைக்**
**கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே** (3)

என்பது மூன்றாவது பாடல். பாடல்கள் யாவும் படிப்போர் உள்ளத்தை உருக்குபவை.

**கற்குடிக்** கற்பகத்தினிடம் விடைபெற்றுக் கொண்டு **திருப்பராய்த் துறை**[29] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். **'கரப்பர் காலம்'** (5.30) என்ற முதற் குறிப்புடைய திருக் குறுந்தொகைச் செந்தமிழ் மாலையால் திருப்பராய்த் துறை மேவிய செல்வனை வழிபடுகின்றார்.

---

28. கற்குடி (உய்யக் கொண்டான் மலை): திருச்சி டவுன் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 2 கல் தொலைவு. சிறியதொரு மலைமேல் கோயில் உள்ளது. காவிரியின் தென்கரைத் தலம்.

29. பராய்த்துறை (திருப்பளாத்துறை): திருப்பராய்த் துறை ரோடு என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து ½ கல் தொலைவிலுள்ளது. அகண்ட காவிரியின் தென்கரையி லுள்ள தலம். சித்பவானந்த அடிகளின் இராம கிருஷ்ண தபோவனமும், விவேகாநந்தரின் வித்தியாவனமும் இங் குள்ளன. அற்புதமான கல்விப் பணிகள் செய்து வருவன.

தொண்டு பாடியும் தூமலர் தூவியும்
இண்டை கட்டி இணையடி யேத்தியும்
பண்ட ரங்கர் பராய்த்துறைப் பாங்கரைக்
கண்டு கொண்டடி யேனுய்ந்து போவனே. (10)

என்பது பத்தாம் நறுமலர். இம்மாலை பதினொரு மலர்களாலான தமிழ் மாலை.

பராய்த்துறை ஈசனிடம் விடைபெற்றுக்கொண்டு திருக்கடம்பந்துறை[30] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். 'முற்றிலாமுலை' (5.18) என்ற முதற் குறிப்புடைய திருக் குறுந்தொகைப் பதிகத்தால் வழிபடுகின்றார். இதில்,

பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனை
வண்ண நன்மல ரான்பல தேவரும்
கண்ண னும்மறி யான்கடம் பந்துறை
நண்ண நம்வினை யாயின நாசமே. (4)

என்பது நான்காம் பாடல்.

கடம்பந்துறைப் பெருமானிடம் விடை பெற்றுக் கொண்டு வாட்போக்கி[31] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். வந்தவர் ''காலபாசம்'' (5.86) என்ற முதற்குறிப்பை யுடைய திருக்குறுந்தொகைச் செந்தமிழ் மாலையால் வழி படுகின்றார். இதில்,

---

30. கடம்பந்துறை (கடம்பர் கோயில்): திருச்சி-ஈரோடு இருப்பூர்தி வழியில் குழித்தலை என்ற நிலையத்திலிருந்து 1 கல் தொலைவு. காலையில் இத்தலம், கட்டுச்சியில் வாட் போக்கி, மாலையில் ஈய்ங்கோய்மலை ஆகிய மூன்றையும் கார்த்திகை சோம வாரங்களில் இந்நாட்டு மக்கள் சேவிக்கும் வழக்கமுடையவர்கள். அகண்ட காவிரியின் தென்கரைத் தலம்.

31. வாட்போக்கி (இரத்தினகிரி): குழித்தலையிலிருந்து 5 கல் தொலைவு. உயர்ந்த மலை; கடல் மட்டத்திற்கு மேல் 1178 அடி உயரமுள்ளது (952 படிகள்). காலையில் கடம்பந்துறை, கட்டுச்சியில் இத்தலம், மாலையில் திருஈய்ங்

கூற்றம் வந்து குமைத்திடும் போதினால்
தேற்றம் வந்து தெளிவுற லாகுமே
ஆற்ற வும்மருள் செய்யும்வாட் போக்கிபால்
ஏற்று மின்;விளக் கையிருள் நீங்கவே. (4)

என்பது தமிழ் மணக்கும் வாடா நறுமலர். மரணம் வரும் முன் மாதேவனை நினைக்கத் தூண்டும் அற்புதத் திருப் பதிகம்.

வாட்போக்கியாரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு திருப்பாண்டிக் கொடுமுடிக்கு[32] வருகின்றார். வந்தவர், 'சிட்டனை' (5.81) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந் தொகைப் பதிகத்தால் வழிபடுகின்றார். இதில்,

சிட்ட னைச்சிவ னைச்செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை ஆல நிழலமர்
பட்ட னைத்திருப் பாண்டிக் கொடுமுடி
நட்ட னைத்தொழ நம்வினை நாசமே (1)

என்பது இப்பதிகத்தின் முதற் பாடல். இப் பதிகத்தில் ஐந்து பாடல்களே காணப்படுகின்றன. இதில் மூன்றாவது பாடல் அகத்துறையில் தாய்க்கூற்றாக அமைந்துள்ளது.

---

கோய் மலை ஆகிய மூன்றையும் கார்த்திகை சோம வாரங் களில் இந்நாட்டு மக்கள் சேவிப்பது வழக்கம். அகண்ட காவிரியின் தென்கரைத் தலம்.

32. பாண்டிக்கொடுமுடி (கொடுமுடி): திருச்சி-ஈரோடு இருப்பூர்தி வழியில் கொடுமுடி நிலையத்திலிருந்து ¼ கல் தொலைவு. இது கொங்கு நாட்டைச் சேர்ந்தது. அகண்ட காவிரியின் தென்கரையிலுள்ள தலம். கொங்கு நாட்டுத் தலங்கள் ஏழனுள் ஒன்று. 'கறையூர்' என வழங்கப்படு கின்றது. மூவர் தேவாரங்களையும் பெற்ற ஒரே ஒரு கொங்கு நாட்டுத் தலம் இது. அப்பர் பெருமானால் பாடப் பெற்ற ஒரே ஒரு கொங்கு நாட்டுத் தலமும் இதுதான்.

பாண்டிக் கொடுமுடியிலிருந்து திருபைஞ்ஞீலியை[33] நோக்கி வருகின்றார். வருகின்றவர் வழியிலே பசியினாலும் தாகத்தினாலும் மிகவும் இளைப்புறுகின்றார். அவரது பசி வருத்தத்தை நீக்கத் திருவுள்ளங்கொண்ட கயிலைநாதன் வழியிலே ஒரு சோலையையும் குளத்தையும் உண்டாக்கி வழிப்பயணம் செய்யும் அந்தணராக வடிவங்கொண்டு கையிற் பொதிசோறு கொண்டு அவ்விடத்தே தங்கியிருக்கின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

காவும் குளமும் முன்சமைத்துக்
காட்டி வழிபோங் கருத்தினால்
மேவும் திருநீற் றந்தணராய்
விரும்பும் பொதிசோ றுங்கொண்டு
நாவின் தனிமன் னவர்க் கெதிரே
நண்ணி யிருந்தார் விண்ணின்மேல்
தாவும் புள்ளும் மண்கிழிக்கும்
தனிஏ னமும்காண் பரியவர்தாம்,[34]

என்று காட்டுவர். திருநாவுக்கரசர் அவரையணுகியபோது, அந்தணர் அவரை நோக்கி, "நீர் நீண்ட தூரம் வழி நடந்து வந்தமையால் மிகவும் இளைத்திருக்கின்றீர். யான் கொடுக்கும் பொதி சோற்றை உண்டு, இங்குள்ள தடாகத்தில் தண்ணீர் பருகி இளைப்பாறிச் செல்வீர்" என்கின்றார். மறையவர் கூறிய இன்னுரையைக் கேட்ட நாவுக்கரசர், 'இறைவன் திருவருள் இது போலும்' எனக் கருதி அவர் தந்த பொதி சோற்றினை அருந்திப் பசி தீர்ந்து தண்ணீர் பருகித் தளர்வு ஒழிந்திருக்கின்றார். அப்பொழுது

---

33. பைஞ்ஞீலி: விருத்தாலம் - திருச்சி இருப்பூர்தி வழியில் பிட்சாண்டார் கோயில் நிலையத்திலிருந்து 3 கல் தொலைவிலுள்ளது. அப்பர் சுவாமிகட்கு இறைவன் கட்டமுது தந்த அற்புதத் தலம்.

34. பெ. பு. திருநாவுக். 305

அந்தண வடிவங் கொண்டு வந்த ஈசன் அப்பரை நோக்கி, "நீர் எங்கே ஏகுகின்றீர்?" என வினவ, வாகீசரும், "திருப் பைஞ்ஞீலிக்குப் போகின்றேன்" என்கின்றார். அதுகேட்ட அந்தணர் "நானும் அங்கேதான் போகின்றேன்" என்று கூறி இருவரும் திருப்பைஞ்ஞீலியை நோக்கி நடக்கின்றனர்.

திருப்பைஞ்ஞீலியை அணுகியவுடன் அந்தணர் மறைந்தருளுகின்றார். இது கண்டு வியப்புற்ற அப்பர் பெருமான், "ஆடல் புரிந்த பெருமான் அடியேனைப் பொருளாகக் கொண்டு அருள்புரிந்த கருணைத் திறம் இதுவோ?" என நெஞ்சம் நெக்குருகுகின்றார். கண்ணீர் சொரிகின்றார். நிலமிசை நீடுவீழ்ந்திறைஞ்சுகின்றார். திருக்கோயிலினுட் புகுந்து "உடையவர் கோவணம்" (5.41) எனத் தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகம் பாடி மீண்டும் இறைவனை வழுத்துகின்றார்.

விழுது சூலத்தன் வெண்மழு வாட்படைக்
கழுது துஞ்சிருட் காட்டகத் தாடலான்
பழுதொன் றின்றிப்பைஞ் ஞீலிப் பரமனைத்
தொழுது செல்பவர் தம்வினை தூளியே. (3)

என்பது மூன்றாவது பாடல். சில நாட்கள் இத்திருத்தலத்திலேயே தங்கியிருந்து கைத்தொண்டு புரிந்து வருகின்றார்.

சில நாட்கள் கழித்து வாகீசர் திருவண்ணாமலைக்கு இலக்கு வைத்து இடையில் இறைவன் உறையும் பல மலைகள், நாடுகள், பதிகள் எல்லாவற்றையும் கடக்கின்றார்[35]. பயணம் நடுநாடு வரை தொடர்கின்றது.

---

35. மலைகள் : திருஈய்ங்கோய் மலை, கொல்லி மலையில் அறப்பள்ளி நயினார் மலை, கஞ்ச மலை, பச்சை மலையில் இருக்கு வேளூர் மலையும்; நாடுகள் கொங்கு நாடு, திருமுனைப்பாடிநாடு; பதிகள் - புலிவலம், திருத் தலையூர், நெற்குன்றம், தோழூர், ஏழூர் முதலானவை என்பர் சிவக்கவிமணி.

திருவண்ணா மலைக்கு[36] வருகின்றார். அப்பர் பெருமான் மூன்று பதிகத்தால் அண்ணாமலையாரை வழிபடுகின்றார். "ஓதிமாமலர்கள்" (4.63) என்பது முதலாவது திருநேரிசைத் தமிழ்மாலை.

இரவியும் மதியும் விண்ணும்
இருநிலம் புனலும் காற்றும்
உரகமார் பவனம் எட்டும்
திசையொளி உருவ மானாய்
அரவுமிழ் மதிகொள் சோதி
அணியணா மலையு ளானே;
பரவுநின் பாத மல்லால்
பரமநான் பற்றி லேனே. (7)

என்பது இம்மாலையில் ஏழாவது வாடா நறுமலர்.

'வட்டனைப்' (5.4) என்ற முதற் குறிப்புடைத் திருக் குறுந் தொகைப் பதிகம் அண்ணாமலை பற்றியது. இதில்,

வீர னைவிடம் உண்டனை விண்ணவர்
தீர னைத்திரு அண்ணா மலையனை
ஊரனை யுண ரார்புர மூன்றெய்த
ஆர னைஅடி யேன்மறந் துய்வனோ? (7)

---

36. அண்ணாமலை (திருவண்ணாமலை): விழுப்புரம் காட்பாடி இருப்பூர்தி வழியில் திருவண்ணாமலை நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவு. பஞ்சபூதத் தலங்களுள் இது தேஜஸ் என்னும் தீயைக் குறிக்கும், திருவாசகம் கூறும் (திருவெம்-1) அழல் உருவே இப்போது மலையுருவா யுள்ளது. மலையின் உயரம் கடல் மட்டத்திற்கு மேல் 2668 அடி. அருணகிரிநாதர் வாழ்ந்து முத்தி பெற்ற தலம். திருவெம்பாவையை மாணிக்கவாசகர் பாடியது இத் தலத்தில். அருணகிரி அந்தாதி, அண்ணாமலை வெண்பா, சோணசைல மாலை, அருணைக் கலம்பகம் இத்தலத்தைப் பற்றியவை: புகழ் பெற்றவை. திருக்கார்த்திகை அண்ணா மலையார் தீபம் புகழ் பெற்றது. பல்லாயிரக் கணக்கான மக்கள் தீபத்தைச் சேவிப்பார்கள், அண்ணாமலை நடு நாட்டுத்தலம்.

என்பது ஏழாவது பாடல். எல்லாப்பாடல்களும் '(அண்ணா மலையானை) அடியேன் மறந்துய்வனோ' என்று முடிந்து படிப்போர் மனத்தை உருக்குகின்றன.

'பட்டியேறுகந் (5.5) என்ற முதற் குறிப்புடைய திருக் குறுந்தொகையும் அண்ணாமலையாரைப் பற்றியதே. இதில்,

கண்டந் தான்கறுத் தான்காலன் ஆருயிர்
பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்
அண்டத் தோங்கும்அண் ணாமலை கைதொழ
விண்டு போகும்நம் மேலை வினைகளே. (8)

என்பது எட்டாம் திருப்பாடல்.

அடுத்து 'புக்கணைந்து' (5.95) என்று தொடங்கும் இலிங்கபுராணத் திருக்குறுந்தொகையும் (பொதுப் பதிகங் களில் உள்ளது இது) திருமாலும் நான்முகனும் காண முடியாத மாதேவன் வரலாறும் அண்ணாமலையை ஒட்டிய தாகையால் சிவக் கவிமணி அவர்கள் இவ்விடத்தில் இணைத்து நோக்குகின்றார்கள். 'இலிங்கபுராணம்' அண்ணாமலையை ஒட்டியதாக இருக்கலாம். இப்பதிகம் அண்ணாமலையிலேயே பாடப்பெற்றதா என்பது ஆய்வுக் குரியது.

திருவண்ணாமலையில் பல நாட்கள் தங்கி கைத் தொண்டுகள் புரிந்திருக்கின்றார். பின்னர் தொண்டை நாட்டுத் திருத்தலங்களைச் சேவிக்கக் கருதுகின்றார். தொண்டை நாட்டுத் திருத்தலப் பயணத்தை அடுத்துக் காண்போம்.

# 14. தொண்டை நாட்டுத் திருத்தல வழிபாடு

தொண்டை நாட்டுத் திருத்தலங்கள் முப்பத்திரண்டு. இவற்றுள் சிலவற்றைத்தான் அப்பர் பெருமான் வழிபடுகின்றார். அந்தச் சிலவற்றுள் ஒன்றிரண்டிற்குப் பதிகம் இல்லை. இக்குறிப்பை நினைவிற்கொண்டு அப்பர் பெருமான் அடிச் சுவட்டையொட்டித் தொண்டை நாட்டின் திருத்தல வழிபாட்டைத் தொடங்குவோம்.

திருவண்ணமாலையில் (நடுநாடு) அண்ணாமலையாரைத்தொழுத பின்னர் அப்பர் பெருமானின் தொண்டைநாட்டு வழிபாடு தொடங்குகின்றது. முதலில் திருவோத்தூரை[1] அடைகின்றார். அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் முக்கட்பெருமானைப் போற்றுகின்றார் (பதிகம் இல்லை). அடுத்து மலைமகளார் செய்த வழிபாட்டினை ஏற்றருளும் திருவேகம்பப் பெருமானை இறைஞ்சிப் போற்ற விரும்பிக்

---

1. ஓத்தூர் (திருவேதிபுரம், திருவத்தூர்): காஞ்சியிலிருந்து வந்தவாசி செல்லும் பேருந்து வழி. கோயிலின் அருகில் செய்யாறு ஓடுகின்றது. சிவபெருமான் தேவர் முனிவர் கட்கு வேதப் பொருளை ஓதிய தலம் (ஓத்து-வேதம்). சம்பந்தர் அடியார் வேண்டுகோட்கிணங்கி ஆண் பனைகளைப் பெண் பனைகளாக்கிய அற்புதம் நிகழ்ந்த தலம். தைமாதம் இரத சப்தமியைத் தேர்த்திருநாளாகக் கொண்ட பத்துநாள் திருவிழாச் சிறப்புடையது.

காஞ்சி நகரை[2] அடைகின்றார். "அதிகைப் பெருமானால் சூலை நோய்தந்து ஆட்கொள்ளப்பெற்ற திருநாவுக்கரசர் இங்கு எழுந்தளருப் பெற்றோம்" என்று களிப்புற்ற காஞ்சி நகரப் பெருமக்கள் திருநாவுக்கரசரை எதிர்கொண்டு போற்றுகின்றனர். நகரத்தை நன்கு அலங்கரித்தும் பல சிறப்புப் பொருள்களை ஏந்திக்கொண்டும் அடியார் குழாம் திரண்டு எழுந்து சிறந்த வரவேற்பு நல்குகின்றது. 'மலை வல்லி தழுவக் குழைந்த பெருமானைக்' கண்டவுடன் நாவுக்கரசரின் நிலையைச் சேக்கிழார் பெருமான்,

வார்ந்து சொரியும் கண்ணருவி
 மயிர்க்கால் தோறும் வரும்புளகம்
ஆர்ந்த மேனிப் புறம்பலைப்ப
 அன்பு கரைந்தேன் புள்ளலைப்பச்
சேர்ந்த நயனப் பயன்பெற்றுத்
 திளைப்பத் திருவே கம்பர்தமை
நேர்ந்த மனத்தில் உறவைத்து
 நீடும் பதிகம் பாடுவார்.[3]

என்று காட்டுவார். இவர் பாடிய பதிகம் "கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை" (4.7) என்று தொடங்குவது.

---

2. கச்சி ஏகம்பம் (ஏகாம்பரேசுவரர் கோயில்): இருப்பூர்தி நிலையிலிருந்து 1 கல் தொலைவு. பேருந்து நிலையத்திலிருந்து பேருந்து மூலம் செல்வதே ஏற்றது. என்றும் அழியாத மாவடியின்கீழ் இறைவன் இருந்ததால் (ஏக+ஆம்ரன் = ஒரு மாவின் கீழிருப்பவன்) ஏகாம்பரன் ஆயினன். காஞ்சிப் பதியிலுள்ள எல்லாச் சிவாலயங்களும் தேவார வைப்புத்தலங்களே. காஞ்சியிலுள்ள எந்தச் சிவாலயத்திலும் அம்மன் சந்நிதி இல்லை. இவ்வாலயங்களிலுள்ள சிவபெருமானுக்கு அம்பிகை காமாட்சி அம்மையாகத் தனிக்கோயிலில் உள்ளார். இவர் இரு நாழி நெல் கொண்டு 32 அறங்களை வளர்ப்பவர். காஞ்சியிலுள்ள இராஜவீதிகள்போல் அகன்ற மாடவீதிகள் வேறு எந்தத் தலத்திலும் இல்லை. ஏழு திருமுறைகளிலும் கச்சி ஏகம்பத்திற்குத் திருமுறைகள் உண்டு.

3. பெ. பு. திருநாவுக்கரசு - 323.

கரவாடும் வன்னெஞ்சர்க்
கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை
விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ
அங்கையில் அனலேந்தி
இரவாடும் பெருமானை
என்மனத்தே வைத்தேனே. (1)

என்பது இப்பதிகத்தின் முதற் பாடல்.

இதனை அடுத்து 'நம்பனை நகர்' (4.44) என்ற திரு நேரிசைச் செந்தமிழ் மாலையால் ஏகம்பனை ஏத்துகின்றார். இதில்,

ஒருமுழம் உள்ள குட்டம்
ஒன்பது துறையு டைத்தாய்
அரைமுழம் அதன் அகலம்
அதனில்வாழ் முதலை ஐந்து
பெருமுழை வாய்தல் பற்றிக்
கிடந்துநான் பிதற்று கின்றேன்
கருமுகில் தவழும் மாடக்
கச்சிஏ கம்ப னீரே. (2)

என்பது இரண்டாவது தமிழ் மணம் கமழும் வாடா நறுமலர். "ஒரு முழ ஆழமுள்ள உடலிலுள்ளன ஒன்பது ஓட்டைகள்; ஐந்து புலன்கள் எனும் வஞ்சக பிடியிலே சிக்கிப் பிதற்றுகின்றேன்" என்கின்றார்.

இதனை அடுத்தது 'ஓதுவித்தாய்' (4.99) என்ற முதற் குறிப்பினையுடைய திருவிருத்தம். இதில்,

கருவுற்ற நாள்முத லாகவுன்
பாதமே காண்பதற்கு
உருகிற்றென் உள்ளமும் நானும்
கிடந்தலந் தெய்த்தொழிந்தேன்

திருவொற்றி யூரா! திருவால
வாயா! திருவாரூரா!
ஒருபற் றிலாமையும் கண்டிரங்
காய்கச்சி யேகம்பனே. (6)

என்பது ஆறாவது திருப்பாடல்.

'பண்டுசெய்த' (5.47) என்ற முதற் குறிப்பினையுடைய திருக்குறுந் தொகைப் பதிகத்தில்,

மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்(து)
ஆக்கும் ஐவர்தம் ஆப்பை அவிழ்த்தருள்
நோக்கு வான்நமை நோய்வினை வாராமே
காக்கும் நாயகன் கச்சியே கம்பனே. (7)

என்பது ஏழாவது பாடல். 'பூமேலானும்' (5.48) என்ற குறுந் தொகைப் பதிகமும் கச்சி ஏகம்பனைப் பற்றியதே. இதில்,

பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நெறிப்ப டுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்பு றும்மமு தாயவன் ஏகம்பம்
குறிப்பி னாற்சென்று கூடித் தொழுதுமே. (4)

என்பது நான்காவது திருப்பாடல்.

இதனையடுத்து திருக்கச்சி மயானம்[4] என்ற தலத்தை வழிபடுகின்றார். இந்த இரண்டு தகளிகளிலும் அப்பர் பெருமான் கைத்தொண்டு செய்கின்றார்.

---

4. திருக்கச்சி மயானம் - இது தேவார வைப்புத் தலம். இது காஞ்சியில் திருவேகம்பம் திருக்கோயிலுக்குள் கொடிநிலையின் அருகே அமைந்த சந்நிதியாகும்.

இதன்பிறகு கச்சிதிருமேற்றளிக்கு[5] வருகின்றார். வந்தவர் இறைவனைப் பணிந்து "மறையதுபாடி" (4.43) என்ற செந்தமிழ்ப் பதிகம்பாடிப் போற்றுகின்றார்.

செல்வியைப் பாகம் கொண்டார்;
சேந்தனை மகனாக் கொண்டார்;
மல்லிகைக் கண்ணி யோடு
மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியைக் கரையி லாத
காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எல்லியை விளங்க நின்றார்
இலங்குமேற் றளியனாரே (8)

என்பது இத்திருப்பதிகத்தின் எட்டாவது திருப்பாடல்,

இதனை அடுத்து, மாற்பேறு[6] என்ற திருத்தலத்தை அடைகின்றார்.

இத்திருத்தலத்தை நான்கு பதிகங்களால் வழிபடுகின்றார். முதலில் 'மாணிக்குயிர்' (4.108) என்ற திருவிருத்தச்

---

5. கச்சித் திருமேற்றளி (பிள்ளைப்பாளையம்): காஞ்சியிலிருந்து 1 கல் தொலைவு. இக்கோயிலில் சிவபெருமான் சந்நிதிகள் இரண்டுள்ளன. ஒன்று, திருமாலுருவம் சம்பந்தர் பதிகம் ஓத உருகிச் சிவலிங்கமாகிய ஓதஉருகேசர் சந்நிதி; மற்றொன்று திருமேற்றளி நாதர் சந்நிதி. சந்நிதித் தெருவின் கோடியில் சம்பந்தர் கோயில் உள்ளது. இவர் வருகையால் (=ஆளுடைய பிள்ளையார்) இப்பகுதி பிள்ளையார் பாளையம் எனப் பெயர் பெற்றது. சம்பந்தர் பதிகம் கிடைத்திலது. வைணவ தலங்கள் 108 இல் (=திவ்விய தேசங்கள்) 14 காஞ்சியில் உள்ளன.

6. மாற்பேறு (திருமால்பூர்): செங்கற்பட்டு - காஞ்சி - அரக்கோணம் இருப்பூர்தி வழியில் 'திருமால்பூர்' ஒரு நிலையம். நிலையத்திலிருந்து 3 கல் தொலைவிலுள்ளது இத்திருத்தலம். திருமால் சக்கராயுதம் வேண்டிச் சிவனை வழிபட்டுப் பெற்றதை (5.59:1) என்ற பாசுரம் கூறும்.

செந்தமிழ் மாலையால் மாற்பேறுடையானின் மலரடியை வழுத்துகின்றார்.

கருடத் தனிப்பாகன் காண்டற்
கரியன் காதல்செய்யில்
குருடர்க்கு முன்னே குடிகொண்
டிருப்பன கோலமல்கு
செருடக் கடிமலர்ச் செல்விதன்
செங்கம லக்கரத்தால்
வருடச் சிவப்பன மாற்பே
றுடையான் மலரடியே. (2)

என்பது இரண்டாவது வாடா நறுமலர். இப்பதிகத்தில் முதலிரண்டு பாடல்களே உள்ளன.

அடுத்தது 'பொருமாற்றின்படை' (5.59) என்ற முதற் குறிப்புடைய திருக் குறுந்தொகைப் பதிகமாகும். இதில்,

பண்டை வல்வினை பற்றறுக் கும்வகை
உண்டு சொல்லுவன் கேண்மின்; ஒளிகிளர்
வண்டு சேர்பொழில் சூழ்திரு மாற்பேறு
கண்டு கைதொழத் தீருங் கவலையே. (6)

என்பது ஆறாவது பாடல். இதற்கடுத்த 'ஏதுமொன்றும்' (5-60) என்னும் திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

இருந்து சொல்லுவன் கேண்மின்கள் ஏழைகாள்!
அருந்த வந்தரும் அஞ்செழுத் தோதினால்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே (4)

என்பது நான்காவது பாடல்.

'பாரானை' (6.80) என்ற திருத்தாண்டகச் செந்தமிழ் மாலை அற்புதமானது. இதனாலும் மாற்பேறுடையானைப் போற்றுகின்றார். இதில்,

பிறப்பானைப் பிறவாத பெருமை யானைப்
பெரியானை அரியானை பெண்ஆண் ஆய
நிறத்தானை நின்மலனை நினையா தாரை
நினையானை நினைவோரை நினைவோன் தன்னை
அறத்தானை அறவோனை ஐயன் தன்னை
அண்ணல்தனை நண்ணரிய அமர ரேத்தும்
திறத்தானைத் திகழொளியைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச் சென்றடைந்தேன்நானே.(7)

*என்பது தமிழ்மணங் கமழும் ஏழாவது வாடா நறுமலர். பாடல்கள் யாவும் பாடி அநுபவிக்க வேண்டியவை.*

*இதன் பின்னர் மீண்டும் திருக்கச்சிக்கு எழுந்தருள் கின்றார். (இஃது இரண்டாம் முறை வருகை). இரண்டு திருத்தாண்டக மாலைகளைக் கச்சி ஏகம்பனுக்கு சூட்டி மகிழ்கின்றார். 'கூற்றுவன் காண்' (6.64) என்ற முதற் குறிப்புடையது முதல் செந்தமிழ் மாலை. இதில்,*

பரந்தவன்காண்; பல்லுயிர் களாகி எங்கும்
பணிந்தெழுவார் பாவமும் வினையும் போகத்
துரந்தவன்காண்; தூமலரங் கண்ணி யான்காண்;
தோற்ற நிலையிறுதிப் பொருளாய் வந்த
மருந்தவன்காண்; வையங்கள் பொறைதீர்ப் பான்காண்;
மலர்தூவி நினைந்தெழுவார் உள்ளம் நீங்கா
திருந்தவன்காண்; எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன்காண்; அவனென் எண்ணத் தானே. (2)

*என்பது இரண்டாவது தமிழ்மணம் கமழும் வாடா நறுமலர்.*

*அடுத்த செந்தமிழ் மாலை 'உரித்தவன்' (6.65) என்று தொடங்குவது. இதில்,*

ஆய்ந்தவன்காண்; அருமறையோ டங்கம் ஆறும்
அணிந்தவன்காண் ஆடரவவோ டென்பு மாமை;
காய்ந்தவன்காண் கண்ணழலாற் காமன் ஆகம்;
கனன்றெழுந்த காலனுடல் பொடியாய் வீழப்

பாய்ந்தவன்காண்; பண்டுபல சருகால் பந்தர்
பயின்றநூற் சிலந்திக்குப் பாராள் செல்வம்
ஈந்தவன்காண்; எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன்காண்; அவனென் எண்ணத்தானே. (6)

என்பது ஆறாவது வாடா நறுமலர். இரண்டு பதிகங்களை யும் மனம் உருகிப் பாடினால் 'காண், காண்' என்ற ஓசை சிந்தையில் ஒலித்துக்கண்ணீரை ஆறாகப் பெருகச்செய்யும். இவ்விரண்டு பாமாலைகளும் 'எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்! அவன் எண்ணத்தானே' என்று முடிவு பெறும் மகுடங்களையுடையவை. ஏகம்பனைப் படிப்போர் சிந்தையில் நிலைநிறுத்துபவை.

பின்னர் தொண்டை நாட்டிலுள்ள பல தலங்களையும் சேவிக்க விரும்பி முதலில் திருக்கழுக்குன்றம்[7] வருகின்றார். இங்குள்ள நிருத்தனார் கழல் வணங்கி, "மூவிலை வேல்

---

7. கழுக்குன்றம் (திருக்கழுக்குன்றம்): செங்கல்பட்டி லிருந்து 9 கல் தொலைவு. வடநாட்டார் 'பட்சி தீர்த்தம்' என்று கூறுவர். செங்கல்பட்டிலிருந்தும் காஞ்சியிலிருந்தும் பேருந்துமூலம் வரலாம். வேதமே மலையாதலின் வேதகிரி வேதாசலம் என்ற பெயர்களும் உண்டு. மலையுச்சியில் அருமையாகக் குடைந்தெடுக்கப் பெற்றது இக்கோயில். கருவறைச் சுவர்களில் பல அழகிய சிவபராக்கிம வரலாறு கள் செதுக்கப்பெற்றுள்ளன. பாடல் பெற்ற தலங்களுள் இங்கும் திருப்பரங்குன்றத்திலுமே பூசிக்கப்பெறும் குகைக் கோயில்கள் உள்ளன. கோயிலுக்கு வடபுறம் ஒரு கற் பாறையின்மீது உச்சி வேளையில் இரண்டு கழுகுகட்கு நெய்யும் சருக்கரைப் பொங்கலும் 'பட்சி பண்டாரம்' என் பவரால் நாடோறும் அளிக்கப்பெறுகின்றது. இராமாயண காலத்திலிருந்த சம்பாதி, சடாயு என்ற இரு கழுகுகள் கழுக்குன்றத் துச்சியானை வழிபட்டன என்றும், இக் கழுகு களின் வழித் தோன்றல்களே இப்போது வருவன என்றும் கூறப்பெறுகின்றது. இத் தலத்திற்குப் 12 கல் தொலைவில் திருப்போரூர் என்ற முருகன் தலமும் 9 கல் தொலைவில் மாமல்லபுரம் என்ற வைணவத் தலமும் உள்ளன.

கையானை'' (6.92)என்ற தாண்டகப் பதிகம் பாடி வழிபடு கின்றார்.

மூவிலைவேற் கையானை மூர்த்தி தன்னை
முதுபிணக்கா டுடையானை முதலா னானை
ஆவினிலைந் துகந்தானை அமரர் கோனை
ஆலாலம் உண்டுகந்த ஐயன் தன்னைப்
பூவினின்மேல் நான்முகனும் மாலும் போற்றப்
புணர்வரிய பெருமானைப் புனிதன் தன்னைக்
காவலனைக் கழுக்குன்றம் அமர்ந்தான் தன்னைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. (1)

என்பது முதற்பாடல். இதில் முதலிரண்டு பாடல்களே உள்ளன.

திருக்கழுக்குன்றத்தை வழிபட்ட பெருமான் திரு வான்மியூர்[8] வருகின்றார். ''விண்ட மாமலர்'' (5.82) என்ற பதிகம் பாடிப் போற்றுகின்றார்.

ஓட்டை மாடத்தில் ஒன்பது வாசலும்
காட்டில் வேவதன் முன்னம் கழலடி
நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயில்
வாட்டம் தீர்ந்திடும் வான்மியூர் ஈசனே. (9)

என்பது இப்பதிகத்தின் ஒன்பதாவது திருப்பாடல்.

---

8. வான்மியூர் (திருவாமூர்): சைதாப்பேட்டையி லிருந்து 4 கல் தொலைவிலுள்ளது. பேருந்து வழி. பாரி முனையிலிருந்து பேருந்து வசதிகள் உண்டு. வான்மீக முனிவருக்குத் திருநடனச் சேவை தந்த தலம். சப்தவிடங் கக் கணக்கில் சேராத தியாகராஜ ஸ்தலம். கருவறைச் சிவலிங்கத்தைக் காராம்பசு பால்சுரந்து திருமுழுக்காட்ட உருகியதால், மூர்த்தி அந்நிலையில் காட்சி தருகின்றார், கடற்கரைத் தலம்.

திருவான்மியூர் ஈசனை வழிபட்ட திருநாவுக்கரசர் மயிலாப்பூர்[9] வருகின்றார். காபாலீச்சரரை வழிபடுகின்றார் (பதிகம் இல்லை). மயிலையை வழிபட்ட வாகீசர் திருவொற்றியூர்[10] வருகின்றார். 'எழுதாத மறை அளித்த எழுத்தறியும் பெருமானைப்' பதிகங்கள் பாடிப் போற்றுகின்றார். "வண்டோங்கும் செங்கமலம்"(6.45) என்ற முதற் குறிப்புடைய திருத்தாண்டகம் பாடிப் போற்றியதாகக் காட்டுவர் சேக்கிழார் பெருமான்.

---

9. மயிலை (மயிலாப்பூர்): சென்னை எழும்பூரிலிருந்து 4கல் தொலைவு. நகரின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் பேருந்து வசதி உண்டு. உமாதேவியார் மயிலுருவில் சிவபெருமானைப் பூசித்துத் தமது சுயரூபம் பெற்று இறைவனைத் திருமணம் செய்து கொண்ட தலம். கோயிலின் பெயர் காபாலீச்சரம் (காபாலீசுவரர் கோயில்). சம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கிய அற்புதத் தலம். பழைய காலத்தில் திருக்கோயில் கடற்கரையோரத்தில் இருந்தது. அதாவது இப்போது சாந்தோம் மாதாக்கோயிலுள்ள இடத்திலிருந்தது. கி. பி. 16-ஆம் நூற்றாண்டில் போர்த்துக்கீசியர் கைப்பற்றிக் கோயிலைத் தகர்த்து அங்கு ஒரு கோட்டை கட்டினர். பழைய கோயில் கடற்கரையில் (இப்போது திருச்செந்தூர் கோயிலுள்ளதுபோல) மதிற் சுவர்களில் அலைவீச இருந்தது. "ஊர்திரை வேலை உலாவும் உயிர் மயிலை" (சம்பந்தர் 2.47:4) என்ற பாடற் குறிப்பால் அறியப்படும். ஆண்டில் பல நாட்கள் விழாக் கோலம் கொண்டிருக்கும் கோயில். அறுபத்து மூவர் உற்சவம் புகழ் பெற்றது. திருவள்ளுவர் வாழ்ந்த தலம். இவர் கோயில் காபாலீச்சரத்தின் வடதிசையில் ½ கல் தொலைவிலுள்ளது. வாயிலார் நாயனார் மௌன விரதம் பூண்டு அகப்பூசை செய்து முத்தி பெற்றதலம். இத்தலம் 'புன்னையங்கானல்' என்றும் வழங்கப்பெறும்.

10. ஒற்றியூர் (திருவொத்தியூர்): இருப்பூர்தி நிலையம். சென்னை-கூடூர் இருப்பூர்தி வழியில் உள்ளது. நிலையத்திலிருந்து ¼ கல் தொலைவு. தங்கசாலை, பாரிமுனையிலிருந்து அடிக்கடிப் பேருந்துகள் ஓடுகின்றன. புற்றிடங் கொண்டார், வன்மீக நாதர், படம் பக்க நாதர் - இவை

மண்ணல்லை விண்ணல்லை வலய மல்லை
மலையல்லை கடலல்லை வாயு வல்லை
எண்ணல்லை யெழுத்தல்லை எரியு மல்லை
இரவல்லை பகலல்லை யாவு மல்லை
பெண்ணல்லை ஆணல்லை பேடு மல்லை
பிறிதல்லை யானாயும் பெரியோய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை அல்லை
உணர்வரிய ஒற்றியூ ருடைய கோவே. (9)

என்பது இப்பதிகத்தின் ஒன்பதாவது தாண்டகம்.

இத்தலத்தில் பலநாள் தங்கிக் கைப்பணி செய்ததுடன் திருப்பதிகங்கள் பாடியும் போற்றியதைச் சேக்கிழார் பெருமான்,

விளங்குபெருந் திருமுன்றில்
மேவுதிருப் பணிசெய்தே
உளங்கொள்திரு விருத்தங்கள்
ஓங்குதிருக் குறுந்தொகைகள்
களங்கொள்திரு நேரிசைகள்
பலபாடிப் கைதொழுது
வளங்கொள்திரு பதியதனில்
பலநாள்கள் வைகினார்.[11]

என்று காட்டுவார். இங்குக் காட்டிய திருத்தாண்டகப் பதிகத்தைத் தவிர வேறு நான்கு பதிகங்களும் பாடியுள்ளார்.

---

மூர்த்தியின் பெயர்கள். கார்த்திகை பௌர்ணமி அடுத்த இரண்டு நாட்கள் புற்றின் மேலுள்ள கவசம் எடுத்து விடப் படும்; புற்றாகவே உள்ள மூர்த்தியைக் காணலாம். கவசம் சாத்தியிருக்கும்போது புற்றின் ஒரு சிறு பகுதி மட்டிலும் காணப்படும். சப்தவிடங்கக் கணக்கில் சேராத தியாகராஜர் தலம். சுந்தரர் சங்கிலியாரை மணந்த தலம். பட்டினத் தடிகள் போற்றிய தலம்; அவருடைய முத்தி தலம். இவர் கோயில் தேர் நிலையிலிருந்து ½ கல் தொலைவிலுள்ளது. கலிய நாயனார் தொண்டு புரிந்து முக்தியடைந்த தலம்.

11. பெ. பு. திருநாவுக்கரசு-337

"வெள்ளத்தைச் சடையில்" (4.45) என்று தொடங்கும் பதிகத்தில்,

ஒருத்திதன் தலைச்சென் றாளைக்
 கரந்திட்டான் உலகம் ஏத்த
ஒருத்திக்கு நல்ல னாகி
 மறுப்படுத் தொளித்து மீண்டே
ஒருத்தியைப் பாகம் வைத்தான்
 உணர்வினால் ஐயம் உண்ணி
ஒருத்திக்கு நல்லன் அல்லன்
 ஒற்றியூ ருடைய கோவே. (6)

என்பது ஆறாவது பாடல். "ஓம்பினேன் கூட்டை" (4.46) என்ற பதிகத்தில் இரண்டு பாடல்கள்தாம் கிடைத்துள்ளன.

மனமெனும் தோணி பற்றி
 மதியெனும் கோலை யூன்றிச்
சினமெனும் சரக்கை ஏற்றிச்
 செறிகடல் ஓடும் போது
மதனெனும் பாறை தாக்கி
 மறியும்போ தறிய வொண்ணா
துனையுனும் உணர்வை நல்காய்
 ஒற்றியூ ருடைய கோவே. (2)

என்பது இதன் இரண்டாவது பாடல்.

"செற்றுக் களிற்றுரி" (4.86) என்ற செந்தமிழ் மாலையில்,

இன்றரைக் கண்ணுடையார் எங்கும்
 இல்லை இமயம் என்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட்
 பாவைக் குக்கூ றிட்டநாள்

அன்றரைக் கண்ணும் கொடுத்து
உமையாளையும் பாகம் வைத்த
ஒன்றரைக் கண்ணன் கண்டீர்
ஒற்றி யூருறை உத்தமனே. (7)

என்ற இத் திருப்பாடல் ஏழாவது வாடா நறுமலர். இந்த மாலையின்,

செற்றுக் களிற்றுரி கொள்கின்ற
ஞான்று செருவெண் கொம்பொன்(று)
இற்றுக் கிடந்தது போலும்
இளம்பி றைபாம் பதனைச்
சுற்றிக் கிடந்தது கிம்புரி
போலச் சுடர்இ மைக்கும்
நெற்றிக்கண் மற்றதன் முத்தொக்
குமால் ஒற்றியூ ரனுக்கே. (1)

என்ற முதற் பாடலில் 'சிவபெருமான் காட்சி'யை அற்புதமாகச் சித்திரித்திருப்பது பாட்டின்பத்தையும் பக்தி உணர்ச்சியையும் தருவதாக அமைகின்றது. ''ஒற்றியூரும்'' (5.24) எனத் தொடங்கும் பதிகத்தின் முதற் பாடலே சொல் நயம் பொருள் நயம் செறிந்து காணப்படுகிறது.

ஒற்றி யூரும் ஒளிமதி பாம்பினை
ஒற்றி யூருமப் பாம்பும் அதனையே
ஒற்றி யூர ஒருசடை வைத்தவன்
ஒற்றி யூர்தொழ நம்வினை ஓயுமே. (1)

என்பது முதற் பாடல். ஒற்றியூர் பற்றிய அப்பர் பெருமானின் பதிகங்கள் யாவும் உள்ளத்தை உருக்குபவை.

ஒற்றியூர்ப் பெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு திருப்பாசூர்[12] வருகின்றார் வாகீசர் பெருமான். இங்குக்

---

12. பாசூர் (திருப்பாச்சூர்) : திருவள்ளூரிலிருந்து 4½ கல் தொலைவிலுள்ளது.

கோயில் கொண்டிருக்கும் புரமூன்றும் எரித்தருளிய பிஞ்ஞகனை ''முந்தி மூவெயில் எய்த முதல்வனார்'' (5.25) என்று தொடங்கும் குறுந்தொகைப் பதிகம் பாடிப் போற்றுகின்றார்.

முந்தி மூவெயில் எய்த முதல்வனார்
சிந்திப் பார்வினை தீர்த்திடுஞ் செல்வனார்
அந்திக் கோன்தனக் கேயருள் செய்தவர்
பந்திச் செஞ்சடைப் பாசூ ரடிகளே. (1)

என்பது பதிகத்தின் முதற் பாடலாகும். இத்திருத்தலத்து இறைவன்மீது ''விண்ணாகி நிலனாகி'' (6.83) என்ற முதற் குறிப்பினையுடைய திருத்தாண்டகமும் பாடியுள்ளார்.

வேடனாய் விசயன்தன் வியப்பைக் காண்பான்
வில்பிடித்துக் கொம்புடைய ஏனத் தின்பின்
கூடினார் உமையவளும் காலம் கொள்ளக்
கொலைப் பகழி உடன்கோத்துக் கோரப் பூசல்
ஆடினார் பெருங்கூத்துக் காளி காண
அருமறையோ டாறங்கம் ஆய்ந்து கொண்டு
பாடினார் நால்வேதம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. (5)

என்பது இப்பதிகத்தின் ஐந்தாவது தாண்டகம்.

இப்பதிகத்திலுள்ள தாண்டகச் செய்யுட்கள் படிப்போர் உள்ளத்தை உருக்குபவை.

பாசூர் பெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு திருவாலங்காட்டிற்கு[13] வருகின்றார். ''ஒன்றாவுலகனைத்தும்''

---

13. ஆலங்காடு (திருவாலங்காடு): சென்னை - அரக்கோணம் இருப்பூர்தி வழியில் திருவாலங்காடு நிலையத்திலிருந்து 3 கல் தொலைவிலுள்ளது. இத்திருத்தலம் கங்கை கொண்ட சோழன் பழையனூர் கிராமத்தை ஆலங்காடுடை மகாதேவர்க்குத் தானமாகக் கொடுத்த செய்தி

(6.78) என்ற முதற் குறிப்புடைய தாண்டகப் பதிகம் பாடி இறைவனை ஏத்துகின்றார் நாவுக்கரசர்.

அல்லும் பகலுமாய் நின்றார் தாமே;
அந்தியும் சந்தியும் ஆனார் தாமே;
சொல்லும் பொருளெலாம் ஆனார் தாமே;
தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே;
பல்லுரைக்கும் பாவெலாம் ஆனார் தாமே?
பழனை பதியாக உடையார் தாமே;
செல்லும் நெறிகாட்ட வல்லார் தாமே;
திருவாலங் காடுறையும் செல்வர் தாமே. (5)

என்பது இத்தாண்டகப் பதிகத்தின் ஐந்தாம் தாண்டகமாகும்.

இந்த அற்புதத் திருத்தலத்தைச் சாராது பல நாட்கள் போக்கினதற்கு மிகக் கவன்றுரைக்கும் தாண்டகங்கள் நெஞ்சை உருக்குவனவாகும். இத்தாண்டகம் ''தொண்டர்க்குத் தூநெறியாய்'' (6.79) என்று தொடங்குவது.

சிவனாகித் திசைமுகனாய்த் திருமா லாகிச்
செழுஞ்சுடராய்த் தீயாகி நீரு மாகிப்
புவனாகிப் புவனங்கள் அனைத்து மாகிப்
பொன்னாகி மணியாகி முத்து மாகிப்

---

இவ்வூர்ச் செப்பேடுகளில் விவரிக்கப் பெற்றுள்ளது. இத்தலத்துக் கோயில் நிலங்களிலிருந்து கள் இறக்குதல் இல்லை என்பது அக்கால வழக்கு. காளியோடு தாண்டவம் புரிந்த சிவபெருமான் அவளை 'ஊர்த்துவத் தாண்டவமாடித்' தோற்கடித்த அருமைத் தலம். காரைக்கால் அம்மையார் தலையால் நடந்து வந்த அற்புதத் தலம். கூத்தபிரான் சபைகள் ஐந்தனுள் இது இரத்தினசபை அல்லது மணி மன்று எனப்படும். பழையனூரர் ஆலங்காட்டிற்கு ¾ கல் தொலைவிலுள்ளது. இங்குக் காரைக்கால் அம்மையார் கோயில் ஒன்று உண்டு. ஊர்த்துவத் தாண்டவமூர்த்தி பங்குனி உத்திரம், மார்கழித் திருவாதிரை ஆகிய இரண்டு நாட்களில் திருவீதிக்கெழுந்தருளிப் பழையனூர் சென்று வருவார்.

**பவனாகிப் பவனங்கள் அனைத்து மாகிப்**
**பசுவேறித் திரிவானோர் பவனாய் நின்ற**
**தவனாய தலையாலங் காடன் தன்னைச்**
**சாராதே சாலநாள் போக்கி னேனே. (4)**

என்பது நான்காவது தாண்டகம். இப்பதிகம் முழுவதும் படித்துப் படித்துச் சிவாநுபவம் பெற வேண்டும். "வெள்ள நீர்ச்சடையர்" (4.68) என்ற முதற் குறிப்புடைய திரு நேரிசைச் செந்தமிழ் மாலையும் படிப்போரிடம் சிவாநு பவம் எழச் செய்யவல்லது.

**கண்ணினாற் காம வேளைக்**
**கனலெழ விழிப்பர் போலும்;**
**எண்ணிலார் புரங்கள் மூன்றும்**
**எரியுணச் சிரிப்பர் போலும்;**
**பண்ணினார் முழவம் ஓவாப்**
**பைம்பொழில் பழனை மேய**
**அண்ணலார் எம்மை ஆளும்**
**ஆலங்காட் டடிக ளாரே. (3)**

என்பது மாலையிலுள்ள மணம் மிக்க மூன்றாவது மல ராகும்.

திருவாலங்காட்டு இறைவனிடம் விடைபெற்றுக் கொண்டு திருக்காரிக்கரை[14] என்னும் தலத்தையடைகின்

---

14. காரிக்கரை: தொண்டை நாட்டுத் தலம்; இது வைப் புத்தலம். மூவர் தேவாரப் பதிகங்களிலும் தமக்கெனத் தனித்திருப்பதிகத்தைப் பெறாமல் பிற தலப்பதிகங்களிலும் பொதுப் பதிகங்களிலும் பெயரளவில்குறித்துப் போற்றப் பற்ற தலங்கள் 'தேவார வைப்புத் தலங்கள்' என வழங்கப் பெறும். காரிக்கரையைச் சேக்கிழார் 'திருக் காரிக்கரை' எனக் குறிப்பர் (பெ. பு. திருநாவுக்-343) கடங்களூர் திருக் காரிக்கரை கயிலாயம்' (சுந்தரர் 7.31:3 காண்க). இது சென்னையிலிருந்து திருப்பதிக்குப் போகும் பேருந்து வழி யிலுள்ள நாகலாபுரம் என்ற ஊரிலிருந்து 1 கல் தொலை விலுள்ள இராமகிரி என்ற ஊராகும். காரி (காலேறு) நதி யின் கரையிலுளளமையால் இப் பெயர் பெற்றது.

றார். இத்திருத்தலப் பெருமானை வழிபட்டுத் திருக் காளத்தியை[15] அடைகின்றார் அடியார் கூட்டத்துடன். பொன் முகலித் திருநதியாகத் தூய தீர்த்தத்தில் திரு முழுக் காடி திருக்காளத்தி 'மொய்வரையின் தாழ்வரையில்' சென்னியுறப் பணிந்தெழுகின்றார். மலையின் மீதேறிக் குடுமித்தேவரைப் பணிந்து 'காளத்தி மலைக் கொழுந்தை, வேதமொழி மூலத்தை' ''விற்றூணொன் றில்லாத'' (6.81) என்ற முதற் குறிப்புடைய தாண்டகப் பதிகத்தால் வழிபடு கின்றார். இரண்டு பாடல்களில் ஆழங்கால் படுவோம்.

நாரணன்காண்; நான்முகன்காண்; நால்வே தன்காண்;
ஞானப்பெருங்க டற்கோர் நாவாய் அன்ன
பூரணன்காண்; புண்ணியன்காண்; புராணன்தான் காண்;
புரிசடைமேல் புனலேற்ற புனிதன் தான்காண்;
சாரணன்காண்; சந்திரன்காண்; கதிரோன் தான்காண்;
தன்மைக்கண் தானேகாண்; தக்கோர்க் கெல்லாம்
காரணன்காண்; காளத்தி காணப் பட்ட
கணநாதன் காண்அவனென் கண்ணு ளானே. (3)

---

15. காளத்தி (ஸ்ரீகாள ஹஸ்தி): காட்டுப்பாடி-ரேணி குண்டா-கூடூர் இருப்பூர்தி வழியில் காளஹஸ்தி நிலையத்தி லிருந்து 1 கல் தொலைவு. சென்னையிலிருந்து திருப்பதி செல்லும் சில விரைவுப் பேருந்துகள் இவ்வூர் வழியாகச் செல்லுகின்றன; இவற்றில் செல்லுவதே எளிது. சிலந்தி (=ஸ்ரீ), பாம்பு (=காளம்), யானை (=ஹஸ்தி) ஆகிய மூன்றும் வழிபட்டு முக்தி அடைந்த திருத்தலம். பஞ்சபூத தலங்களுள் இது வாயு தலம். சுயம்புலிங்கம். நீண்ட பல செங்குத்தான உட்குழிந்த குடைவுகள் நிரம்பிய திருமேனி. கருவறையின் வாயிலில் கண்ணப்பர் காட்சி தருகின்றார். சிவராத்திரி விழா புகழ் பெற்றது. தேவார முதலிகள் மூவரும் வழிபட்டதலம்(பெ. பு.). 'தென் கயிலாயம்' எனக் கூறப்படும் தலங்களுள் இத்தலமும் ஒன்று.

மனத்தகத்தான்; தலைமேலான்; வாக்கி னுள்ளான்;
வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர்
இனத்தகத்தான்; இமையவர்தஞ் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலான்; இப்பாற் செம்பொன்
புனத்தகத்தான்; நறுங்கொன்றைப் போதி னுள்ளான்;
பொருப்பிடையான்; நெருப்பிடையான்; காற்றி
னுள்ளான்;
கனத்தகத்தான்; கயிலாயத் துச்சி யுள்ளான்;
காளத்தி யானவனென் கண்ணு ளானே. (5)

என்பன மூன்றாவது, ஐந்தாவது பாடல்கள். பாடல்களைப் பாடி அனுபவிக்க வேண்டும்.

காளத்தி மலைமீது இறைவனருகே நின்றருளும் அன்புருவாய கண்ணப்ப நாயனாருடைய கழலடிகளை இறைஞ்சித் தலைமீது கூப்பிய கையினராய்க் கண்ணீர் மல்கப் பணிந்து புறம்போந்து அம்மலைமேல் கைத்திருப் பணிகள் செய்து மகிழ்கின்றார். தென்கயிலை எனப் போற்றப்பெறும் திருக்காளத்தி மலைமேல் இறைவனைப் பணிந்த குறிப்பினால் வடதிசையில் உள்ள திருக்கயிலாய மலை இவர் நினைவில் எழுகின்றது; அங்கு எழுந்தருளி யிருக்கும் கயிலைநாதரின் திருக்கோலத்தைக் கண்டு களிக்க வேண்டும் என்னும் பெருவிருப்பம் உண்டாகின்றது. இதனைச் சேக்கிழார் பெருமான்,

சேணிலவு திருமலையில்
திருப்பணியா யினசெய்து
தாணுவினை அம்மலைமேல்
தாள்பணிந்த குறிப்பினால்
பேணுதிருக் கயிலைமலை
வீற்றிருந்த பெருங்கோலம்
காணுமது காதலித்தார்
கலைவாய்மைக் காவலனார். [20]

என்று காட்டுவர். இந்த விருப்பம் எவ்வாறு நிறைவேறுகின்றது என்பதை அடுத்துக் காண்போம்.

20. பெ. பு. திருநாவுக்கரசு-347

# 15. திருக்கயிலாயத் திருப்பயணம்

கயிலைக் கோலம் காண விரும்பிய திருநாவுக்கரசர் காளத்திப்பெருமானை வணங்கிப்போற்றித் தம் வடதிசை பயணத்தைத் தொடங்குகின்றார். மலை, காடு, ஆறு, நாடு முதலியவற்றைக் கடந்து திருப்பருப்பதம்[1] அடைகின்றார். ''கன்றினார்'' (4.58) என்ற முதற் குறிப்புடைய திரு நேரிசைச் செந்தமிழ் மாலையால் பருப்பதத் திறைவனை வழிபடுகின்றார். இதில்,

கையராய்க் கபால மேந்திக்
காமனைக் கண்ணாற் காய்ந்து
மெய்யராய் மேனி தன்மேல்
விளங்குவெண் ணீறு பூசி
உய்வரா யுள்கு வார்கட்
குவகைகள் பலவும் செய்து
பையரா அரையி லார்த்துப்
பருப்பதம் நோக்கி னாரே. (5)

என்பது தமிழ் மணம் கமழும் ஐந்தாவது வாடா நறுமலர். தெலுங்கு நாட்டில் பாடிய பதிகம் இது.

---

1. திருப்பருப்பதம் (ஸ்ரீசைலம்) : சென்னை-குண்டக்கல்-பம்பாய் இருப்பூர்தி வழியில் குண்டக்கல் செல்ல வேண்டும். அங்கு வண்டிமாறி பெஜவாடா - நந்தியால் - குண்டக்கல் இருப்பூர்தி வழியில் நந்தியாலை அடைதல்

பருப்பதத்தினின்றும் பயணம் செய்து கயிலையை மனத்தில் நிறுத்தி இரு பக்கங்களிலும் அடியவர்கள் தொடர்ந்துவர தெலுங்கு நாட்டினைக் கடந்து கன்னட நாட்டினை அடைகின்றார். கன்னட நாட்டில் கோகரணம்[2] (கோகரண்) என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். ஒரு பதிகத்தால் கோகரணம் மன்னிய பெருமானை வழிபடுகின்றார். இப்பதிகம் 'சந்திரனுந் தண்புனலும்' (6.49) என்ற முதற் குறிப்புடைய திருத் தாண்டகமாகும். இதில்,

பின்னுசடை மேற்பிறை சூடி னான்காண்;
பேரருளன் காண்; பிறப்பொன் றில்லா தான்காண்;
முன்னி யுலகுக்கு முன்னா னான்காண்;
மூஎயிலுஞ் செற்றுகந்த முதல்வன் றான்காண்;
இன்னவுரு வென்றறி வொண்ணா தான்காண்;
ஏழ்கடலும் ஏழுலகு மாயி னான்காண்;
மன்னும் மடந்தையோர் பாகத் தான்காண்;
மாகடல்சூழ் கோகரணம் மன்னினானே. (8)

என்பது எட்டாவது பாடல். கன்னட நாட்டில் பாடிய பதிகம் இது. பின்னர்க் கன்னட நாட்டின் எல்லையைக்

---

வேண்டும். அங்கிருந்து ஆத்மகூர் 30 கல் தொலைவு. பேருந்துப் பயணம். அங்கிருந்து காட்டுவழியாக 20 கல் மகிழ்வுந்து அல்லது மாட்டு வண்டியில் செல்லவேண்டும். பெத்தசெருவு என்ற ஏரிக்கரை சேர்ந்து அங்கிருந்து 10 கல் தொலைவு மலையேறிச் சென்றால் இத்தலத்தை அடையலாம். இப்பொழுது திருப்பதியிலிருந்து சிறப்புப் பேருந்து விடப்படுகின்றது; அதில் செல்வது எளிது. மலையின் உயரம் கடல் மட்டத்திற்குமேல் 1563 அடி உயரம் ஆகும். சம்பந்தரும் சுந்தரரும் காளத்தியிலிருந்தே பதிகம் அருளினர். அப்பர் அடிகள் நேரில் சென்று சேவித்தார்.

2. கோகரணம் : துளு நாட்டிலுள்ள தலம். ஹுப்ளி என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து 90 கல் தொலைவிலுள்ளது. பேருந்து வசதி உண்டு. வழி நெடுகத் தேக்குமரக் காடுகளும் மலைச் சரிவுகளும், இயற்கை வனப்பு மிக்க சோலைகளும் உள்ளன. தலம் மேற்குக் கடற்கரையி

கடந்து இடையிலுள்ள காடுகள், நதித்துறைகள்[3] நீண்ட மலை வழிகள், நலம் நிறைந்த காடுகள் ஆகியவற்றை யெல்லாம் கடந்து கதிரவன் தவழ்கின்ற சோலைகளை யுடைய மாளவநாட்டை அடைகின்றார். இவ்வாறு செல்கின்றவர் அரிய பாலை நிலங்களைக் கடந்து சென்று இலாடம், மத்திம பைதிரம் (மத்தியப் பிரதேசம்) ஆகிய நாடுகளைக் கடந்து கங்கையாறு வளம் சுரக்கும் வாரணாசி (காசி)யை அடைகின்றார். வாரணாசி விசுவநாதரை வழிபட்டு தம்முடன் வந்த அடியார்களை அங்கேயே தங்கும்படிப் பணித்துத் தாம்மட்டிலும் கல் நிறைந்த கொடிய மலைக்காடுகளில் நடந்து செல்கின்றார். மக்கள் நடமாட்டம் இல்லாத வானுற வோங்கிய காடுகளிலும் இலை, கிழங்கு, கனி முதலியவற்றை உட்கொள்வதையும் தவிர்த்து இரவு பகலாக இடைவிடாது நடந்து செல்கின்றார்.[4]

---

லுள்ளது. கர்நாடக மாநிலம் வட கன்னட மாவட்டத்திலுள்ளது. கயிலையிலிருந்து இராவணன் ஒரு சிவலிங்கம் கொண்டு வந்தான். மாலைக்கடன் முடித்தற் பொருட்டுத் தரையில் வைக்கக்கூடாதென்று நினைத்தபோது, விநாயகர் ஒரு சிறுவன்போல் எதிர்வந்து தமது கையில் சிவலிங்கத்தை ஏற்று, மீண்டும் விரைவில் பெற்றுக் கொள்ளாவிடில் தரையில் வைத்து விடுவதாகச் சொன்னார். சிறிது நேரமானதும் தரையில் வைத்து விட்டார். மாலைக்கடன் முடிந்ததும் இராவணன் எடுக்க முயன்றான். பெயர்க்க முடியவில்லை. இஃது இன்று ஒரு பசுவின் காது நுனியளவே தெரிகின்றபடியால் தலப் பெயர் கோகரணம் ஆயிற்று. நாமே இலிங்கத்தைத் தொட்டு வழிபடலாம். விநாயகர் திருவுருவம் நின்ற கோலமாக அழகு நிரம்பியுள்ளது. மகா சிவராத்திரியன்று திருத்தேர். பெருங்கூட்டம். இலட்சக் கணக்கான மக்கள் சேவிக்கின்றனர்.

3. கிருஷ்ணை, கோதாவரி, மகாநதி முதலிய நதிகளும் அவற்றின் துறைகளும்.

4. பெ. பு. திருநாவுக் (349-354)

இவ்வாறு காரிருளில் கடந்து செல்லுகின்ற அப்பர் பெருமானிடம் கொடிய விலங்குகள் தமது தீச் செயல்களைச் செய்ய அஞ்சுகின்றன; நஞ்சினை உமிழும் நாகப் பாம்புகள் அவற்றின் படங்களில் உள்ள மணிகளை ஏந்தி விளக்கொளி செய்கின்றன. தேவர்களும் தனியே வருவதற்கு அஞ்சும்படியான கொடிய பாலை நிலத்தில் நடந்து செல்லுகின்றார் அப்பர் பெருமான். தசை ஒழியக், கால் தேயத் தாண்டக வேந்தர் இரவு பகல் எல்லாம் நடக்கின்றார்: தாமரைப் பாதத்தின் தசைகள் எல்லாம் தேய்ந்த நிலையிலும் 'சொற்றுணை வேதியனை, சோதிவானவனை' மறக்கவில்லை; வெள்ளி மால்வரை விரிசடையப்பனை மறக்காத சிந்தனையுடன் செல்கின்றார். கால்கள் தேய்ந்தாலும், கயிலை பெருமானைக் காணவேண்டும் என்னும் பேரார்வத்தால் தமது இரண்டு கைகளையும் ஆதரவாகக்கொண்டு தாவித் தாவி ஊர்கின்றார். மேலும் ஆர்வம் மிகுதலால் பருக்கைக் கற்கள் நிரம்பிய அவ் வழியில் மார்பினால் நகர்ந்து செல்லுகின்றார். வழியின் பரற்கற்களில் கனலின் வெப்பம் தீப்போலச் சுடுகின்றது. கயிலை வேட்கை அப்பர் பெருமானை மார்பினால் உந்தச் செய்கின்றது.[5]

மார்புத் தசைகளும் உந்தி உந்திக் கெட்டு விடுகின்றன; விலா எலும்புகளும் முறிந்து விடுகின்றன; அடைதற்கரிய குறிக்கோள் ஊறிப் பதிந்துள்ள உறுதிமிக்க நாவுக்கரசரின் நெஞ்சத்தில் நேசம் மட்டிலும் குறையவில்லை. ஊன் கெட்டு உடல் கெட்டுப் போயினும் உயிர் செலுத்துகின்ற ஆர்வம் மிகுதியால் அந்த அடவிகளில் புரண்டு புரண்டு செல்லுகின்றார் செம்மை நெறியில் உயர்ந்த நாவேந்தர்.[6]

அங்கமும் உடலும் அழிந்து தேய்ந்தாலும் மன உறுதி சொற்கோவிடம் வலுத்துள்ளது. சிவனது 'சேவடி

5. ஷை (355—358)
6. ஷை (359)

நினைந்த' சிந்தனை மட்டிலுமே கயிலைநாதன்பால் செலுத்த முடிகின்றது. 'வாழ்த்த வாயும், நினைக்க மட நெஞ்சும்' மட்டிலும் இப்போது வாகீசரிடம் காணமுடி கின்றது.[7]

மனஉறுதி இருந்தாலும் உடல்வன்மை செயற்பட வில்லை. மெல்ல நகர்வதற்கு முயன்றும் அது கூடாமை யால் சொல்வேந்தர் அவ்வழியிலேயே செயலற்றுத் தங்கு கின்றார். அடியார்களின் ஆசையை நிறைவேற்றுவதற்குத் தயங்காத கயிலைநாதன் நாவேந்தர் செல்லும் வழியில் ஒரு தடாகத்தை உண்டாக்கித் தாமும் வற்கலையாடையும் சடைமுடியும்உடைய ஒரு முனிவர் வடிவத்துடன் அவர்க்கு முன்வந்து நிற்கின்றார். நின்றவர் "நீர் எங்குச் செல் கின்றீர்?" என்று கேட்கின்றார்.[8]

முனிவரின் தெய்வத் திருக்கோலமே முதலில் சொல் வேந்தரைக் கவர்ந்து விடுகின்றது. மாசில்லாத உண்மைத் தவக்கோலத்துடன் நின்ற அம் மறையவரைப் பார்த்த அளவிலேயே அவரிடம் பேசும்படியான ஒரு தெய்விக உணர்வைப் பெறுகின்றார்: பேசுகின்றார் "முனிவர் பெருமானே, வடகயிலையில் கயிலைநாதன் மலைமக ளுடன் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தை அவர்தம் அடியனான யான் கண்ணாரக் கண்டு வணங்க வேண்டு மென்ற விருப்பம் உந்தப் பெற்று வந்தேன்" என்கின்றார்.[9]

இது கேட்ட அந்தத் தெய்வ முனிவர், "திருக்கயிலை மலை தேவர்களாலும் அணுகுதற்கரியது. நிலவுலகில் வாழும் மனிதர்களால் அடைவதற்குரிய எளிமையுடைத் தன்று. நீர் வெம்மைமிக்க இக் கடுஞ்சுரத்தில் வந்து என்ன

7. ஷை 360
8. ஷை (361—62)
9. ஷை (363—364)

காரியம் செய்தீர்! அங்கம் கரைய இங்கு வந்தடைந்தது உம் அறியாமைதானா? இங்கிருந்து மீண்டு போதலே நீவிர் செய்யத்தக்கது'' என்கின்றார். இங்ஙனம் முனிவர்கோலத்துடன் வந்த இறைவன் மொழியைக் கேட்ட நாவரசர், ''என்னை ஆளும் ஈசனின் கயிலை கண்டல்லது நான் மீளேன்; மாளும் இவ்வுடல் ஈண்டே மரித்தாலும் கவலை கொள்ளேன்'' என மறுத்துரைக்கின்றார். [10]

இந்நிலையில் தெய்வ முனிவர் நாவேந்தரின் உள்ளத்தின் உறுதியை அறிந்து விண்ணிலே மறைகின்றார் மாதவர். விண்ணில் விடையவனின் குரல் கேட்கின்றது அசரீரியாக. ''ஓங்கு நாவினுக்கரசனே, எழுந்திரு'' என்பது அக்குரல். அப்பர் பெருமானின் அழிந்த உடலுறுப்பெல்லாம் முன்போல நிரம்பப்பெற்று எழில் பெற்ற திருமேனியுடன் எழுந்து நிற்கின்றார். ''என்னை ஆண்டு கொண்டருளிய அண்ணலே, விண்ணிலே மறைந்தருளிய வேத நாயகனே, கயிலையில் எழுந்தருளியிருக்கும் நின்திருக்கோலத்தை நான் கண்ணினால் கண்டு சேவிப்பதற்கு நயந்தருள் புரிவாயாக'' என்று நிலமிசை வீழ்ந்து இறைஞ்சுகின்றார். அப்பொழுது மீண்டும் அசரீரியாக, ''நீ இந்தப் பொய்கையில் மூழ்கி, நாம் கயிலையில் இருக்கின்ற திருக்கோலத்தைப் பழுதில் சீர் திருவையாற்றில் கண்டு மகிழ்வாயாக'' எனப் பணித்தருளுகின்றார்[11]

**ஐயாற்றில் கண்ட கயிலைக் காட்சி :** கயிலை நாதனின் அருள் வாக்கினைத் தலைமேற்கொண்டு நாவேந்தர் இறைவன் காட்டிய பொய்கையில் திருவைந்தெழுத்தோதி மூழ்குகின்றார். திருவையாற்றிலுள்ள ஓர் தடாகத்தில் தோன்றிக் கரையேறியதைச் சேக்கிழார் பெருமான்,

---

10. ஷை (365—366.)
11. ஷை (367—369)

ஆதி தேவர்தந் திருவருட்
பெருமையார் அறிந்தார்?
போத மாதவர் பனிமலர்ப்
பொய்கையில் மூழ்கி
மாதொர் பாகனார் மகிழுமஐ
யாற்றிலோர் வாவி
மீது தோன்றிவந் தெழுந்தனர்
உலகெலாம் வியப்ப.[12]

என்று காட்டுவர்.

எம்பிரானின் கருணை இதுவென உணர்ந்த திருநாவுக்கரசர் கண்களில் அன்பு நீர் சொரிய இறைவனை வணங்கச் செல்லுகின்றார். திருவையாற்றில் உள்ள நிற்பன நடப்பன ஆகிய எல்லா உயிர்களும் ஆணும் பெண்ணுமாய்த் துணையொடும் திகழ்தலைக் காண்கின்றார்; அவற்றைச் சக்தியும் சிவமுமாகிய தன்மையால் பணிந்து திருக்கோவிலுக்குமுன் செல்லுகின்றார். அப்பொழுது திருக்கோயில் கயிலை மால்வரையாகத் தோற்றுகின்றது. (பார்த்தனுக்குப் பரந்தாமன் காட்டிய விசுவரூப தரிசனம் போல), அங்கே திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் அன்பினால் இறைவனைப் போற்றிசைக்கும் தோத்திர ஒலியும் மறை முழக்கமும் எம்மருங்கும் முழங்குகின்றன. தேவர், தானவர், சித்தர், வித்தியாதரர். இயக்கர் முதலிய கணங்களும் தவ முனிவர்களும் எவ்விடத்தும் நெருங்கிப் போற்றுகின்றனர். அரம்பையர் முதலியோர் இசைபாடுகின்றனர். இறைவனது திருமுன்னர் அவருடைய வாகனமாகிய செங்கண்மால் விடை எதிர் நிற்கின்றது. பெரிய தேவராகிய நந்தியெம்பெருமான் பிரம்பினைக் கையிலேந்தி இறைவனது திருமுன்னிலையில் பணி செய்து உலவுகின்றார். வெள்ளி மலையின்மேல் பவள மலையொன்று மரகதக் கொடியுடன் விளங்குவது போன்று

12. பெ. பு. திருநாவுக் - 371

திருக்கயிலாயத்தில் செம்மேனி எம்மானாகில சிவ பெருமான் நீலமேனி நேரிழையாகிய உமையம்மையுடன் வீற்றிருந்தருளுகின்றார். இந்த அழகிய தெய்வக் காட்சி யைக் கண்டு மகிழும் நாவேந்தர் தலைமிசைக் கைகுவித்து நிலமிசை வீழ்ந்து பணிகின்றார்[13] "வேறாகி விண்ணாகி" (6.55) என்பது இவர் பணிந்து போற்றிய திருத்தாண்டகம். இதில்,

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி;
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி;
தேவாதி தேவர்தொழும் தேவே போற்றி;
சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி;
ஆவா அடியேனுக் கெல்லாம் போற்றி;
அல்லல் நலிய அலந்தேன் போற்றி;
காவாய் கனகத் திரளே போற்றி;
கயிலை மலையானே போற்றி போற்றி. (9)

என்பது ஒன்பதாம் திருத்தாண்டகம். இப்பதிகத்தின் பதி னொரு பாடல்களையும் சேவித்து அப்பர் பெருமான் கயிலைக் காட்சியைக் கண்டதால் பெற்ற அநுபவத்தை நாமும் பெற முயல்வோமாக.

இதுபோன்று கயிலை பற்றிய வேறு இரண்டு தாண்டகப் பதிகங்கள் உள்ளன. இவற்றுள் முன்னே காட்டியதை அப்பர் பெருமான் கயிலைச் சாரலில் பாடிய தென்றும், அடியில் காட்டப்பெறும் இரண்டும் கயிலைக் காட்சி ஐயாற்றில் கிடைத்தபின் பாடியவை என்றும் கருது வர் சிவக் கவிமணி அவர்கள். இவற்றுள் "பொறையுடைய பூமி" (6.58) என்ற முதற் குறிப்புடைய பதிகத்தில்,

13. பெ. பு. திருநாவுக். (373—381).

மைசேர்ந்த கண்ட முடையாய் போற்றி;
மாலுக்கு ஓராழி ஈந்தாய் போற்றி;
பொய்சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி;
போகாதென் னுள்ளத் திருந்தாய் போற்றி;
மெய்சேரப் பால்வெண்ணீ றாடீ போற்றி;
மிக்கார்க ளேத்தும் விளக்கே போற்றி;
கைசே ரனல்ஏந்தி யாடீ போற்றி;
கயிலை மலையானே போற்றி, போற்றி. (5)

என்பது ஐந்தாவது தாண்டகம்.

அடுத்து ''பாட்டான நல்ல'' (5.57) என்று தொடங்கும் பதிகத்தில்,

செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி;
செல்லாத செல்வமு டையாய் போற்றி;
ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி;
ஆகாய வண்ண முடையாய் போற்றி;
வெய்யாய் தணியாய் அணியாய் போற்றி;
வேளாத வேள்வி யுடையாய் போற்றி;
கையார் தழலார் விடங்கா போற்றி;
கயிலை மலையானே போற்றி போற்றி. (3)

என்பது மூன்றாவது பாடல். இந்த மூன்று பதிகங்களிலும் ஒவ்வொரு பாடலும் 'கயிலை மலையானே போற்றி போற்றி' என்று இறுகின்றது. இந்த அமைப்புபடிப்போரைப் பக்தியின் கயிலை மலைக்குக் கொண்டு போவது போன்ற உணர்ச்சியை எழுப்புகின்றது. இந்த மூன்று தாண்டகங்களிலும், 'போற்றி, போற்றி' என்று அடிதோறும் வருவதால் இவை 'போற்றித் திருத்தாண்டகம்' என்று வழங்கப் பெறுகின்றன. கயிலைக் கோலம் 'சதாசிவ தரிசனம்' என்று வழங்கப் பெறும்.

அப்பர் பெருமான் பாடிய கயிலைப் பதிகங்கள் நான்கு. இவற்றில் மூன்று தாண்டகப் பதிகங்கள். இவற்றை மேலே கண்டோம். இவற்றைத் தவிர ஒரு திருநேரிசைப் பதிகமும் கயிலைக்குரிய பதிகமாகப் பாடப்பெற்றுள்ளது. இது பாடப் பெற்ற சூழ்நிலை அறியக்கூடவில்லை. 'கனகமாவயிரம'' (4.47) என்ற முதற்குறிப்புடையது இப்பதிகம்.

கனகமா வயிர முந்து
 மாமணி கயிலை கண்டும்
உனகனாய் அரக்க னோடி
 எடுத்தலும் உமையாள் அஞ்ச
அனகனாய் நின்ற ஈசன்
 ஊன்றலும் அலறி வீழ்ந்தான்
மனகனாய் ஊன்றி னானேல்
 மறித்துநோக் கில்லை யள்றே. (1)

என்பது இப்பதிகத்தின் முதற் பாடல், இராவணனுக்கு அருளும் திறத்தைத் தமது ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் பாடும் மரபுடைய அப்பர் பெருமான் கயிலைக்குரிய 'திருநேரிசை' முழுதும் இராவணனைக் காலால் ஊன்றிய நிகழ்ச்சி ஒன்றையே வைத்துப் பாடியுள்ளார். சேக்கிழார் இத் திருநேரிசை குறித்து இடம் சூழல் இவை பற்றிப் பாடவில்லை.

இங்ஙனம் தூய தொண்டராகிய நாவேந்தர் கயிலைத் திருக்கோலத்தைக் கண்டு மகிழும் நிலையில் கயிலைநாதன் தாம் காட்டிய கயிலைக் காட்சியை மாற்றித் திருவையாற்றமைந்த பழைய நிலையினைப் புலப்படுத்தியருளுகின்றார். இந்நிலையில் அப்பர் பெரிதும் வருந்தி ஒருவாறு தெளிவு பெறுகின்றார். கயிலைநாதன் அருளால் தாம் கண்ட கயிலைக் காட்சியை உலக மக்கள் உணர்ந்து மகிழும் வண்ணம் 'மாதர் பிறைக் கண்ணியானை' (4.3) என்ற பதிகத்தைப் பாடுகின்றார்.

மாதர்பிறைக் கண்ணி யானை
மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப்
புகுவா ரவர்பின்பு புகுவேன்
யாதும் சுவடு படாமல்
ஐயா றடைகின்ற போது
காதல் மடப்பிடி யோடும்
களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன். (1)

என்பது இப்பதிகத்தின் முதற் பாடல். கயிலைக் கோலங் காட்டிய ஐயாற்றிறைவனைத் தொழுது திருத்தாண்டகம் திருக்குறுந்தொகை, திருநேரிசை, திருவிருத்தம் முதலிய சொன்மாலைகளைப் பாடித் திருத்தொண்டு செய்து அங்கு அமர்ந்திருக்கின்றார்.

நாவேந்தர் திருக்காளத்தி மலையில் வீற்றிருந்தருளிய இறைவனை வழிபட்டபோது திருக்கயிலாய மலையைக் கண்டு சேவிக்க வேண்டும் என்ற பெருவேட்கை அவருள்ளத்தில் எழுந்தது என்பதை, அவர் காளத்தி ஈசனைப் பரவிப் போற்றின திருத்தாண்டகத்தில்,

கணத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தியான் அவனென் கண்ணு ளானே. (6.8:5)

எனக் குறிப்பிடுதால் உணரப்படும். இந்த வேட்கையுந்த அடிகள் காடு மலை நாடு முதலியவற்றைக் கடந்து செல்லும் வழியில் கயிலைநாதன் தவமுனிவர் வடிவுடன் தோன்றிப் பின்னர் மறைந்து அசரீரியாகத் தடாகத்தில் மூழ்கித் தம்மைக் காணுமாறு கூறி அருள்புரிந்தனர் என்ற செய்தி,

**வேறாகி விண்ணாகி நின்றாய் போற்றி;**
**மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி! (*6.55:1*)**

*என்று தாம் பாடிய போற்றித் திருத்தாண்டகத் தொடராலும்,*

**'வேற்று மாகிவிண் ணாகிநின்**
**றார்'மொழி விரும்பி**
**ஆற்றல் பெற்றஅவ் வண்ணலார்**
**அஞ்செழுத் தோதிப்**
**பாற்ற டம்புனற் பொய்கையில்**
**மூழ்கினார் பணியால். (*370*)**

*என்ற சேக்கிழார் வாக்கினாலும் தெளிவாகும். தவமுனிவராய் வந்த கயிலைநாதன் பணித்தவண்ணம் அவர் காட்டிய பொய்கையில் மூழ்கினமையால் காற்சுவடுபட நடக்காமல் தாம் திருவையாறு அடைந்தமையும், அங்கு வாழும் எல்லா உயிர்களும் சத்தியும் சிவமும் ஆக விளங்கிய தெய்வக் காட்சியைக் கண்டமையும் ஆகிய அற்புத நிகழ்ச்சியை,*

**ஏடுமதிக் கண்ணி யானை**
**ஏந்திழை யாளொடும் பாடிக்**
**காடொடு நாடும் மலையும்**
**கைதொழு நாடா வருவேன் (*4,3:5*)**

*எனவும்,*

**யாதும் சுவடு படாமல்**
**ஐயா றடைகின்ற போது**
**காதல் மடப்பிடி யோடும்**
**களிறு வருவன கண்டேன்**
**கண்டேன் அவர்திருப் பாதம்**
**கண்டறி யாதன கண்டேன் (*4.3:1*)**

*எனவும் வருந் தொடர்களால் நன்கு புலப்படுத்துகின்றார் நாவேந்தர்.*

**கயிலைக் காட்சிகள்:** இங்கு இரண்டு அற்புதக் காட்சிகள் சித்திரிக்கப்படுகின்றன. ஒன்று : வாகீசர் திருவையாற்றில் வாவியின் கரையேறியபோது நிற்பனவும் நடப்பனவும் யாவும் சிவசக்தியாகத் துணையொடு தோன்றிய காட்சி. 'ஐயாறடைகின்றபோது கண்டறியாதன கண்டேன்' என்று பாடும் பதிகக் கருத்தையொட்டியே சேக்கிழார் பெருமான் இக்காட்சியைச் சித்திரிக்கின்றார். அப்பர் பெருமானின் அநுபூதிச் சிறப்பும் கயிலைநாதனின் பேரருளும் ஒருங்கே உடையது இத் தெய்வக் காட்சி.

இரண்டு ; இக்காட்சி சிவனது கயிலைக் கோலம் பற்றியது. இமயத்தில் சிவபெருமானின் ஓலக்கச் சிறப்பை சித்திரித்துக் காட்டுவது. 'ஆளும் நாயகன் கயிலை இருக்கை' காணவே ஆசைப்படுகின்றார் அப்பர். காளத்தியில் அரும்பிய இவ்வாசை வாக்கின் மன்னரை இமயம்வரை வழியிட்டுச் செல்லுகின்றது. ஊனும் உடலும் நைந்த நிலையில் கூட கயிலைநாதன் மாதவ முனியாகி விளையாடுகின்றான். 'கயிலை இருக்கையை' ஐயாற்றில் காணுமாறு பணிக்கின்றான். இறைவன் காட்டிய பொய்கையில் மூழ்கி ஐயாற்று வாவியில் எழுந்த அப்பரிடம் முதற் காட்சி 'சிவ சக்திக்' காட்சியாகத் தென்படுகின்றது. ஐயாற்றுக் கோயிலை அப்பர் அடைந்தபோதுதான் இரண்டாவது அற்புதம் அவருக்குக் கிடைக்கின்றது. 'கயிலைக் கோலம்' காண அவாவியவருக்குக் கிடைக்கும் காட்சி இதுவாகும்.

**தத்துவம் :** கண்ணால் காணும் உலகின் 'பன்மை யோனிகளில்' இறைவன் உடனாகி நின்ற காட்சி முதற் காட்சி; இறைவன் காணப்படும் உலகினோடு உடனாகி நிற்பதேயல்லாமல் தனித்து வேறாகியும் நிற்பான்; இந்தக் காட்சியே இரண்டாவது காட்சி. இரண்டாவதாகக் காணப்பெறும் இக் கோயிற் காட்சியே 'கயிலைக் கோலம்' பற்றியதாகும்.

# 16. திருப்பூந்துருத்தி நிகழ்ச்சிகள்

திருவையாற்றிறைவன்[1] தானே கயிலைக் காட்சி நல்கினான் என்று கருதிய நாவுக்கரசர் அத்தலத்தில் தங்கி

---

1. ஐயாறு (திருவையாறு) : தஞ்சையிலிருந்து வடதிசையில் 7 கல் தொலைவு. பேருந்து வசதி உண்டு. இத்தலம் செல்லுங்கால் பேருந்து 5 ஆறுகளையும் பாலத்தின் மீது கடப்பதைக் காணலாம். கயிலை காணச் சென்ற அப்பர் இவ்வூர்க் குளத்தில் எழுந்து கயிலாயக் காட்சி கண்டனர். இதன் நினைவாக தென் கயிலாயம் என்ற உட்கோயிலில் ஆடி அமாவாசையில் உற்சவம் நடைபெறுகின்றது. சுந்தரமூர்த்தி சுவாமிக்கு வெள்ளக் காலத்தில் ஆற்றில் மணல் வழி தோன்றி சேவித்த தலம். சித்திரைப் பெருவிழாவில் இத்தலத்து இறைவன் தன்னைத்தானே பூசித்த நிகழ்ச்சி ஆன்ம பூசை என்ற உற்சவமாக நடைபெறுகின்றது. இப்பெருவிழாவின் இறுதியில் சப்த ஸ்தான உற்சவம் (ஏழூர்த் திருவலம்) மிகு புகழ் வாய்ந்தது. நந்திகேசுவரரும் அவர் தேவியாரும் வெட்டிவேர்ப் பல்லக்கில் முன்செல்ல ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும், அழகிய கண்ணாடிப் பல்லக்கில் திருப்பழனம், திருச்சோற்றுத் துறை, திருவேதிகுடி, திருக் கண்டியூர், திருப்பூந்துருத்தி, திரு நெய்த்தானம் ஆகிய 6 தலங்கட்குச் சென்று, அங்குள்ள மூர்த்திகளோடெழுந்தருளி மீண்டும் திருவையாறு அடையும்போது ஏழு மூர்த்திகளும் ஒருங்கே காட்சியருளி, கோயில் பிரகாரத்தில் மௌனவலம் வருவது 30 மணி நேரம் நடைபெறும் நிகழ்ச்சியாகும். ஆற்றிலிருந்து தெற்குச் சந்நிதிக்குள் நுழையும்போது ஆட்கொண்டார் சந்நிதியும் குங்குலியக் குழியும் உள்ளன. அறம் வளர்த்த

ஐயாறப்பனைப் பல செந்தமிழ் மாலைகளால்[2] வழிபடு கின்றார். சென்ற கட்டுரையில் 'மாதர் பிறைக் கண்ணி யானை' (4:3) திருப்பதிகத்தைக் சேவித்தோம், அது திருக் கயிலாயக் காட்சிக்கு பின்னர்ப் பாடப்பெற்றது. இனி வழி படுவது திருவையாற்றிறைவனையே. 'ஆரார் திரிபுரம்' (6.37) என்ற திருத்தாண்டகத்தால் வழிபாடு தொடங்கு கின்றார் வாகீசப் பெருமான். இதில்,

விண்ணோர் தலைவனே என்றேன் நானே;
விளங்கும் இளம்பிறையா யென்றேன் நானே;
எண்ணா ரெயிலெரித்தா யென்றேன் நானே;
யேகம்பம் மேயானே யென்றேன் நானே;
பண்ணார் மறைபாடி யென்றேன் நானே;
பசுபதீ! பால்நீற்றாய்! என்றேன் நானே;
அண்ணா! ஐயாறனே! என்றேன் நானே;
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. (7)

என்பது ஏழாவது தாண்டகம். 'என்றென்றே நான் அரற்றி நைகின்றேன்' என்று பாடல்தோறும் இறுவதால், பாட்டைப் பாடும்போது நாமும் உள்ளம் உருகி நைந்து அப்பர் பெருமானின் அநுபவத்தைப் பெறுகின்றோம்.

இதனையடுத்து "ஓசையொலி யெலாம்" (6.38) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ் தாண்டக மாலையால் வழி படுகின்றார் திருவையாறகலாத செம்பொற் சோதியை. இதில்,

ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே;
உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே;
வாச மலரெலாம் ஆனாய் நீயே;
மலையான் மருகனாய் நின்றாய் நீயே;

---

நாயகியின் மூலத்தானத் திருமேனி மிகக் கம்பீரமானது. இசை மன்னர் தியாகராஜர் கோயில் ஆற்றங்கரையி லுள்ளது. தமிழ் - வடமொழிக் கல்லூரி இங்குள்ளது.

2. திருத்தாண்டகங்கள், திருக்குறுந் தொகைகள், திரு நேரிசைகள், திருவிருத்தங்கள் - என்ற மாலைகள்.

**பேசப் பெரிதும் இனியாய் நீயே;**
**பிரானாய் அடியென்மேல் வைத்தாய் நீயே;**
**தேச விளக்கெலாம் ஆனாய் நீயே;**
**திருவையா றகலாத செம்பொற் சோதீ! (1)**

என்பது தமிழ் மணங் கமழும் முதல் திருத்தாண்டக வாடா நறுமலர்.

இவர் வழிபடப் பயன்படுத்திய இரண்டு திருக்குறுந் தொகை மாலைகளையும் காண்போம். முதல் மாலை **'சிந்தை வாய்தல்' (5.27)** என்ற முதற் குறிப்புடையது. இதில்,

**நெஞ்சம் என்பதோர் நீள்கயந் தன்னுளே**
**வஞ்சம் என்பதோர் வான்சுழிப் பட்டுநான்**
**துஞ்சும் போழ்துநின் நாமத் திரு எழுத்(து)**
**அஞ்சு தோன்ற அருளும் ஐயாறரே. (3)**

என்பது மூன்றாவது பாடல். அடுத்துப் பாடி வழிபட்டது **''சிந்தை வண்ணத்த'' (5.28)** என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந்தொகை மாலையால் இதில்,

**விரும்பும் வண்ணமும் வேதத்தின் வண்ணமும்**
**கரும்பின் இன்மொழிக் காரிகை வண்ணமும்**
**விரும்பு வார்வினை தீர்த்திடும் வண்ணமும்**
**அரும்பின் வண்ணமும் மாவர் ஐயாறரே. (7)**

என்பது தமிழ் மணங் கமழும் ஏழாவது நறுமலர்.

இவற்றையடுத்தவை இப்பெருமான் ஐயாறரின்மீது சூட்டிய மூன்று திருநேரிசைச் செந்தமிழ் மாலைகள். இவற்றுள் முதலாவது **'கங்கையைச்' (4 38)** என்ற முதற் குறிப்புடைய திருமாலை. இதில்,

பத்தர்கட் கருளும் வைத்தார்;
பாய்விடை ஏற வைத்தார்;
சித்தத்தை யொன்ற வைத்தார்;
சிவமதே நினைய வைத்தார்;
முத்தியை முற்ற வைத்தார்;
முறைமுறை நெறிகள் வைத்தார்;
அத்தியின் உரிவை வைத்தார்;
ஐயன்ஐ யாற னாரே (7)

என்பது *நறுமணங் கமழும்* ஏழாவது *வாடா நறுமலர்*. *இதனையடுத்த செந்தமிழ் மாலை* "குண்டனாய்" (4.39) *என்ற முதற் குறிப்புடையது. இதில்,*

பாசிப்பல் மாசு மெய்யர்
பலமிலாச் சமண ரோடு
நேசத்தால் இருந்த நெஞ்சை
நீக்குமா றறிய மாட்டேன்;
தேசத்தார் பரவி ஏத்துந்
திருஐயா றமர்ந்த தேனை
வாசத்தார் வணங்க வல்லார்
வல்வினை மாயு மன்றே. (4)

என்பது *நறுமணங் கமழும்* நான்காவது *வாடாத தமிழ் மலர்.* இதில் மூன்றாவது *தமிழ் மாலை* "தானலாது" (5.40) *என்ற முதற்குறிப்புடையது,* இதில்,

சகமலா தடிமை இல்லை;
தானலால் துணையு மில்லை;
நகமெலாந் தேயக் கையால்
நாண்மலர் தொழுது தூவி
முகமெலாம் கண்ணீர் மல்க
முன்பணிந் தேத்தும் தொண்டர்
அகமலாற் கோயில் இல்லை
ஐயன்ஐ யாற னார்க்கே. (8)

என்பது எட்டாவது *வாடா நறுமலர்,*

இவற்றையடுத்து மூன்று திருவிருத்தச் செந்தமிழ் மாலைகளைத் தொடுத்து ஐயன் ஐயாறனாரைத் தொழுது எத்துகின்றார். இவற்றுள் 'குறுவித்தவா' (4.91) என்ற முதற் குறிப்புடையது முதலாவது மாலை. இதில்,

இழிவித்த வாறிட்ட நோய்வினை
காட்டி இடர்ப்படுத்துக்
கழிவித்த வாகட்ட நோய்வினை
தீர்ப்பான் கலந்தருளி
அழிவித்த வாறடி யேனைஐ
யாறன் அடிமைக்குளே
தொழுவித்த வாதொண்ட னேனைத்தன்
பொன்னடிக் கீழெனையே. (5)

என்பது தமிழ்மணங் கமழும் ஐந்தாவது வாடா நறுமலர். இரண்டாவது திருவிருத்தச் செந்தமிழ் மாலை 'சிந்திப் பரிபன்' (4.92) என்ற முதற் குறிப்புடையது. இதில்,

இருள்தரு துன்பப் படல
மறைப்பமெய்ஞ் ஞானமென்னுங்
பொருள்தரு கண்ணிழந் துள்பொருள்
நாடிப் புகலிழந்த
குருடரும் தம்மைப் பரவக்
கொடுநரகக் குழிநின்று
அருள்தரு கைகொடுத் தேற்றும்ஐ
யாறன் அடித்தலமே. (4)

என்பது தமிழ்மணங் கமழும் நான்காவது வாடா நறுமலர். இம்மாலை பெரியது; இருபது மலர்கள் இதில் உள்ளன.[3] திருவையாற்றுப் பதிகங்களில் 'மலர்ச்சேவடி என்மேல் வைத்தாய்' (தாண்டகம்) என்றெல்லாம் பாடுவதோடு,

3. சில படிகளில் 11-20 பாடல்கள் தனிப் பதிகமாகக் காணப்பெறுகின்றன.

'செறிவித்தவாறு தொண்டனேனைத் தன் பொன்னடிக்கீழ் என்னையே' (நேரிசை) என்றும் பாடியுள்ளார்; 'ஐயாறன் அடித்தலமே' என்றும், 'கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்' என்றும் பாடும் இடங்களில் எல்லாம் கயிலைநாதனின் திருவடிச் சிறப்புகளே அதிகம் சிந்திக்கப்படுகின்றன.

'அந்திவட்ட' (4.98) என்று தொடங்கும் செந்தமிழ்த் திருவிருத்த மாலையில் இரண்டே மலர்கள்தாம் உள்ளன. இதில்,

அந்திவட் டத்திங்கட் கண்ணியன்
ஐயா றமர்ந்துவந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின்
றானையும் பொய்யென்பனோ,
சிந்திவட் டச்சடைக் கற்றை
யம்பலச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை
வளாவிய நம்பனையே? (1)

என்பது முதல் மலர். இதுவும் இறைவனின் திருவடிகளைப் பலவாறு போற்றுகின்றது.

இதனை அடுத்த செந்தமிழ் மாலை 'விடகிலேன்' (4.13) என்ற முதற் குறைப்புடை பழந்தக்க ராகம் பண்ணுடைய மாலையாகும். இதில்,

நீரானே தீயானே நெதியானே கதியானே
ஊரானே உலகானே உடலானே உயிரானே
பேரானே பிறைசூடி பிணிதீர்க்கும் பெருமானென் (று)
ஆராத ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. (6)

என்து ஆறாவது நறுமணம் கமழும் தமிழ்மலர். பாடல்கள் யாவும் தாம் ஐயாறமர்ந்த தேனுக்குத் தாம் அடிமையாகி உய்ந்தமையைப் பன்னி பன்னி உரைக்கின்றார்.

இங்ஙனம் இறைவனுக்குப் பல்வேறு தமிழ் மாலைகளைச் சாத்தி மகிழ்ந்திருந்த நாவுக்கரசர் திருநெய்த்தானம்[4] என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். ஐந்து செந்தமிழ் மாலைகளால் நெய்த்தானத் தீசனைச் சேவிக்கின்றார். இவற்றுள் 'காலனை வீழ' (4.37) என்று தொடங்கும் செந்தமிழ்த் திருநேரிசை மாலை ஒன்று. இதில்,

பந்தித்த சடையின் மேலே
பாய்புன லதனை வைத்து
அந்திப்போ தனலும் ஆடி
அடிகள்ஐ யாறு புக்கார்;
வந்திப்பார் வணங்கி நின்று
வாழ்த்துவார் வாயி னுள்ளார்;
சிந்திப்பார் சிந்தை யுள்ளார்
திருந்துநெய்த் தான னாரே. (8)

என்பது தமிழ் மணம் கமழும் எட்டாவது வாடா நறுமலர். அடுத்து வழிபடப் பயன்படுத்திய திருவிருத்தச் செந்தமிழ் மாலை "பாரிடம் சாடிய" (4.89) என்ற முதற் குறிப்பினை யுடையது. இதில்,

விரித்த சடையினன் விண்ணவர்
கோன்விட முண்டகண்டன்
உரித்த கரியுரி மூடியொன்
னார்மதில் மூன்றுடனே
எரித்த சிலையினன் ஈடழி
யாதென்னை யாண்டுகொண்ட
தரித்த உமையவ ளோடுநெய்த்
தானத் திருந்தவனே. (8)

என்பது எட்டாவது நறுந்தமிழ் மலர்.

---

4. நெய்த்தானம் (தில்லை ஸ்தானம்) : தஞ்சையிலிருந்து 10 கல் தொலைவு. பேருந்து வசதியுண்டு. சப்த ஸ்தானங்களுள் ஒன்று.

*இதனையடுத்தது* 'கொல்லியான்' (*5.34*) *என்ற முதற் குறிப்பினையுடைய திருக்குறுந்தொகைச் செந்தமிழ் மாலை. இதில்,*

கொள்ளித் தீயெரி வீசிக் கொடியதோர்
கள்ளிக் காட்டிடை யாடுவர் காண்மினோ
தெள்ளித் தேறித் தெளிந்துநெய்த் தானனை
உள்ளத் தால்தொழு வாருமபர் வாணரே. (*7*)

*என்பது ஏழாவது நறுமணம் கமழும் செந்தமிழ் மலர். இதனையடுத்துச் சூட்டிய மாலைகள் இரண்டும் செந்தமிழ் நயங்கொழிக்கும் திருத்தாண்டக மாலைகள்.*

*முதல் தாண்டகமாலை* "வகையெலாம்" (*6,41*) *என்ற முதற் குறிப்பினை யுடையது.*

அல்லாய்ப் பகலானாய் நீயே என்றும்
ஆதிக் கயிலாயன் நீயே என்றும்
கல்லாலம் அமர்ந்தாயும் நீயே என்றும்
காளத்திக் கற்பகமும் நீயே என்றும்
சொல்லாய்ப் பொருளானாய் நீயே என்றும்
சோற்றுத்துறை யுறைவாய் நீயே என்றும்
செல்வாய்த் திருவானாய் நீயே என்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. (*3*)

*என்பது மூன்றாவது தமிழ்மணம் கமழும் வாடா நறுமலர். இப்பதிகம் முழுவதும் வேற்றுத் தலங்களின் ஈசனை நினைந்தவாறு பாடுகின்றார் வாகீசர். இவர்களனைவரும் தனது நெஞ்சில் உள்ளான் என்று கூறி மகிழ்வர்.*

*இரண்டாவது தாண்டக மாலை* "மெய்த்தானத்" (*6.42*) *என்ற முதற் குறிப்புடையது. இதில்,*

மிறைபடுமிவ் வுடல்வாழ்வை மெய்யென் றெண்ணி
வினையிலே கிடந்தமழுந்தி வியவேல் நெஞ்சே!
குறையுடையார் மனத்துளான் குமரன் தாதை
கூத்தாடுங் குணமுடையான கொலைவேற் கையான்

அறைகழலும் திருவடிமேல் சிலம்பும் ஆர்ப்ப
அவனிதலம் பெயரவரும் நட்டம் நின்ற
நிறைவுடையா னிடமாம்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கால் உய்ய லாமே. (6)

என்பது ஆறாவது நறுமணம்கமழும் தமிழ் மலர். 'கயிலைக் கோலம்' கண்டபின் நெய்தானம் வந்து பாடுகின்ற இப் பதிகங்களில் அப்பரது 'கயிலை சிந்தனை' அதிகம் ஓடுவது தெரிகின்றது. திருவையாறு அகலாத செம் பொற்சோதி யின் நினைவும் அவர் நெஞ்சைவிட்டு அகலவில்லை. 'கழலடி இரண்டும் என் மேலவாய் இருக்கப்பெற்றேன்', 'நினையுமா நினைக்சின்றேனே' என்ற தொடர்களிலெல்லாம் இந்த சிந்தனை நிழலிடுவதைக் காணலாம்.

நெய்த்தானம் மேவிய ஈசனிடம் விடைபெற்றுக் கொண்டு திருமழபாடி[5] வருகின்றார் திருநாவுக்கரசர். 'நீறேறு திருமேனி' (6.39) என்ற முதற் குறிப்புடைய செந் தமிழ்த் தாண்டக மாலையால் மழபாடி மன்னும் மணாளனை வழுத்துகின்றார். இதில்,

நீராகி நெடுவரைக ளானான் கண்டாய்;
நிழலாகி நீள்விசும்பு மானான் கண்டாய்;
பாராகிப் பெளவமே ழானான் கண்டாய்;
பகலாகி வானாகி நின்றான் கண்டாய்;

---

5. மழபாடி: விருத்தாசலம்—திருச்சி இருப்பூர்தி வழி யிலுள்ள புள்ளம்பாடி நிலையத்திலிருந்து 10 கல் தொலைவு. திருவையாற்றிலிருந்து 4 கல் தொலைவு. கொள்ளிட நதியைக் கடக்க வேண்டும். பங்குனி உத்தரத் தில் திருநந்திதேவர் திருக்கல்யாணத்தைத் திருவையாற்றி லிருந்து ஐயாறப்பன் எழுந்தருளி வந்து நடத்தி வைக்கின் றார். திருநந்தி தேவரும் அவரது தேவியாரும் வெட்டி வேர்ச் சிவிகையில் முன் செல்லப் பின்னணியில் ஐயா றப்பரும் அறம் வளர்த்த நாயகியும் அழகிய கண்ணாடிச் சிவிகையில் எழுந்தருளி ஏழூர் வலம் வருவதுதான் மிகு புகழ் வாய்ந்த சப்த ஸ்தானப் பெருவிழா.

ஆரேனும் தன்னடியார்க் கன்பன் கண்டாய்;
அணுவாகி ஆதியாய் நின்றான் கண்டாய்;
வாரார்ந்த வனமுலையாள் பங்கன் கண்டாய்;
மழபாடி மன்னும் மணாளன் தானே. (7)

என்பது ஏழாவது தமிழ் மணம் கமழும் வாடாத நறுமலர். இதனையடுத்து 'அலையடுத்து' (6.40) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்த் திருத்தாண்டக மாலையால் சேவிக்கின்றார். இதில்.

சிரமேற்ற நான்முகன்றன் தலையும் மற்றைத்
திருமால்தன் செழுந்தலையும் பொன்றச் சிந்தி
உரமேற்ற இரவிபல் தகர்த்துச் சோமன்
ஒளிர்கலைகள் படவுழக்கி உயிரை நல்கி
நரையேற்ற விடையேறி நாகம் பூண்ட
நம்பியையே மறைநான்கும் ஓல மிட்டு
வரமேற்கும் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே (5)

ான்பது ஐந்தாவது நறுமலர். இம் மாலையில் ஏழு மலர்களே உள்ளன. 'மழபாடி மாணிக்கத்தை'ச் சோதிமிக்க பொன்னாகவும், மணியாகவும், முத்தாகவும், வயிரத் தூணாகவும் காண்கின்ற அப்பர் பெருமானின் பார்வை நம் நெஞ்சை இன்புறுத்துகின்றது.

திருமழபாடி இறைவனிடம் விடைபெற்றுக்கொண்டு திருபூந்துருத்தி[6] வருகின்றார். பூந்துருத்திப் பெருமானைத்

---

6. பூந்துருத்தி (திருப்பூந்துருத்தி) : தஞ்சையிலிருந்து 8 கல் தொலைவு. பேருந்து வசதி உண்டு. சப்தஸ்தான தலங்களுள் ஒன்று. அப்பர் சுவாமிகள் இங்குத் திருமடம் அமைத்துப் பல பொதுப் பதிகங்களை அருளினர். இத் திருமடச் சிதைவு இன்றும் உள்ளது. பாண்டி நாட்டில் சைவம் பரம்பித் திரும்பிய சம்பந்தர் இம்மடத்தில் தங்கி இருவரும் அளவளாவி மகிழ்ந்திருந்தனர்.

திருத்தாண்டகம், திருக்குறுந்தொகை, திருவிருத்தம் ஆகிய மூன்று பதிகங்களால் பாடிப் போற்றுகின்றார். முதலில் 'நில்லாத நீர்சடைமேல்' (6.43) என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்த் திருத்தாண்டக மாலைகொண்டு சேவிக்கின்றார். இதில்,

எனக்கென்றும் இனியானை எம்மான் தன்னை
எழிலாரும் ஏகம்பம் மேயான் தன்னை
மனக்கென்றும் வருவானை வஞ்சர் நெஞ்சில்
நில்லானை நின்றியூர் மேயான் தன்னைத்
தனக்கென்றும் அடியேனை யாளாக் கொண்ட
சங்கரனைச் சங்கவார் குழையான் தன்னைப்
புனக்கொன்றைத் தாரணிந்த புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்தி கண்டேன் நானே. (3)

என்பது தமிழ் மணம் கமழும் மூன்றாவது வாடா நறுமலர். இப் பதிகத்தில் தம் விருப்பம் அனைத்தையும் ஒரு சேரத் தொகுத்துப் பாடியுள்ளார். பூந்துருத்தி நாதனான 'பொய்யிலியைக்' கண்ட மகிழ்ச்சியில் பாடிய அற்புதப் பதிகம் இது. 'கண்டேன் நானே' என்று பாடல்தோறும் முடிவதால் இதனை அப்பரின் 'கண்டபத்து' எனச் சொல்லத் தட்டில்லை.

இதனை அடுத்துப் பாடியது 'கொடிகொள்' (5,32) என்ற முதற்குறிப்புடைய திருக்குறுந்தொகைச் செந்தமிழ் மாலை. இதில்.

ஒருத்த னாய்உல கேழுந்தொழ நின்று
பருத்த பாம்பொடு பான்மதி கங்கையும்
பொருத்த னாகிலும் பூந்துருத் திந்நகர்த்
திருத்தன் சேவடிக் கீழ்நாம் இருப்பதே. (7)

என்பது ஏழாவது வாடாத தமிழ் மலர். இம் மாலை 'சேவடிக்கீழ் நாம் இருப்பதே' என்ற தொடரால் நடை

பெறுகின்றது. இதனைச் சேக்கிழார் பெருமான் 'இருப்போம் திருவடிக்கீழ்' என்று குறிப்பர்.[7]

மூன்றாவதாக அப்பர் பெருமான் 'பூந்துருத்திப் பொய் யிலியை' ''மாலினைமாலு'' (4.88) என்ற திருவிருத்தச் செந்தமிழ் மாலையால் போற்றுவர். இதில்,

அந்தியை நல்ல மதியினை
யார்க்கும் அறிவரிய
செந்தியை வாட்டும்செம் பொன்னினைச்
சென்றடைந் தேனுடைய
புந்தியைப் புக்க அறிவினைப்
பூந்துருத் தியுறையும்
நந்தியை நங்கள் பிரான்றனை
நானடி போற்றுவதே. (9)

என்பது தமிழ் மணம் கமழும் ஒன்பதாவது வாடா நறுமலர். இப்பதிகமும் 'அடி போற்றுவதே' என்றுதான் முடிகின்றது. இதனைச் சேக்கிழார் பெருமான் 'நாம் அடி போற்றுவது' என்னும் திருவிருத்தத்தைப் 'பொங்கு தமிழ்ச் சொல் விருத்தம்' என்று குறிப்பிடுவர்[7].

திருப்பூந்துருத்திபற்றிய மூன்று பதிகங்களிலும் அவர் இத்திருப்பதியைக் காணவரும் காதலோடு கூடிய வேகம் தெரிகின்றது. இக்குறிப்பிட்ட மூன்று பதிகங்களிலும் முழுப் பார்வை செலுத்தி அவர்தம் வரலாற்றையும் கூர்ந்து நோக்கினால் ஒரு பேருண்மை புலனாகும். ஐயாறு, பூந்துருத்தி, புகலூர் முதலான இடங்களில் 'அடிக்கீழ் இருத்தினையே', 'இருப்போம் திருவடிக் கீழ்', 'உன்னடிக்கே போதுகின்றேன்' என்று பாடுவதைக் காணலாம். இவையெல்லாம் அப்பர் பெருமானின் வாழ்வில் அற்புதங்கள் நிகழ்ந்த தலங்கள்; ஞான அநுபவங்கள் சுடர்விட்ட இடங்

7. பெ. பு: திருநாவுக். 388
8. ஷை 389.

கள்; மடம் கட்டிக் கொண்டும், சில காலம் தங்கியும், மறக்க முடியாமல், பிரிந்து வர முடியாமல், சிவாநுபவத்துடன் பாடிய பாசுரங்களில்தான் 'அடிக்கீழ் இருப்போம்' முதலான திருச் சொற்களால் இப்பெருமான் பாடியதை அறிகின்றோம்.

பின்னர் இத்தலத்திலேயே தங்கியிருந்து இறைவனை வழிபடும் ஆராக் காதலால் திங்களும் ஞாயிறும் தெரியும்படி வானுறவோங்கிய திருமடம் ஒன்றை அமைத்துக் கொண்டு 'பூந்துருத்தி மேயானை' வழிபட்டுக் கொண்டிருக்கின்றார். இந்நாட்களில் பலவகைத் தாண்டகம், பரவு தனித் தாண்டகம், அடைவு திருத்தாண்டகம், திருவங்க மாலை முதலிய செந்தமிழ்ச் சொல் மாலைகளால் சிவபெருமானை சேவித்துக் கொண்டிருக்கின்றார்[9].

நாவுக்கரசர் இங்ஙனம் இருக்கும் நாட்களில் திருமறைக் காட்டில் இவரிடம் விடைபெற்றுச் சென்ற காழிப் பிள்ளையார் பாண்டிய நாட்டின தலைநகராகிய மதுரையில் சமணர்களை வாதில் வென்று பாண்டியனது கூனை நிமிர்த்தருளித் தென்னாடெங்கும் திருநீற்றின் ஒளிபரப்பி அங்கிருந்து மீண்டு சோழநாட்டுத் திருத்தலங்களை வழிபட்டுக் கொண்டு வருபவர், அன்பிற் சிறந்த அப்பர் பெருமானைக் காணும் பெருவிருப்புடன் 'அப்பர் எங்குற்றார்?' என வினவுகின்றார் அடியார்களை. 'அப்பர் பூந்துருத்தியில் உள்ளார்' என அடியார்கள் மறுமொழி கூறுகின்றார்கள். அதுகேட்ட ஆளுடைய பிள்ளையார் அடியார் கூட்டத்துடன் புறப்பட்டுத் திருப்பூந்துருத்தியின் அருகில் வந்தணைகின்றார்.

சம்பந்தப் பெருமான் திருப்பூந்துருத்தியருகில் வந்து கொண்டிருக்கின்றார் என்பதைக் கேள்வியுற்ற நாவுக்கரசர் பிள்ளையாரை எதிர்கொண்டு போற்ற விரும்பி முன் செல்லுகின்றார். தம்மை இன்னாரென ஒருவரும் இனம் கண்டு கொள்ளாத முறையில் அடியார் கூட்டத்தினுட்

9. ஷெ. 390.

புகுந்து பிள்ளையார் அமர்ந்து வரும் முத்துச் சிவிகை யினைத் தாங்கி வருகின்றார். அப்பொழுது சம்பந்தப் பெருமான் 'அப்பர் எங்குள்ளார்?' என்று வினவ, பிள்ளை யாரின் அன்பின் திறத்தைக் கண்டு நெஞ்சம் நெக்குருகிய அப்பர் பெருமான் "உம் அடியேன் உம் அடிகள் தாங்கி வரும் பெருவாழ்வு வந்தெய்தப்பெற்று இங்குற்றேன்" என மொழிகின்றார்[10]. உள்ளப் பதைப்புடன் சம்பந்தர் விரைந்திழிந்து அப்பரை வணங்குகின்றார். அவரும் விரைந்து பிள்ளையார் வணங்குவதற்கு முன் எதிர் வணங்குகின்றார். இவ்விரு பெருமக்களின் நட்பின் திறத்தைக் கண்ட அடியார்கள் எல்லோரும் உளமுருகித் தொழுது போற்றுகின்றனர். இருவரும் திருப்பூந்துருத்தித் திருக்கோயிலை அடைந்து பொய்யிலிப் பெருமானைப் பணிந்து போற்றித் திருமடத்தில் இனிது அமர்கின்றனர்.

சம்பந்தப் பெருமான் தாம் பாண்டி நாட்டில் சமணர் களை வாதில் வென்றது, தென் தமிழ் நாட்டில் திருநீறு பரப்பியது ஆகிய செய்திகளையும், பாண்டியன் மாதேவி மங்கையர்கரசியாரது சிவபக்தி, மந்திரியார் குலச்சிறை யாரது திருத்தொண்டின் பெருமை ஆகிய செய்திகளையும் நாவுக்கரசருக்கு எடுத்துரைக்கின்றார்.[11] இவற்றைக் கேட்டு மகிழ்ந்த ஆளுடைய அடிகள் பாண்டி நாட்டுத் திருத்தலங்களை வழிபடத் திருவுளங் கொள்ளுகின்றார். அப்பர் பெருமானும் தாம் தொண்டை நாட்டிற்குச் சென்று அங்குள்ள திருத்தலங்களை வழிபட்ட விவரங் களையும் தமிழ் மாலைகளால் போற்றியதையும் பிள்ளை யாருக்கு எடுத்துரைக்கின்றார். அங்ஙனமே காழிப் பிள்ளை யாரும் தொண்டை நாட்டுத் திருத்தலங்களைச் சேவிக்க விரும்பி அப்பர் பெருமானிடம் விடைபெற்று ஏகுகின்றார். அப்பர் பெருமானின் பாண்டி நாட்டுத் திருத்தல வழி பாட்டை அடுத்துக் காண்போம்.

---

10. ௸ 396.
11. ௸ 399-400.

# 17. பாண்டி நாட்டுத் திருத்தல வழிபாடு

பாண்டி நாட்டில் உள்ள சிவத்தலங்கள் பதினான்கு. இவற்றுள் சிலவற்றைத்தான் அப்பர் பெருமான் வழிபட்டுப் போற்றியுள்ளார். இதற்குப் பாண்டிப் பயணத்தை முடித்துக் கொண்டு வந்த ஞான சம்பந்தப் பெருமானே காரணமாவர். திருப்பூந்துருத்தியில் இருவரும் சந்தித்து உரையாடிய பிறகு நாவுக்கரசர் பாண்டி நாட்டுத் தலங்களை வழிபடத் திருவுளம் கொள்ளுகின்றார். சம்பந்தப் பெருமானும் அப்பர் மூலம் தொண்டை நாட்டுத் தலங்களைப் பற்றிக் கேள்வியுற்றதனால் தொண்டை நாட்டுத் தலங்களை வழிபடத் திருவுளங் கொள்ளுகின்றார்.[1]

**பாண்டி நாட்டுப் பயணம் :** திருப்பூந்துருத்தி இறைவனை வணங்கி விடைபெறுகின்றார் அப்பர் பெருமான். தென்திசை நோக்கிப் புறப்பட்டுத் திருப்புத்தூருக்கு[2]வருகின்றார். திருத்தளி நாதரை வணங்கி "புரிந்தமரர் தொழு

1. சம்பந்தர் தொண்டை நாடு சென்ற விவரங்களை 'ஞானசம்பந்தர்' வரலாற்றில் கண்டு மகிழலாம்.

2. புத்தூர் (திருப்பத்தூர்) : திருச்சி - மானா மதுரை இருப்பூர்தி வழியிலுள்ள காரைக்குடியிலிருந்து 15 கல் தொலைவு. திண்டுக்கல், மதுரையிலிருந்தும் பேருந்துமூலம் இவ்வூருக்கு வரலாம். சிவபெருமான் திருநாமம் திருத்தளி

தேத்தும்'' (6.76) என்ற முதற் குறிப்பையுடைய செந்தமிழ்ப் பாமாலை புனைந்து இறைவனுக்குச் சாத்துகின்றார்.

மின்காட்டுங் கொடிமருங்குல் உமையாட் கென்றும்
விருப்பவன்காண்; பொருப்புவலிச் சிலைக்கை யோன்காண்
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்;
பொன்காட்டக் கடிகொன்றை மருங்கே நின்ற
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டுஞ் செழும்புறவில் திருப்பத் தூரில்
திருத்தளி யான்காண்; அவனென் சிந்தை யானே.(3)

என்ற பாடல் மாலையின் மூன்றாவதாக அமைந்த நறுமலர். பதிகப் பாசுரங்களில் திரும்பத் திரும்ப வரும் ''காண்' என்ற சொல் பாசுரங்கட்கு ஒருவிதக் கம்பீரத்தை விளைவிக்கின்றது.

திருத்தளியானிடம் விடைபெற்றுக்கொண்டு திருஆலவாய்[2] செல்லுகின்றார் நாவுக்கரசர். ''முளைத்தானை

---

நாதர். திருக்கோயில் குன்றக்குடி அடிகளாரின் ஆட்சியின் கீழ் உள்ளது. ஆண்டுதோறும் திருக்கோயிலின் ஆதரவில் பல இலக்கிய சமய விழாக்களைக்கண்டு தமிழையும் சைவத்தையும் வளர்த்து வருகின்றார் அடிகளார்.

2. ஆலவாய் (மதுரை): இருப்பூர்தி நிலையத்திலிருந்து $\frac{3}{4}$ கல் தொலைவிலுள்ளது. நடந்தே செல்லலாம். மதுரை பாண்டி நாட்டுத் தலைநகர். தமிழ்ச் சங்கங்கள் மூன்றும் திகழ்ந்த தலம். சிவபெருமான் 64 திருவிளையாடல்களை நிகழ்த்திய அற்புதத் திருத்தலம். அங்கையற்கண்ணியார் அவதாரம் செய்து பாண்டியன் திருமகளாக வளர்க்கப்பெற்று, சோமசுந்தரராக வந்த சிவபெருமானைத் திருமணம் செய்துகொண்டு அரசுபுரிந்த பழம்பதி. திருஞான சம்பந்தர் அனல் வாதம் புனல் வாதம் முதலியன செய்து சமணர்களைத் திருத்திச் சைவம் பரப்பிய வெற்றித் திருநகர், அங்கையற் கண்ணியம்மையார் (மீனாட்சி)

யெல்லார்க்கும்'' *(6.19) என்ற முதற் குறிப்பினையுடைய செந்தமிழ்த் திருப்பதிகம் பாடி ஆலவாய் அண்ணலைப் போற்றுகின்றார்.*

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை ஏற்றான் தன்னைச்
சுடர்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருவால வாய்ச்
சிவன்அடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. (8)

*என்பது இப் பதிகத்தின் எட்டாம் பாசுரம். பதினொரு பாசுரங்களிலும் 'திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே' என்று முடியும் பாசுரங்களைப் பாடுங் கால் உள்ளம்உருகிக் கண்ணீர் ஆறாகப் பெருகுகின்றது. மயிர்க் கூச்செறியச் செய்கின்றது.*

*அடுத்து* ''வேதியா வேத கீதா'' *(4.62) என்ற திரு நேரிசைச் செந்தமிழ் மாலையால் ஆலவாய் அப்பனைப் பரவுகின்றார்.* இதில்,

வழுவிலா துன்னை வாழ்த்தி
வழிபடும் தொண்ட னேன்உன்
செழுமலர்ப் பாதம் காணத்
தெண்டிரை நஞ்ச முண்ட

---

*சந்நிதி மிகுபுகழ் வாய்ந்தது. அம்மையின் சந்நிதிக்கெதிரி லுள்ள பொற்றாமரைக் குளம் சங்க காலத் தொடர் புடையது. விழாக்கள் மலிந்த திருத்தலம். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பாண்டித்துரைத் தேவர் தலைமையில் நான்காவது தமிழ்ச் சங்கம் நிறுவப் பெற்று அரிய தொண்டாற்றி வருகின்றது. மதுரை - காம ராசர் பல்கலைக் கழகம் தொடங்கப்பெற்று நன்முறையில் இயங்கி வருகின்றது.*

**குழகனே கோல வில்லீ!**
**கூத்தனே! மாத்தா யுள்ள**
**அழகனே ஆல வாயில்**
**அப்பனே அருள்செ யாயே. (7)**

என்பது ஏழாவது தமிழ்மணம் கமழும் வாடா நறுமலர். இப்பதிகத்திலுள்ள எல்லாப் பாடல்களுமே உள்ளத்தை உருக்கும் தன்மையவை.

பாண்டிமா தேவியாராகிய மங்கையர்க்கரசியாரும் அவருடைய கணவரும் வேந்தர் பெருமானுமாகிய நின்றசீர் நெடுமாறனும், அமைச்சர் குலச்சிறையாரும் திருநாவுக்கரசரை வரவேற்று வணங்கி எல்லையிலாப் பெருமகிழ்ச்சி அடைகின்றனர். நாவுக்கரசர் மதுரை மாநகரில் சில நாட்கள் தங்கியிருந்து திருநேரிசை, திருத்தாண்டகம் முதலிய செந்தமிழ்ச் சொல்லாலாகிய பாமலர்களால் ஆலவாய் அவிர்சடை அண்ணலை அருச்சித்துப் போற்றுவதுடன் கைத்தொண்டும் செய்து மகிழ்ச்சியுடன் காலம் கழிக்கின்றார்.

ஒரு நாள் திருப்பூவணம்[3] என்னும் திருத்தலத்திற்கு வருகின்றார். திருப்பூவணத் திறைவர் தமது தெய்வத் திருக்கோலத்துடன் திருநாவுக்கரசருக்கு எதிரே தோன்றிக் காட்சி தந்தருளுகின்றார். இந்த அழகிய தெய்வக் காட்சியைக் கண்ணுற்று மகிழ்ந்த அப்பர் பெருமான், ''வடிவேறு திரிசூலம்'' (6.18) என்ற முதற் குறிப்பையுடைய திருத்

3. பூவணம் (திருப்பூவணம்): வையையாற்றின் கரையிலுள்ளது. மதுரை - மானாமதுரை இருப்பூர்தி வழியில் திருப்புவனம் என்ற நிலையத்திலிருந்து ½ கல் தொலைவிலுள்ளது. தமிழ்வேந்தர் மூவரும் வழிபட்ட தலம். இதற்கு வடமொழி தென்மொழி இரண்டிலும் தல புராணங்கள் உள்ளன. இத்தலத்துச் சிவபெருமான்மீது திருப்பூவணம் கந்தசாமிப் புலவர் இயற்றிய திருப்பூவண நாதர் உலா என்னும் சிற்றிலக்கியம் சொல் நயம், பொருள் நயம் செறிந்து காணப்படுகின்றது.

தாண்டகச் செந்தமிழ்ப் பதிகத்தால் திருப்பூவணத் திறைவனை வழுத்துகின்றார்.

செறிகழலும் திருவடியும் தோன்றும் தோன்றும்;
திரிபுரத்தை எரிசெய்த சிலையும் தோன்றும்;
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும்;
நெற்றிமேல் கண்தோன்றும்; பெற்றம் தோன்றும்;
மறுபிறவி யறுத்தருளும் வகையும் தோன்றும்;
மலைமகளும் சலமகளும் மலிந்து தோன்றும்;
பொறியரவும் இளமதியும் பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. (8)

என்பது இத் திருப்பதிகத்தின் எட்டாவது வாடா நறுமலர். பாடல்கள் முழுவதும் சிவபெருமானது வடிவழகும் ஆயுதங்கள் தாங்கி நிற்கும் அழகும், எம்பெருமானின் திருக் குணங்களின் செயல்களும் அற்புதமாகச் சித்திரித்துக் காட்டப் பெறுகின்றன.

திருப்பூவணத் திறைவனிடம் விடைபெற்றுக்கொண்டு அப்பர் பெருமான் திருவிராமேச்சுரத்திற்கு[4] வருகின்றார். இராமலிங்கத்தின் மீது "பாசமும் கழிக்க கில்லா" (4.61) என்ற முதற் குறிப்பையுடைய செந்தமிழ்த் திருப்பதிகம் பாடி வழிபடுகின்றார்.

---

4. இராமேச்சுரம் (ராமேஸ்வரம்) : இருப்பூர்தி நிலையத்திலிருந்து 1 கல் தொலைவிலுள்ளது. கடற்கரைத் தலம்; ஒரு தீவில் உள்ளது. மண்டபம் நிலையத்திலிருந்து பாம்பன் நிலையத்திற்கு இருப்பூர்திகள் போவதற்குப் பாலம் உள்ளது. காசிக்குச் செல்பவர்கள் கங்கை தீர்த்தம் கொண்டு வந்து இராமலிங்க மூர்த்தியைத் திருமுழுக் காட்டுவித்துக் காசிப் பயணத்தை முடிப்பது வழக்கமாக இருந்து வருகின்றது. உணவு விடுதிகளும் தங்கும் விடுதிகளும் நிறைய உண்டு. செல்வர்கள் பல தங்கும் விடுதிகளை கட்டிப் போட்டுள்ளார்கள்; இவற்றில் இலவசமாகத் தங்கலாம். காசியிலிருந்து ஓர் இலிங்கம் கொணருமாறு அநுமனை அனுப்புகின்றார் இராமபிரான். காலம்

வாக்கினால் இன்பு ரைத்து
வாழ்கிலார் தம்மை எல்லாம்
போக்கினால் புடைத்த வர்கள்
உயிர்தனை உண்டு மால்தான்
தேக்குநீர் செய்த கோயில்
திருஇரா மேச்சு ரத்தை
நோக்கினால் வணங்கு வார்க்கு
நோய்வினை நுணுகு மன்றே(8)

என்பது இப்பதிகத்தின் எட்டாவது வாடாத நறுமலர்.

இராமேச்சரத்திலிருந்து திருநெல்வேலி[5] (பதிகம்

தாழ்ந்தும் வரவில்லை. சீதாபிராட்டியார் மணலைப் பிடித்து இலிங்கமாக்க அதனை இராமர் வழிபட்டனர். இந்த இலிங்கமே கருவறையில் இருப்பது. அநுமன் தாமதித்துக் கொணர்ந்த காசிலிங்கம் இராமலிங்கம் சந்நிதியின் வடக்கில் சில அடி தூரத்துக்குள் உள்ளது. இரண்டையும் திருத்தலப் பயணிகள் வழிபடுவது வழக்கமாக உள்ளது. அம்பிகை அழகும் அருளும் நிரம்பிய பர்வதவர்த்தினி (மலைவளர் காதலி) தாயுமான அடிகளின் பாடல்கள் அம்மையின் சிறப்பை நன்கு விளக்கும்.

5. நெல்வேலி (திருநெல்வேலி) : மதுரை - திருநெல்வேலி இருப்பூர்தி வழியில் திருநெல்வேலிச் சந்திப்பிலிருந்து 2 கல் தொலைவிலுள்ளது. தாமிரபரணி என வழங்கும் தண் பொருநையாற்றங்கரையிலுள்ளது. ஆற்று வெள்ளச் சேதமின்றிச் சிவபெருமான் நிவேதனத்துக்குச் சேமிக்கப் பெற்ற நெற்களஞ்சியத்தை வேலி கட்டிக் காத்தமையால் நெல்வேலியாயிற்று. நடராசரின் 5 சபைகளுள் இங்குள்ளது தாமிர சபை என்னும் செப்பறை. இறைவன் சந்நிதிக்ரில் ஏழிசை ஒலி எழுப்பும் கருங்கல் தூண்கள் உள்ளன. ஒரு சிறு குச்சியினால் தட்டிக் கேட்கலாம். அம்மை காந்திமதியின் திருவுருவம் அழகும் அருளும் நிரம்பியது. ஆற்றின் நடுவில் குறுக்குத்துறை முருகன் கோயில் சிறப்புடையது. ஆற்றங் கரையிலுள்ள ஓர் ஊர்ப்பகுதி 'சிந்து பூந்துறை' என்று இன்றும் வழங்கப்பெறுகின்றது.

இல்லை), **கானப்பேர்**[6] (பதிகம் இல்லை) முதலாகப் பாண்டி நாட்டிலுள்ள எல்லாத் திருத்தலங்களையும் வழிபட்டுக் கொண்டு சோழ நாடு வருகின்றார். இங்கும் பல தலங்களைப் பணிந்து திருப்புகலூரில் வந்து அமர்ந்து விடுகின்றார்.

6. **கானப்பேர்** (காளையார் கோயில்): நாட்டரசன் கோட்டையிலிருந்து 6 கல் தொலைவிலுள்ளது. சுந்தரர் கனவில் காளையாகத் தோன்றித் தாம் இருப்பது கானப் பேர் எனக் கூறி அவரை வணங்கச் செய்து பதிகம் பெற்ற படியால் '**காளையார் கோயில்**' என்று தலப்பெயர் வழங்கு கின்றது.

# 18. இறைவன் திருவடிப் பேறு

‘பொய்ப் பாசம் போக்கும்’ சிந்தையினரான நாவுக்கரசர் பெருமான் பூம்புகலூர்ப் பெருமான் திருவடிகளை வணங்கி உழவாரத் தொண்டு புரிந்து காலங் கழிக்கின்றார். வழிபாட்டு முறையில் சில செந்தமிழ் மாலைகளால் இறைவனை வழுத்துகின்றார். ‘செய்யர் வெண்ணூலர்’ (4.16) என்ற முதற் குறிப்புடைய பதிகம் பாடுகின்றார். இதில்,

செய்யர் வெண்ணூலர் கருமான் மறிதுள்ளும்
கையர் கனைகழல் கட்டிய காலினர்
மெய்யர் மெய்ந்நின்ற வர்க்கலா தவர்க்கென்றும்
பொய்யர் புகலூர்ப் புரிசடை யாரே. (1)

என்பது முதற் பாடல். புகலூர்ப் புரிசடையர் உண்மை வழி நில்லாதவர்க்குப் பொய்யானவர் என்கின்றார் இதில்.

இதனையடுத்து ‘பகைத்திட்டார்’ (4.54) என்ற திருநேரிசைச் செந்தமிழ் மாலையைப் புகலூர்ப் பெருமானுக்குச் சூட்டி மகிழ்கின்றார். இதில்,

பொறியிலா அழுக்கை யோம்பிப்
 பொய்வினை மெய்யென் றெண்ணி
நெறியலா நெறிகள் சென்றேன்;
 நீதனே நீதி ஏதும்

அறிவிலேன் அமரர் கோவே
அமுதினை மன்னி வைக்கும்
செறிவிலேன் செய்வ தென்னே
திருப்புக லூர னீரே. (4)

என்பது நான்காவது நறுமலர். உள்ளத்தை உருக்கும் இரண்டு செந்தமிழ் மாலைகள் இவர் நாவிலிருந்து புறப்படுகின்றன. அவற்றுள் ஒன்று 'இருநிலனாய்' (6.94) என்ற முதற் குறிப்புடையது. இதில்,

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமான னாயெறியும் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவும் தம்முருவும் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே (1)

மண்ணாகி விண்ணாகி மலையு மாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியு மாகிக்
கலையாகிக் கலைஞானம் தானே யாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப்
பிரளயத்துக் கப்பாலோர் அண்ட மாகி
எண்ணாகி எண்ணுக்கோர் எழுத்து மாகி
எழுஞ்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே. (2)

என்பன முதலிரண்டு மலர்கள். அடுத்து இரண்டாவது பதிகம் 'அப்பன்நீ' (6.95) என்ற முதற் குறிப்புடையது. இதில்

அப்பன்நீ; அம்மைநீ; ஐய னும்நீ;
அன்புடைய மாமனும் மாமி யும்நீ;
ஒப்புடைய மாதரும் ஒண்பொரு ளும்நீ;
ஒருகுலமும் சுற்றமும் ஒரு ரும்நீ;

துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்று வாய்நீ;
துணையாயென் நெஞ்சந் துறப்பிப் பாய்நீ;
இப்பொன்நீ; இம்மணிநீ; இம்முத் தும்நீ;
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே. (1)

என்பது முதற் பாடல்.

சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்;
அங்கமெலாம குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் யாம்வணங்கும கடவு ளாரே. (10)

என்பது பத்தாவது பாடல். இந்த இரண்டு பதிகங்களையும் பாடிப்பாடி இறைவனின் அகிலம் தழுவிய (Cosmic vision) காட்சியை மனத்தில் இருத்தலாம்.

திருப்புகலூரில் இவ்வாறு கைத் தொண்டும் மனத் தொண்டும் புரிந்து வரும் நாட்களில்தான் "எண்ணிறந்த வண்டமிழ் மாலைகள் மொழிவார்" என்கின்றார் சேக்கிழார் பெருமான்.[1] அவை நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்து திருத்தாண்டகம் (க்ஷேத்திரக்கோவை), குறைந்த திரு நேரிசை, தனித்திரு நேரிசை, ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணத் தடைவு, பாவநாசத் திருப்பதிகம், இறை வனை நேர்பட நின்று அறைகூவும் சரக்கறைத் திருப்பதிகம் முதலிய செந்தமிழ்ப் பாமாலைகள் இங்கு அருளிச் செய்யப் பெற்றதாகக் கூறுவர் சேக்கிழார் பெருமான்[2]. இவற்றின் விவரங்களை விரிவஞ்சி இவண் கூறவில்லை.

---

1. பெ. பு. திருநாவுக். 413
2. ஷை 414, 415.

நாவுக்கரசரின் நெஞ்சுறுதி : அப்பர் பெருமானின் உள்ளத்துறுதியை உலகத்தார்க்குத் தெளிவாகப் புலப்படுத்தத் திருவுள்ளங் கொள்ளுகின்றான் கயிலைநாதன். அப்பர் உழவாரத் தொண்டு புரியுங்கால் அவ்வுழவாரம் நுழைந்த இடங்களிலெல்லாம் பொன்னும் நவமணிகளும் வெளிப்பட்டு மின்னித் தோன்றும்படிச் செய்கின்றான். 'ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கும்' உரவோராகிய நாவேந்தர் அவற்றைப் பருக்கைக் கற்களோடு கற்களாக நினைந்து உழவாரப்படையால் ஏந்திப் புது மலர்கள் பூக்கும் பூங்கமல வாவியில் புகுமாறு வீசி எறிகினறார்.

புல்லுக்கும் கல்லிற்கும் பொன்னுக்கும் மணிக்கும் 'சொல்' அளவில் கூட வேறுபாடு காணாத உயர்ந்த பக்குவ நிலையிலிருக்கும் சொல்வேந்தர் முன்னே புகலூர் இறைவனின் திருவருளால் வில்லும் தோற்றோடும் அழகிய புருவங்கள் அசையும் நெற்றியினையுடைய அரம்பை ஊர்வசி முதலிய தேவமாதர்கள் மின்னற் கொடிகள்போல் விண்ணினின்றும் இழிந்து வருகின்றனர். இவர்கள் அப்பர் பெருமானின் திருமுன்னர் நின்று இன்னிசை பொருந்தப் பாடுகின்றனர்; இன்பச் சுவையினைப் புலப்படுத்தும் ஆடல்களை இயற்றுகின்றனர்: அடிகள்மீது மலர்களை மழைபோல் தூவுகின்றனர். அவரை அணைபவர் போன்று அணுகியும், கூந்தல் அவிழ இடை நுடங்க ஓடியும் மீண்டும் அவரை நெருங்கியும், காம இச்சை பெருகும்படி உடைகள் நழுவ ஒளியுடன் நின்று பலவிதச் சாகசச் செயல்களைப் புரிகின்றனர்.

இறைவன் திருவடிகளை மறவாது நினைந்து போற்றும் மெய்யுணர்வுடைய தவச் செல்வராகிய நாவுக்கரசர் தம் ஒருமை நிலையில் சிறிதும் பிறழாது தாம் செய்யும் பணியில் உறைப்புடையவராகத் திகழ்கின்றார். மாயையின் தொடர்புடைய இந்தப் பிறவியில் மீண்டும் மீண்டும் ஆருயிர்களை அழுத்தும் இருவினைகளின் உருவ

மாகி வந்த அந்த அரம்பையர்களை நோக்கி, "உம்மால் எனக்கு இங்கு ஆகவேண்டிய குறை என்ன உளது! யான் திருவாரூர்ப் பூங்கோயிலமர்ந்த பெருமானுக்கு ஆளாயுள் ளேன்; நீங்கள் வீணாக ஏன் அலைகின்றீர்? நும்மால் அலைக்கப்படும் எளிமையுடையேன் அல்லேன். நீவிர் என்னைத் துன்புறுத்தாதீர்'' என்ற கருத்துடன் "பொய் மாயப் பெருங்கடலில்'' (6.27) எனத் தொடங்கும் திருத் தாண்டக மாலையால் தெருட்டுகின்றார்.

பொய்மாயப் பெருங்கடலில் புலம்பா நின்ற
புண்ணியங்காள்! தீவினைகாள்! திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்தனடி தொடர்வா னுழிதர் கின்றேன
இடையிலேன் கெடுவீர்காள் இடரேன் மின்னே. (1)

என்பது முதற் பாடல். எல்லாப் பாடல்களையும் படித்து அநுபவிக்க வேண்டும்; அப்பொழுதுதான் அப்பர் பெரு மானின் உள்ளக் கிடக்கையை நன்கு அறிந்து கொள்ள முடியும். அடிகளது உள்ள உறுதிப்பாட்டை உள்ளவாறு அறிந்த உம்பர் மகளிர் தங்களால் செய்யத்தக்கது யாது மில்லை எனத் தெளிந்து நாவுக்கரசரை வணங்கிச் செல்லு கின்றனர்[3].

மன உறுதியில் தளராத அப்பர் பெருமானின் இந்த மன நிலையினை உலகமேழும் அறிந்து வணங்கு கின்றனர். பக்தியே வடிவான நாவுக்கரசர் சிவபிரானது திருவருள் பெருக்கத்தில் ஒடுங்கும் மீளாத பேரின்ப நிலையை அடையும் காலம் அண்மையிலிருப்பதை உணர் கின்றார். தம் அந்தக் கரணங்கள் புறத்தே சென்று பட்டி

3. பெ. பு. திருநாவுக். 416-424

மேயாது உள்ளே ஒடுங்கப்பெற்று இறைவன் திருவடியைத் தலைப்படும் செவ்வியினை எய்துகின்றார். "புகலூர்ப் புனிதன் அடியவனாகிய எளியேனை இனித் தன் திருவடியின்கண் இருத்தி அருள் புரிவன்" என்னும் முன்னுணர்ச்சி மூளப்பெற்றுப் பல திருவிருத்தங்களைப் பாடிப் போற்றுகின்றார். இது,

தன்னைச் சரணென்று தாளடைந்
 தேன்றன் அடியடையப்
புன்னைப் பொழில்புக லூரண்ணல்
 செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தென்வினை
 கட்டறுத தேழ்நரகத்(து)
என்னைக் கிடக்கலொட் டான்சிவ
 லோகத் திருத்திடுமே. (*4.108:1*)

என்ற திருவிருத்தத்தால் இனிது தெளியப்படும்.

இந்நிலையில் மண் முதலான எல்லா உலகமும் வணங்கி வாழ்த்தி வணங்க புகலூர்ப் பெருமானை நோக்கி "எண்ணுகேன் எனச் சொல்லி" (*6.99*) என்ற திருத்தாண்டகத்தைப் பாடிப் போற்றுகின்றார். 'புண்ணியத்தின் உருவாக விளங்கும் எம்பெருமானே, உன்னுடைய திருவடிக்கே எளியேனும் வருகின்றேன்' என நெஞ்சம் கசிந்துருகி வேண்டும் நிலையில்,

எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ
 எம்பெருமான் திருவடியே எண்ணின் அல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
 கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
 ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
 பூம்புகலூர் மேவிய புண்ணியனே (*1*)

என வருவது இப்பதிகத்தின் முதற் பாடல். நாம் எல்லாப் பாடல்களையும் பாடிப் அப்பர் பெற்ற அநுபவம் பெற வேண்டும். இதைப் பாடிப் போற்றிய நிலையில் நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக் கீழ் எய்தி இன்புறுகின்றார். இங்ஙனம் நாவுக்கரசர் பெருமான் திருப்புகலூர் இறைவன் திருமுன் நின்று 'உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே' என்று செந்தமிழ்த் தாண்டக மாலையால்போற்றியநிலையிலேயே இவ்வுலக வாழ்வைத் துறந்து அறவாழி அந்தணனாகிய இறைவன் அருளொளியில் கலந்து திருவடியை அடைந்த நன்னாள் சித்திரைத் திங்களில் சதயத் திருநாள் என்று கூறுவர் சேக்கிழார் பெருமான்.

நாவுக்கரசரின் வாழ்வு நல வாழ்வு: அற்புதத் திரு வாழ்வு. தமிழோடு இசைபாடிச் சிவானந்தத்தை அநுபவித்த பெரு வாழ்வு. 'திருநின்ற செம்மை' இவரது வாழ்வில் எங் கெங்கும் ஒளிவிட்டுக் காட்டுகின்றது. அப்பர் பெருமான் சிறந்த கவியோகி; ஞானச் செம்மல். பக்தியின் கொடு முடியைக் கண்டவர். வாகீசப் பெருமான் வையத்தில் வாழ் வாங்கு வாழ்ந்து, வானுறையும் தெய்வத்துள் வைக்கப் பெற்றதால் அவர் வாழ்வு பூரணத்துவம் பெற்று இலங்கு கின்றது. தம் முற்றிய வாழ்வின்—ஆன்மப் பயணத்தின்— முழுமையினை அவர்தம் வாழ்வில் தெளிவாகக் காணமுடி கின்றது.

# 19. பல்வேறு பொதுப் பதிகங்கள்

நாவுக்கரசர் தல வழிபாட்டின்போது புனைந்த செந்தமிழ் மாலைகளை இதுகாறும் கண்டும், அப்பெருமானுடன் வழிபட்டும் சுவைத்தோம். பக்திப் பெருக்கிலும் திளைத்தோம். பூந்துருத்தி வாழ்க்கையும் புகலூரில் இருப்பும் பல்வேறு திருப்பதிகங்களை நமக்கு நல்கியுள்ளன. அவற்றையும் கண்டு, சேவித்து, மகிழ்வோம்.

'பூந்துருத்தில் வாழ்வில்; 'நேர்ந்தொருத்தி' (6:93) என்ற முதற் குறிப்பையுடைய தாண்டகம், 'பலவகைத் திருத்தாண்டகம்' என்ற பெயரைப் பெறுகின்றது. இதில்,

கலஞ்சுழிக்கும் கருங்கடல்சூழ் வையந் தன்னில்
கள்ளக் கடலி லழுந்தி வாளா
நலஞ்சுழியா எழுநெஞ்சே இன்பம் வேண்டில்
நம்பன்றன் அடியிணைக்கே நவில்வா யாகில்
அலஞ்சுழிக்கும் மன்னாகந் தன்னான் மேய
அறுமறையோ டாறாங்க மானார் கோயில்
வலஞ்சுழியே வலஞ்சுழியே என்பீ ராகில்
வல்வினைகள் தீர்ந்துவா னாள லாமே. (6)

என்பது ஆறாவது பாடல். இதில் 'வலஞ்சுழியே வலஞ் சுழியே என்பீ ராகில்' வல்வினைகள் தீர்ந்து வானாளலாம் என்பதுபோல, ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு தலம் சொல்லப்பெற்றுப் பலனும் கூறப்பெறுகின்றது. இப்

*பதிகம் பல தலங்களையும் நினைப்பதால் 'பலவகைத் திருத் தாண்டகம்' எனப்படுகின்றது. தலவழிபாடு முக்கியம் என் பதை அறிவுறுத்துவது. பதிகம் முழுவதையும் அநுபவிப்பது நம் கடமை.*

'ஆமயந்தீர்த்' (6.96) *என்ற முதற்குறிப்பையுடைய பதிகத்தில்,*

பொக்கணமும் புலித்தோலும் புயத்திற் கொண்டார்;
பூதப்ப டைகள் புடைசூழக் கொண்டார்;
அக்கினொடு படவரவம் அரைமேற் கொண்டார்;
அனைத்துலகும் படைத்தவையும் அடங்கக்
கொண்டார்;
கொக்கிறகும் கூவிளமும் கொண்டை கொண்டார்;
கொடியானை அடலாழிக் கிரையாக் கொண்டார்;
செக்கர்நிறத் திருமேனி திகழக் கொண்டார்;
செடியேனை யாட்கொண்ட சிவனார் தாமே. (4)

*என்பது இதில் நான்காம் பாசுரம். ஒவ்வொரு பாசுரத் திலும் 'சிலவற்றைக் கொண்டார்' என்று கூறிச் சிவ பெருமானை அடையாளங் காட்டுவதுடன் 'அடியேனை ஆட்கொண்டார்' என்று முடிவதால் இது* 'பரவுநிலைத் திருத்தாண்டகம்' *ஆகின்றது. பரமனைப் பரவுவதைக் காட்டுகின்றதல்லவா?*

'பொருப்பள்ளி' (6.71) *என்ற முதற்குறிப்புடைய பதிகத்தில,*

நள்ளாறும் பழையாறும் கோட்டாற் றோடு
நலந்திகழும் நாலாறும் திருவை யாறும்
தெள்ளாறும் வளைகுளமும் தளிக்குள முநல்
லிடைக்குள மும்திருக் குளத்தோ டஞ்சைக்களம்
விள்ளாத நெடுங்களம் வேட்களம் நெல்லிக்கா
கோலக்கா ஆனைக்கா வியன்கோடிகா
கள்ளார்ந்த கொன்றையான் நின்ற ஆறும்
குளம்களங்கா எனஅனைத்தும் கூறு வோமே. (10)

என்பது பத்தாவது பாடல். புகலாகச் சென்று சேர்தற்குரிய தலங்களைப் பாடும் பதிகம். உயிர்கள் சென்றடைகிற தலங்கள் பலவற்றையும் அடைவுபடத் தொகுத்துரைத் தலின் 'அடைவுத் திருத்தாண்டகம் ஆகிறது. இதுபோலவே இப்பதிகம் பள்ளி (1), வீரட்டம் (2), குடி (3), ஊர் (4), கோயில் (5), காடு (6) வாயில் (7), ஈச்சுரம் (8), மலைத் தலங்கள் (9), 'ஆறு, குளம், கா, களம்' (10), துறை (11) எனத் திருப்பெயரோடு சேர்ந்து முடிகின்ற தலங்கள் ஒவ்வொன்றையும் பாடுகின்றது. இவ்வாறு பெயர் முடிவு பற்றித் தொகுத்துப் பாடுவது 'நிகண்டுப் பதிகம்'; நினைவு படுத்திப் பாட எளிதாகும். 'ஊரும் பேரும்' அறிய உதவுவது.

'தலையே நீவணங்காய்' (4.9) என்று தொடங்கும் பதிகத்தில்,

வாயே வாழ்த்து கண்டாய்—மத
    யானை யுரி போர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பிரான் தன்னை
    வாயே வாழ்த்து கண்டாய். (5)

என்பது ஐந்தாவது பாடல். இஃது அங்கங்களின் தொழில் கூறும் அற்புதப் பதிகம். இது பூந்துருத்தியில் பாடப்பெற்ற தாகச் சேக்கிழார்தான் முதன் முதலில் கூறுகின்றார். பொதுப்பதிகங்களில் உள்ள இத்திருக் குறுந்தொகைகளில் வகை வகையாகப் பல நிலையில் பாடப்பெற்ற போக்குகள் தெரிவதால் 'பன்மைத் தொகை' எனச் சேக்கிழார் கூற்றை அடிப்படையாக வைத்துச் சிவக்கவிமணி இவற்றைப் பூந்துருத்திக் குறுந்தொகைகளாகப் பொருத்திக் காண்பர்.[1]

ஒன்று வெண்பிறை (5.89) என்ற முதற்குறிப்பினை யுடைய குறுந்தொகைப் பதிகத்தில்,

1. பூம்புகார்ப் பேரவைக் கல்லூரி வெளியீடு: அப்பர் பெருமான் வாழ்வும் வாக்கும்-பக் 703 காண்க.

ஆறு கால்வண்டு மூசிய கொன்றையன்
ஆறு சூடிய அண்ட முதல்வனார்
ஆறு கூர்மையர்க் கச்சம யப்பொருள்
ஆறு போலெம் அகத்துறை ஆதியே.(6)

என்பது ஆறாவது பாடல். இந்தப் பதிகம், விடந்தீர்த்த பதிகம். இவை 'ஒன்று முதல் பத்து வரை' எண்ணலங்கார மாக்கிப் பாடியவை. பெரும்பாலும் இவ்விருபதிகங்களில் ஒரே செய்திகள் அதிக வேறுபாடின்றிப் பாடப்பெற் றுள்ளன. இதில் 'திரிபணி' திகழ்கின்றது. 'ஒன்று...பத்து' இவை 'மந்திர சொரூபமானவை' என்பர் அறிஞர்கள். இதுவும் 'ஏவிலானை' (5.91) என்பதும் 'தனித் திருக்குறுந் தொகை'யாகும்.

'கண்டுகொள்ளரி' (5.92) என்ற முதற் குறிப்புடைய குறுந்தொகையில்,

படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்தம தீசன் அடியரை
விடைகொ ளூர்தியி னான்அடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே. (7)

என்பது ஏழாவது பாடல். இஃது எமதூதர்களை நோக்கிப் பேசுவதாக அமைந்தது; அவர்கட்கு எச்சரிக்கை விடுக்கின்றார். ''எங்கள் அடியவரிடம் சேர்ந்தீராகில் எம் பிரான் கழலடிகள் உம்மைச் சுட்டு எரித்துவிடும்'' என்ற கருத்துடையதால் இது ''காலபாசத் திருக்குறுந்தொகை'' ஆயிற்று.

''காசனைக் கனலை'' (5.93) என்ற முதற் குறிப்பினை யுடைய பதிகத்தில்,

ஈசன் என்னை யறிந்த தறிந்தனன்
ஈசன் சேவடி யேற்றப் பெறுதலால்
ஈசன் சேவடி யேத்தப்பெற் றேன்இனி
ஈசன் தன்னையும் யான்மறக் கிற்பனே. (4)

என்பது நான்காம் பாடல். 'மறக்கிற்பனே' என்று ஒவ்வொரு பாடலும் முடிவதால் 'மறக்கிற்பனே' எனும் 'திருக் குறுந்தொகை' ஆகின்றது.

''அண்டத்தானை'' (5.94) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந்தொகையில்,

ஞாலத் தானைநல் லானைவல் லார்தொழும்
கோலத் தானைக் குணப்பெருங் குன்றினை
மூலத் தானை முதல்வனை மூவிலைச்
சூலத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. (7)

என்பது ஏழாவது பாடல். ஒவ்வொரு பாடலும் 'தொழற் பாலதே' என இறுவதால் 'தொழற் பாலனே' என்னும் திருக்குறுந் தொகை என்ற பெயர் பெற்றது.

''புக்கணைந்து'' (5.95) என்று தொடங்கும் பதிகத்தில்,

எருக்கங் கண்ணிகொண் டிண்டை புனைந்திலர்
பெருக்கக் கோவணம் பீறி யுடுத்திலர்
தருக்கி னாற்சென்று தாழ்சடை அண்ணலை
நெருக்கிக் காணலுற் றாரங் கிருவரே. (5)

இது ஐந்தாவது பாடல். இதில் ஒவ்வொரு பாடலும் 'காணலுற்றாரங் கிருவரே' என்று முடிவது. இலிங்க தத்துவத்தின் உண்மையை வடித்துத் தருவது. எனவே 'இலிங்க புராணத் திருக்குறுந்தொகை' என்று பெயர் பெறுகின்றது.

''பொன்னுள்ளத்திரள்'' (5.96) என்று தொடங்கும் பதிகத்தில்,

பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புரம்
பின்னுள் ளத்திரள் வெண்பிறை யாயிறை
நின்னுள் ளத்தருள் கொண்டிருள் நீங்குதல்
என்னுள் ளத்துள தெந்தை பிரானிரே. (1)

என்பது முதற் பாடல். இஃது 'எந்தை பிரானீரே' என்று இறும் பதிகம். முதற் பாடலில் 'என் உள்ளத்துள்ளது' என்று குறித்தலால் 'மனத்தொகை' என்னும் குறுந்தொகை யாகின்றது என்பர் சிவக் கவிமணி. பதிகம் 'மனத்தில் தொக்கது' என்று பாடப்பெற்றுள்ளதால் இப் பெயர் பெற்றது என்றும் கொள்ளலாம். (வெள்ளை வாரணனார்)

"சிந்திப்பார் மனத்" (5.97) என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந்தொகையில்.

சிந்திப் பார்மனத் தான்சிவன் செஞ்சுடர்
அந்தி வான்நிறத் தான்அணி யார்மதி
முந்திச் சூடிய முக்கண்ணி னானடி
வந்திப் பாரவர் வானுல காள்வரே. (1)

என்பது முதற் பாசுரம். இதில் பதிகம் பத்துடையது என்ற வரம்பு மீறித் திருமுறைகளில் முப்பது பாசுரங்களைப் பெற்ற ஒரே ஒரு பெரும்பதிகம், 'உயிர் வருக்க மோனை', 'உயிர் மெய் வருக்க மோனை' என்னும் அணிவரப் பாடிய பதிகம். 'சிந்திப்பார் மனத்தான்' என இப்பதிகம் தொடங்கு வதால் இது 'சித்தத் தொகைக் குறுந்தொகை' என்ற பெயர் பெறுகின்றது.

"நீரலைத்ததோர்" (5.98) என்ற முதற் குறிப்புடைய பதிகத்தில்,

வெள்ளத் தார்விஞ்சை யார்கள் விரும்பவே
வெள்ளத் தைச்சடை வைத்த விகிர்தனார்
கள்ளத் தைக்கழி யம்மன மொன்றிநின்(று)
உள்ளத் தில்லொளி யைக்கண்ட துள்ளமே. (3)

என்பது மூன்றாவது பாடல். ஒவ்வொரு பாடலிலும் 'கண்டது என் உள்ளமே' என்று உள்ளத்தில் கண்ட வற்றையே பாடப் பெற்றிருப்பதால் இஃது 'உள்ளக் குறுந் தொகை' ஆகின்றது.

''பாவமும் பழிபற்றற'' (5.99) என்ற முதற் குறிப்புடைய குறுந்தொகைப் பதிகத்தில்,

வேதம் ஓதிலென்? வேள்விகள் செய்கிலென்?
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்?
ஓதி யங்கமோ ராறும் உணரிலென்?
ஈசனை யுள்குவார்க் கன்றி யில்லையே. (4)

என்பது நான்காவது பாடல். இப்பதிகம் இறைவனை உள்ளத்தால் நினைந்து வாழ்த்தி வணங்கினார்க்கே பாவம் நீங்குமென்று பாடியது. ஆகவே இது 'பாவநாசத் திருக்குறுந்தொகை' எனப் பெயர் பெறுகின்றது. இதிலுள்ள பாடல்கள் யாவும் உள்ளத்தை உருக்குபவை.

வேதநாயகன் (5-100) என்ற முதற் குறிப்புடைய பதிகத்தில்,

கூவ லாமை குரைகட லாமையைக்
கூவ லோடொக்கு மோகட லென்றல்போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே. (5)

என்பது ஐந்தாவது பாடல். 'முன்னைப் பழம் பொருட்கும் முதல்வனான' சிவபெருமானை எத்தேவர்க்கும் முதல்வன் எனப் பரவிப் போற்றுவதால் இஃது 'ஆதி புராணத் திருக் குறுந்தொகை' எனப் பெயர் பெறுகின்றது.

புகலூர் வாழ்வில் : அப்பர் பெருமான் தம் இறுதிக் காலத்தில் புகலூரில் தங்கியிருந்தபோது பாடிய பொதுப் பதிகங்கள் உள்ளன. ''தில்லைச் சிற்றம்பலவன்'' (6.70) என்று தொடங்கும் பதிகத்தில்,

நறையூரிற் சித்தீச் சரம்நள் ளாறு
    நாரையூர் நாகேச்சரம் நல்லூர் நல்ல
துறையூர் சோற்றுத்துறை சூல மங்கை
    தோணிபுரம் துருத்தி சோமீச் சரம்

உறையூர் கடலொற்றி யூரூற் றத்தூர்
ஓமாம் புலியூர் ஓர்ஏட கத்தும்
கறையூர் கருப்பறியல் கன்றாப் பூரும்
கயிலாய நாதனையே காண லாமே. (10)

என்பது பத்தாவது பாடல். ஆலயங்களை 'அரன் எனத் தொழும்' போக்கில் பாடியது. திருத்தலங்கள் கோவைப் படுத்திப் பாடப்பெற்றதால் "க்ஷேத்திரக் கோவைத் திருத் தாண்டகம்" எனப் பெயர் பெறுகின்றது. இவ்விடத்தில் அடைவுத் திருத்தாண்டகத்தில் (6.71) ஊர், ஆறு, குடி, பள்ளி போன்ற தலங்களை அடைவுபடுத்திப் பாடப் பெற் றுள்ள பதிகத்தை நினைத்தல் தகும்.

"வென்றிலேன்" (4.78) என்று தொடங்கும் திரு நேரிசைப் பதிகத்தில்,

வென்றிலேன் புலன்க ளைந்தும்
வென்றவர் வளாகந் தன்னுள்
சென்றிலே னாத லாலே
செந்நெறி அதற்குஞ் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றேன்
நீசனேன் ஈச னேயோ
இன்றுளேன் நாளை இல்லேன்
என்செய்வான் தோன்றி னேனே. (1)

என்பது முதல் பாடல். இறைவனை நோக்கிக் குறையிரந்த முறையில் அமைந்திருப்பதால் "குறைந்த நேரிசை" எனப் பெயர் பெறுகின்றது. "தம்மானம் காப்பதாகி" (4.79) என்ற திருநேரிசையும் இவ்வகையைச் சேர்ந்ததே.

"தொண்டனேன்" (4.75) என்ற முதற் குறிப்புடைய பதிகத்தில்,

அங்கத்தை மண்ணுக் காக்கி
ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாக்கிப்
பாவித்தேன் பரமா! நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா !
சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்றாய் என்ற போதால்
இங்குற்றேன் என்கண் டாயே (8)

என்பது எட்டாவது பாடல். ஒரு தலத்திற்குரிமையின்றித் தனித்தமைந்திருப்பதால் இது ''தனித்திரு நேரிசை'' ஆகின்றது. 'மருளவா' (4.76), 'கடும்பகல்' (4.77) என்ற முதற் குறிப்புடைய திருநேரிசைப் பதிகங்களும் இவ்வகையினவே. இம்மூன்றின் பாடல்களும் பக்தியநுபவத்தின் கொடு முடிக்கு இட்டுச் செல்பவை.

''முத்தினை'' (4.74) என்று தொடங்கும் திருநேரிசைப் பதிகத்தில்,

முன்பனை உலகுக் கெல்லாம்
மூர்த்தியை முனிகள் ஏத்தும்
இன்பனை இலங்கு சோதி
இறைவனை அரிவை அஞ்ச
வன்பனைத் தடக்கை வேழக்
களிற்றினை யுரித்த எங்கள்
அன்பனை நினைந்த நெஞ்சம்
அழகிதா நினைந்த வாறே. (2)

என்பது இரண்டாம் பாடல். ''(சிவபெருமானை) நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்தவாறே'' என்று ஒவ்வொரு பாடலும் இறுவதால் இது 'நினைந்த திருநேரிசை' என்ற திருநாமம் பெறுகின்றது.

'எட்டாந் திசைக்கும்'' (4.84) என்று தொடங்கும் திருவிருத்தப் பதிகத்தில்,

வடிவுடை வாள்நெடுங்கண் உமையாளை
ஓர்பால் மகிழ்ந்து
வெடிகொள் அரவொடு வேங்கைஅதள்
கொண்டு மேல்மருவிப்
பொடிகொ ளகலத்துப் பொன்பிதிர்ந்தன்ன
பைங்கொன்றை யந்தார்
அடிகள் அடிநிழற் கீழதன்றோ
என்றன் ஆருயிரே. (4)

என்பது நான்காம் திருவிருத்தம். ஒவ்வொரு பாடலும் "(சிவபெருமானின்) அடிநிழற் கீழதன்றே என்றன் ஆருயிரே" என்று முடிவதால் இஃது 'ஆருயிர்த் திருவிருத்தம்' என்ற பெயரைப் பெறுகின்றது.

"பருவரை யொன்று" (4,14) என்று தொடங்கும் பதிகத்தில்,

காலமு நாள்கள் ஊழிபடையா முன்ஏக
உருவா கிமூவர் உருவில்
சாலவு மாகிமிக்க சமயங்க ளாறின்
உருவாகி நின்ற தழலோன்
ஞாலமு மேலை விண்ணோடு லகேழுமுண்டு
குறளாய் ஓராலின் இலைமேல்
பாலனு மாயவற்கோர் பரமாய மூர்த்தி
யவனாம் நமக்கோர் சரணே. (3)

என்பது மூன்றாம் பாடல். இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலும் சிவனது வீரம்பற்றிய ஒவ்வொரு புராணச் செய்தியினைப் போற்றுவதால் இது 'தசபுராணத் தடைவு' என்ற பெயரைப் பெறுகின்றது.

"பற்றற்றார் சேர்" (4.15) என்று தொடங்கும் பதிகத்தின்,

கோலக் காவிற் குருமணியை
குடமூக் குறையும் விடமுனியை
ஆலங் காட்டி லநதேனை
அமரர் சென்னி யாய்மலரைப்
பாலில் திகழும் பைங்கனியைப்
பராய்த்து றையெம் பசும்பொன்னைச்
சூலத் தானைத் துணையிலியைத்
தோளைக் குளிரத் தொழுதேனே. (5)

என்பது ஐந்தாவது பாடல். இதில் 'வினைகள் நாசமாக' ஒவ்வொரு தலத்து ஈசனையும் நினைக்க; போற்றுக; விழுங்குக என வழி கூறிப் பதினோராம் பாடலில்,

சிந்தை வெள்ளப் புனலாட்டிச்
செஞ்சொல் மாலை அடிசேர்த்தி
எந்தை பெருமான் என்னெம்மான்
என்பார் பாவ நாசமே.

என்று முடித்தலால் 'பாவநாசத் திருப்பதிகம்' ஆகின்றது.

''சிவனெனும் ஓசை'' (4.8) என்று தொடங்கும் திருப் பதிகத்தில்,

விரிகதிர் ஞாயி றல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணும் நிலனும்
திரிதரு வாயு வல்லர் செறிதீயு மல்லர்
தெளிநீரு மல்லர் தெரியில்
அரிதரு கண்ணி யாளை ஒருபாக மாக
அருள்கார ணத்தில் வருவார்
எரியர வார மார்பர் இமையாரு மல்லர்
இமைப்பாரு மல்லர் இவரே. (2)

என்பது இரண்டாம் பாடல். இது சிவநாமமே நாமம் எனப் பாடியது. இது 'சிவனெனும் ஓசை' என்று முதற் குறிப் பினால் பெயர் பெறுகின்றது.

"சாம்பலைப் பூசி[4]" (4.110) என்ற திருவிருத்தப் பதிகத்தில்,

ஒருவரைத் தஞ்சமென் றெண்ணா
　　துன்பாதம் இறைஞ்சுகின்றார்
அருவினைச் சுற்றம் கல்விகண்
　　டாய்அண்ட மேயணவும்
பெருவரைக் குன்றம பிளிறப்
　　பிளந்துவேயத் தோளியஞ்சப்
பருவரைத் தோலுரித் தாய்எம்மை
　　யாளும் பசுபதியே. (4)

என்பது நான்காம் பாடல். இப்பதிகத்தின் ஒவ்வொரு திருப்பாடலின் இறுதிதோறும் 'பசுபதியே' என்று முடிவதால் 'பசுபதி திருவிருத்தம்' என்று பெயர் பெற்றது. இதில் 8,9 ஆம் பாடல்கள் காணப்பெறவில்லை.

"விடையும்" (4.111) என்ற முதற் குறிப்புடைய திருவிருத்தத்தில்,

வெண்டிரைக் கங்கை விகிர்தா! என்
　　விண்ணப்பம் மேலிலங்கு
கண்டிகை பூண்டு கடிசூத்திர
　　மேற்கபா லவடம்
குண்டிகை கொக்கரை கோணற்பிறை
　　குறட்பூ தப்படை
தண்டிவைத் திட்ட சரக்கரையோ
　　என்தனி நெஞ்சமே. (9)

ஒன்பதாவது பாடல். இப்பதிகத்தில் ஒவ்வொரு பாடலும் முதலடியில் அரனை அறைகூவி அழைத்து விண்ணப்பிக்கும் போக்கில் சிவபெருமானுக்குரிய சின்னங்களாகிய பொருள்களை வைக்கும் சரக்கறையோ தம் நெஞ்சு என்று கேட்கும் பாவனையிலிருப்பதால் இது 'சரக்கறைத் திருவிருத்தம்' என்ற திருநாமம் பெறுகின்றது.

''வெள்ளிக்குழைத்துணி'' (4.112) என்ற முதற்குறிப் புடைய திருவிருத்தத்தில்,

வானம் துளங்கிலென் மண்கம்ப
    மாகிலென் மால்வரையும்
தானம் துளங்தித் தலைதடு
    மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர்
    வீழிலென் வேலைநஞ்சுண்(டு)
ஊனமொன் றில்லா ஒருவனுக்
    காட்பட்ட உத்தமர்க்கே. (8)

என்பது எட்டாம் பாடல். ஒவ்வொரு தலத்துக்குரிய இறைவனின் திருப்பெயரையும் அவ்வத்தலத்தில் பாடு கின்ற மரபுடைய அப்பர் பெருமான் 'சிவன்' என்னும் நாமத்தை போற்றிப் பாடுவதாலும் (பாடல்-9) ஐயாற் றிறைவனின் நாமம் 'சிவன்' என்பதாலும் இதனை ஐயாற்றுப் பதிகமாக அடையாளம் காட்டுகின்றது என்று கூறும் பூம்புகார்ப் பேரவைக் கல்லூரிப் பதிப்பு. ஆயின் பேராசிரியர் வெள்ளைவாரணனாரும் சிவக் கவிமணியும் இதனைப் புகலூரில் பாடப் பெற்ற பொதுத் தனிப் பதிக மாகவே கொள்வர். ஒரு தலத்திற்குரிமையின்றித் தனித் தமைந்த திருப்பதிகமாகத் திகழ்வதைக் காணலாம். 'பவளத்தடவரை' (4.113) என்று தொடங்கும் திருவிருத்தப் பதிகமும் தனித் திருவிருத்தப் பதிகமே. இந்த இருப்பதிகத் தின் பாடல்கள் அனைத்தும் பாடிப் பாடி அநுபவிக்கத் தக்கவை.

''அண்டங் கடந்த'' (6.97) என்று தொடங்கும் திருத் தாண்டகப் பதிகத்தில்,

நீறுடைய திருமேனி பாக முண்டோ?
    நெற்றிமே லொற்றைக்கண் முற்று முண்டோ?
கூறுடைய கொடுமழுவாள் கையி லுண்டோ?
    கொல்புலித்தோ லுடையுண்டோ? கொண்ட வேடம்

ஆறுடைய சடையுண்டோ? அரவ முண்டோ?
அதனருகே பிறையுண்டோ? அளவி லாத
ஏறுடைய கொடியுண்டோ? இலய முண்டோ?
எவ்வகையெம் பிரானாரைக் கண்ட வாறே. (5)

*என்பது ஐந்தாம் பாடல். முதல் ஐந்து பாடல்களும் வினாவாக அமைந்துள்ளன. ஆறுமுதல் பதினொன்றுவரை விடையாக அமைந்துள்ளன.*

நீரேறு திருமேனி நிகழக் கண்டேன்;
நீள்சடைமேல் நிறைகங்கை யேறக் கண்டேன்;
கூறேறு கொடுமழுவாள் கொள்ளக் கண்டேன்;
கொடுகொட்டி கையலகு கையிற் கண்டேன்;
ஆறேறு சென்னியணி மதியும் கண்டேன்;
அடியார்கட் காரமுத மாகக் கண்டேன்;
ஏறேறி இங்நெறியே போதக் கண்டேன்;
இவ்வகையெம் பெருமானைக் கண்ட வாறே. (8)

*என்பது எட்டாவது பாடல். இது விடையாக அமைந்திருப்பதைக் காணலாம்.*

*இங்ஙனம் நாவுக்கரசரின் பொதுப்பதிகங்கள் பல சிறப்புப் பெயர்களையும் கொண்டிலங்குகின்றன.*

# 20. அருளிச் செயல்கள்

மூவர் அருளிய தேவாரப் பதிகங்களைத் திருமுறைகளாகத் தொகுத்து அடைவுபடுத்தியவர் நம்பியாண்டார் நம்பி. இங்ஙனம் தொகுத்தபோது அப்பெருமக்கள் இவ்வுலக வாழ்வினைத் துறந்து இறைவன் திருவருளில் கலந்து வீடு பெற்ற கால அடைவினை உளத்துட் கொண்டு அமைக்கப் பெற்றது. சிவபெருமான் திருவடியில் முதலில் கலந்தவர் காழிப் பிள்ளையார். ஆகவே அவருடைய அருளிச் செயல்கள் முதல் மூன்று திருமுறைகளாக அடைவுபடுத்தப் பெற்றன. பிள்ளையாருக்கு அடுத்து இறைவன் திருவடி நிழலை அடைந்தவர் நாவுக்கரசர். ஆகவே இவருடைய அருளிச் செயல்கள் நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளாக அமைக்கப் பெற்றன. இவ்விருவர்க்கும் காலத்தாற் பிற்பட்ட நம்பியாரூரரின் திருப்பதிகங்கள் ஏழாந்திருமுறையாக அமைக்கப் பெற்றன.

நாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்களில் பண்ணமைந்த பதிகங்கள் அனைத்தும் (113) நான்காம் திருமுறையிலும், திருகுறுந்தொகைப் பதிகங்கள் அனைத்தும் (100) ஐந்தாம் திருமுறையிலும், திருத்தாண்டகப் பதிகங்கள் அனைத்தும் (99) ஆறாம் திருமுறையிலும் அடங்குவனவாயின.

இறைவனது திருவருட் பெருமையினை உலக மக்கள் உணர்ந்து போற்றும்படி வியப்புடைய அருட் செயல்கள்

பல நிகழும் வண்ணம் பாடப்பெற்ற திருப்பதிகங்கள் அற்புதத் திருப்பதிகங்களாகும். 'கூற்றாயினவாறு விலக்க கிலீர்' என்ற திருப்பதிகம் அற்புதத் திருப்பதிகம். இது நான்காம் திருமுறையில் முதற்பதிகமாக அமைந்தது. ஐந்தாம் திருமுறையில் 'அன்னம்பாலிக்கும்' என்ற கோயில் திருப்பதிகம் முதலில் வைக்கப் பெற்றது; அங்ஙனமே 'அரியானை' என்ற கோயில் பெரியதாண்டகம் முதலாக அமைந்தது. இறைவன் திருவடி நீழலை எய்தி இன்புறும் நிலையில் பாடிய எண்ணுகேன என் சொல்லி எண்ணு கேனோ? என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகம் ஆறாம் திரு முறையின் இறுதிக்கண் அமைந்தது.

## நான்காம் திருமுறை

இதில் 113 திருப்பதிகங்கள் உள்ளன. இதில் முதற் பதிகம் 'கொல்லிப்பண்'ணுக்குரியது. 2 முதல் 7 வரையி லுள்ள பதிகங்கள் 'காந்தாரப் பண்'ணுக்குரியவை; எட்டா வது பதிகம்'பியந்தைக் காந்தார'மாகும். ஒன்பதாம் பதிகம் 'சாதாரிப்'பண்ணுக்கு உரியது. 10, 11 எண்ணுள்ள பதிகங்கள் காந்தார பஞ்சமம் என்ற பண்ணில் அமைந் தவை. 12, 13 ஆம் பதிகங்கள் 'பழந்தக்க ராகம்' என்ற பண்ணுக்குரியன. 14, 15 ஆம் பதிகங்கள். 'பழம் பஞ்சுரம்' என்ற பண்ணுக்கு உரியன. 16 முதல் 18 வரையிலுள்ள பதிகங்கள் மூன்றும் 'இந்தளப் பண்'ணில் அமைந்தவை. 19, 20-ஆம் பதிகங்கள் 'சீகாமரப் பண்'ணுக்குரியன. 21-ஆம் பதிகம் குறிஞ்சிப்பண்ணுக்கு உரியது. இவை சம்பந்தர், அப்பர் ஆகிய இருவர் பாடியுள்ள பதிகங்களை யொத்துப் பண்ணமைந்துள்ளன. இந்தப்பத்துப் பண்களும் திரு நேரிசை, திருவிருத்தம் என்னும் யாப்பியல் விகற்பம் அமைந்த திருப்பதிகங்களும் இந் நான்காம் திருமுறையில் அடங்கும். இவற்றுள் திருநேரிசை 'நேரிசைக் கொல்லி' எனவும், திருவிருத்தம் 'விருத்தக் கொல்லி' எனவும் கொல்லிப் பண்ணில் அடக்குதல் மரபு.

திருநேரிசை: இத்திருமுறையில் 22 முதல் 79 வரை முடியவுள்ள பதிகங்கள் திருநேரிசைப் பதிகங்கள். திரு நேரிசை என்பது 'கூவிளம் புளிமா தேமா கூவிளம் புளிமா தேமா' எனவரும்கட்டளையடியினையுடைய செய்யுளாகும். வண்டுகள் நறுமலர்களில் மகரந்தப் பொடியையும் தேனை யும் மாந்தி அம்மலர்களில் படிந்து இடையீடின்றி முரல்வது போலும் நேரிய இசையமைந்த திருப்பாடல்கள் நேரிசை என்று பெயர் பெறுவன என்பது நேரிசை பற்றிய நுண்ணிய கருத்தாகும். தேவாரத்தில் வரும் இந்நேரிசை யாப்பும் திவ்வியப்பிரபந்தங்களில் வரும் திருக்குறுந்தாண்டக யாப்பும் ஒன்றே என்பது இவ்விருபனுவல்களிலும் வரும் திருப்பாடல்களை ஒப்பு நோக்குவதால் அறியப்படும்.

திருவிருத்தம்: நான்காம் திருமுறையில் 80 முதல் 113 வரையுள்ள பதிகங்கள் கட்டளைக் கலித்துறையாப்பாகிய திருவிருத்தப் பதிகங்கள். ஐஞ்சீரடி நானகாய், அடி தோறும் முதற்சீர் நான்கும் வெண்டளை பிறழாமல் நிற்க, ஐந்தாம் சீராகிய இறுதிச் சீர் கூவிளங்காய், கருவிளங் காய் என்னும் சீர்களுள் ஒன்றாகப் பெற்று, முதற்சீரின் முதலசை நேரசையாயின் ஓரடிக்கு எழுத்துப்பதினாறும், நிரையசையாயின் பதினேழெழுத்தும் உடையதாய் வரும் செய்யுள் கட்டளைக் கலித்துறை என்று சொல்லப் படும். இது தொல்காப்பியத்தில் கூறப்பெறும் யாப்பிலக் கணப்படி ஐஞ்சீர் நான்கடியான் வந்த தரவு கொச்சகம் எனப்படும்.

'விருத்தம்' என்பது வடசொல். இச்சொல்லுக்குரிய பல பொருள்களுள் ஒன்றன் நிகழ்ச்சி அல்லது விருத்தாந்தம் என்பதும் ஒரு பொருளாகும். அப்பர் பெருமான் இறை வனிடம் முறையிட்டுத் தெரிவித்துக் கொள்ளுதற்குரிய செய்திகளாகவும் இறைவன் செய்தருளிய செயல்களாக உலகத்தார்கட்கு அறிவுறுத்த வேண்டிய செய்திகளாகவும் அமைந்த திருத்தகவினவாகிய நிகழ்ச்சிகளைப் புலப்படுத்

தும் நிலையில் அமைந்தவை இத் திருப்பதிகங்களாதலின் இவை திருவிருத்தம் என வழங்கப் பெற்றன என்பது அறிதற்பாலது. இவ்வாறே மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களுள் ஒருவராகிய நம்மாழ்வார் இறைவனை நோக்கி விண்ணப்பம் செய்யும் முறையில் கட்டளைக் கலித்துறை யாப்பில் அருளிய பனுவல் 'திருவிருத்தம்' என்ற பெயரால் வழங்குதல் ஈண்டு நினைவுகூரத்தகும்.

## ஐந்தாம் திருமுறை

திருக்குறுந்தொகை யாப்பிலமைந்த திருப்பதிகங்கள் நூறு கொண்டது ஐந்தாம் திருமுறையாகும். குறுந்தொகை யாப்பு என்பது நாற்சீர் நாலடியாய் அடிதோறும் தேமா, புளிமா என்னும் மாச்சீர்களுள் ஒன்று முதற்சீராகவும், கருவிளம், கூவிளம் என்னும் விளச்சீர்களுள் ஒன்று நான்காம் சீராகவும் இடையிலுள்ள இரண்டு மூன்றாஞ்சீர்கள் பெரும்பாலும் விளச்சீர்களாகவும், சிறுபான்மை மாச்சீர்களாகவும் வரும் செய்யுள் விகற்பமாகும். முதற்சீர் தேமாவாயின் அடியின் எழுத்துத்தொகை ஒன்று நீக்கிப் பதினொன்றாகும்; புளிமாவாயின் அத்தொகை பன்னிரண்டாகும்.

சிவபெருமான் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள தலங்களில் கைத்தொண்டு புரியும் கடமையினை மேற்கொண்ட அப்பர் பெருமான் இறைவனது பேரருளை நினைந்து நடந்து செல்லும் பொழுதும், திருக் கோயில்களில் உழவாரத் தொண்டு முதலிய திருப்பணிகளைச் செய்யும் போதும், தம் பெருமானாகிய இறைவனை முன்னிலையாக்கிப் போற்றும் நிலையிலும், அவ்விறைவனது புகழை நம்போலியருக்கு எடுத்துரைக்கும் நிலையிலும் பாடிப் பரவிப் போற்றுதற்கேற்ற சந்தமாக இத்திருக் குறுந்தொகை யாப்பு அமைந்திருத்தலைக் கண்டு மகிழலாம்.

## ஆறாம் திருமுறை

*திருத்தாண்டகப் பதிகங்கள் அனைத்தும் ஒரு முறை யாகத் தொகுக்கப் பெற்றது ஆறாம் திருமுறையாகும். இத்திருமுறையில் 99 திருப்பதிகங்கள் அடங்கியுள்ளன. தாண்டகம் என்பது, தொல்காப்பியச் செய்யுளியலின்படி எண்சீரான் வந்த கொச்சக ஒரு போகு எனப்படும். அடி தோறும் நான்காம் சீரும் எட்டாம் சீரும் தேமாவாக நிற்ப, மூன்றாம் சீரும் ஏழாஞ் சீரும் பெரும்பான்மை தேமாவா கவும் ஒரோவழிப் புளிமாவாகவும் அமைய இவை யொழிந்த ஒன்று இரண்டு ஐந்து ஆறாஞ்சீர்கள் பெரும்பான்மை காய்ச்சீர்களாகவும் சிறுபான்மை மாச்சீர் விளச்சீர்களா கவும் வருதல் தாண்டகம் என்னும் பாவின் இலக்கணம். தமிழ்ச் செய்யுள் வகையாகிய தாண்டகம் என்னும் யாப்புக்கு மூல இலக்கியமாக விளங்குவன அப்பர் பெருமான் அருளிய இத் தாண்டகத் திருப்பாடல்களே. இவற்றை முதன் முதலாக அருளிச் செய்த இப்பெருமான் 'தாண்டகச் சதுரர்', 'தாண்டக வேந்தர்' எனவும் போற்றப் பெறுவர். திருமங்கையாழ்வார் அருளிச் செய்துள்ள திருநெடுந்தாண்டகம் இங்குக் கூறிய தாண்டக யாப்பில் அமைந்த பனுவலாகும் என்பதை ஈண்டு நினைத்தல் தகும்.*

அகப் பொருள் துறைகள்: *அப்பர் பெருமான் இறை வனைத் தலைவனாகவும் ஆருயிராகிய தம்மைத் தலைவி யாகவும் கருதிய நிலையில் அகப் பொருள் துறையில் சில பதிகங்களை அருளியுள்ளார். இவற்றில் அடிகளார் பெற்ற சிவாநுபவம் இனிது புலனாகின்றது. இவ்வநுபவத்தை நற்றாய் கூற்றாகவும், செவிலித்தாய் கூற்றாகவும் புலப் படுத்திய பாசுரங்கள் 'புணர்ந்துழி உவகையும் பிரிந்துழிக் கலக்கமும்' ஆகிய இருதிறத்தையும் விளக்குவனவாக உள்ளன. ஆருயிராகிய தலைவி ஆண்டவனாகிய தலைவ னுடன் கொண்டிருக்கும் பிடிப்பை,*

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்;
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்;
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்;
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்:
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்;
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தை;
தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்;
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே. (6.25:7)

என்ற அற்புதப் பாடலால் புலப்படுத்துவர். இப்பாடல் வரலாற்றுப் புதினம் படைப்பதில் ஈடும் எடுப்பும் அற்ற அமரர் கல்கி (இரா. கிருட்டிண மூர்த்தியின்) புதினமொன்றிலும் இடம் பெற்றுள்ளது. சங்க காலத்தில் காதலின் பெருமையைத் தலைவன்-தலைவி உறவாகக் காட்டித் தமிழர்களின் நாகரிகத்தைப் புலப்படுத்தினர் சங்கச் சான்றோர்கள். நாயன்மார்கள் ஆழ்வார்கள் காலத்தில் காதல் உணர்வு பக்தி உணர்வாகப் பரிணமித்து ஆருயிர்-ஆண்டவன் உறவாக மாறி ஈறிலாப் பேரின்பத்தை விளைவிப்பதாக அமைந்ததைக் கண்டு மகிழ்கின்றோம். தம்மை ஆட்கொண்ட இறைவனைச் 'செல்வன்' என்றும் 'மணாளன்' என்றும் மகிழ்ந்து போற்றும் பதிகங்கள் இக்கருத்தை ஒரு புடை விளக்குவனவாக உள்ளன என்று கருதுவதில் தவறில்லை.

**அருளிச் செயல்கள் கூறும் செய்தி:** இச் செய்தி சமயச் சார்பாகவும், தத்துவங்களை விளக்கும் போக்கிலும், ஆருயிர்க்கும் ஆண்டவனுக்கும் உள்ள உறவினை விளக்கும் போக்கிலும் அமைந்துள்ளது. உலகியல் பற்றிய செய்தி இவற்றுடன் கலந்து வருவதையும் கண்டு மகிழலாம்.

(1) அறவாழி அந்தணனாகிய இறைவன் பிறரது வறுமைத் துயர்கண்டு பொறாது தம்பால் உள்ள பொருள்களை இல்லை என்னாது ஈத்துவக்கும் அருளுடைச் செல்வர்கட்கென்றே திருவருட் செல்வத்தை உரிமை

செய்து வைத்துள்ளான். இறைவனது இத்திருக்குறிப்பை நன்கு உணர்ந்து தெளிந்து இரவலர்க்கு ஈந்து மகிழும் ஈகைத் திறனை வளர்த்துக் கொள்ள வேண்டும். இதனை,

> இரப்பவர்க் கீய வைத்தார்;
> ஈபவர்க் கருளும் வைத்தார்;
> கரப்பவர் தங்கட் கெல்லாம்
> கடுநர கங்கள் வைத்தார். *(4.38:10)*

என்ற திருநேரிசைப் பகுதியால் புலப்படுத்துவர். இப் பாடல் செல்வம், நல்குரவு என்னும் மேடு பள்ளங்களில் சிக்கிக் களிப்பும் கவர்ச்சியும் கொண்டு தம்முணர்வு இழந்து தடுமாறும் உலக மக்களுக்குக் கூறும் அறவுரையாகத் திகழ் கின்றது.

(2) இறைவனை வழிபடுங்கால், அப்பெருமான் வழி படுவோர் மனத்தையே கோயிலாகக் கொண்டு எழுந் தருளித் தன் எளிமைத் திறத்தைப் புலப்படுத்துவான்; எழுந்தருளும் போது உறுதிப் பொருளையும் அறிவுறுத்து வான். உள்ளமெனும் அகலில் உணர்வு என்னும் நெய்யை ஊற்றி உயிராகிய திரியில் ஞானத் தீக்கொளுத்தி, ஒன்றி நினைக்கும்போது அவனைக் காணலாம் (4.75:4). உடம் பென்னும் கோயிலில் மனமாகிய இலிங்கத்திற்கு நேய மென்னும் நீராட்டிப் பூசை செய்யலாம் என்று அகப்பூசை செய்யும் முறையினைப் புலப்படுத்துவார் (4.76:4) அடிகள். இறைவனைப் போதோடு நீர் சுமந்தேத்திப் புறத்தே வழி பாடு செய்வோர் வழிபாட்டின் முடிவில் முதல்வனைத் தம் உள்ளத்தே ஒடுக்கிச் சிந்தித்துப் போற்ற வேண்டும் (4.7:1); ஐம்புலனையும் அகத்தடக்கி எப்போதும் இனி யானைக் காணவேண்டும் (4.7:3).

(3) ஐந்தெழுத்தின் சிறப்பைப் பல திருப்பாடல்களில் வெளிப்படையாகவேகூறியுள்ளார் நாவுக்கரசர் பெருமான். அருந்தவம் நல்கும் அஞ்செழுத்தினை ஓதி உலக மக்கள்

அனைவரும் இடர் நீங்கி இன்புறுதல் வேண்டும் என்பது அப்பர் பெருமானின் பெரு வேட்கையாகும். சொற்றுணை வேதியன் (4.11) என்ற பதிகத்தில் ஐந்தெழுத்தின் பெருமையை 'நாவினுக் கருங்கலம் நமச்சிவாயவே'(2), 'நண்ணி நின்றறுப்பது நமச்சிவாயவே'(3), 'நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே'(4), 'நங்களுக் கருங்கலம் நமச்சிவாயவே'(5) என்றெல்லாம் பன்னியுரைக்கின்றார்; முத்தாய்ப்பாக,

நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்(து)
ஏத்தவல் லார்தமக் கிடுக்கண் இல்லையே(10)

என்று கூறி முடிப்பர். கற்றுணைப் பூட்டி இவரைக் கடலிற் பாய்ச்சியபோது நற்றுணையாக நின்றது இந்த அஞ்செழுத்து மந்திரந்தானே! திருக்குறுந்தொகைப் பதிகம் ஒன்றில் (5.90),

நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே(2)

என்று ஐந்தெழுத்து மந்திரத்தின் சிறப்பை மிகவும் தெளிவாக்குகின்றார். 'நல்லக விளக்கு நமச்சிவாய மந்திரம்' என்பது இவர் காட்டும் மதிவிளக்கு. சிவகதி காட்டும் விளக்கும் இதுதான். இதனால்தான்,

கருவாய்க் கிடந்துன் கழலே
நினையும் கருத்துடையேன்:
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம்
பயின்றேன்; உனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாய
நமவென்று நீறணிந்தேன்;
தருவாய் சிவகதிநீ, பாதிரிப்
புலியூர் அரனே. (5.90:2)

என்ற திருவிருத்தத்தால் தமக்குச் சிவகதி அருளுமாறு திருப்பாதிரிப் புலியூர்ப் பெருமானை வேண்டுகின்றார்.

(4) தொண்டர்க்குத் தொண்டராம் நற்பேற்றினை விரும்பியவர் நாவுக்கரசர் பெருமான். அடியார்க்கடியராய் வாழும் அத்திருத் தொண்டின் நிலையினைத் தவிரத் தமக்குப் பேரின்பம் தரும் பதவி பிறிதொன்றும் இல்லை என்பார்.

அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும்
கண்டு வீற்றிருக் கும்கருத் தொன்றிலோம்;
வண்டு சேர்மயி லாடு துறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே. (*5.39:3*)

என்ற பாடலில் இக்கருத்தினைக் கண்டு தெளியலாம். திருவாரூர்ப் பதிகம் ஒன்றில் (*4.101*),

பொய்யன் பிலாஅடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. (*9*)

என்று தம் விருப்பத்தைத் தெரிவிக்கின்றார். அடியார்க்குத் தொண்டுபட்டு, மனிதரில் தலையான அப்பெருமக்களை வாழ்த்தி வணங்கிப் போற்றுதலே மகிழ்வளிக்கும் என்பதனைத் தெளிந்தவர் வாகீசர். ஆகவே,

வானந் துளங்கிலென்? மண்கம்ப
மாகில்என்? மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு
மாறிலென்? தண்கடலும்
மீனம் படில்என்? விரிசுடர்
வீழிலென்? வேலைநஞ்சுண்(டு)
ஊனம் ஒன்றில்லா ஒருவனுக்கு
ஆட்பட்ட உத்தமர்க்கே.(*4.112:8*)

என்ற திருவிருத்தப் பாடலால் காட்டுவர். சிவபெருமானுக்கு ஆட்பட்ட அடியவர்கட்கு எந்த நிகழ்ச்சியும்

மனக்கலக்கம் உண்டாக்குவதில்லை என்று அவர்தம் மன உறுதியை நிலை நாட்டுகின்றார்.

சிவனடியார்கள் சுற்றத் தொடரை அறுத்தவர்கள்; புலன்களை அகத்தடக்கி, மடவார் போகத்தை அறவே துறந்து திருமடத்தில் தங்கியிருந்து சிவபரம் பொருளை இடைவிடாது சிந்திப்பவர்கள். ஆதலின் இவர்தம் திருவுள்ளத்தில் என்றும் இறைவன் எழுந்தருளியிருப்பான். இதனை,

மடமன்னும் அடியார்தம்
மனத்திலுள்ளார். (6.10:6)

என்ற தொடரில் காட்டுவர். திருநீறும் அக்கமணியும் பூண்டு சிவபெருமானை இடையறாது போற்றும் மெய்யடியார்களைச் சிவபெருமானாகவே மதித்து, அன்னவர் பிறந்த குலம் முதலியவற்றைக் கருதாமல், வழிபடும் அன்புடையார் திருவுளத்திலே காண்டற்கரிய பெருமானைக் கண்டு மகிழலாம் என்பது அப்பர் பெருமானின் திருவருளநுபவமாகும்.

எவரேனும் தாமாக விலாடத் திட்ட
திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி
உவராதே அவரவரைக் கண்ட போது
உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி
இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி
இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. (6.6:13)

என வரும் கன்றாப்பூர்த் திருத்தாண்டகத்தால் இந்த உண்மையைத் தெளிவாக்குதல் காணலாம். கன்றாப்பூர் நடுதறி-கன்றாப்பூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் தம் உள்ளத்தில் ஊற்றமாகப் பதிந்துள்ள இக்கருத்தினை,

சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க் கேகாந்தர் அல்ல ராகில்;
அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் யாம்வணங்கும் கடவு ளாரே (*6.95:10*)

என்ற பொதுத் தாண்டக மொன்றில் நிலை நாட்டுவர்.

(5) நாவுக்கரசர் பெருமான் தம் காலத்திற்கு முன் தோன்றிய சைவப் பெருமக்களையும் தம் காலத்தில் உடன் வாழ்ந்த நாயன்மார்களையும் சிறப்பித்துப் போற்றியுள்ளார்.

‘............நல்லூரகத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று
சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியோடும்
அங்கோர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை யுரைக்கு
மன்றோ இவ்வகலிடமே (*4.97:7*)

என்ற பாடற் பகுதியிலுள்ள குறிப்பு அமர்நீதி நாயனாரைப் பற்றியது. “நல்லருந்தவத்த கணம் புல்லர்”(*4.49:9*) என்ற பாடற் குறிப்பு கணம் புல்லர் என்பாரைப் பற்றியது.

காப்பதோர் வில்லும் அம்பும்
கையதோர் இறைச்சி பாரம்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத்
தூயவாய்க் கலசம் ஆட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய
குருதிநீர் ஒழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார். (*4.49:7*)

*என்ற திருநேரிசைப் பகுதியும்,*

குவப் பெருந் தடக்கை வேடன்
கொடுஞ்சிலை இறைச்சி பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித்
தூயவாய்க் கலசம் ஆட்ட
உவப்பெருங் குருதி சோர
ஒருகணை யிடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவு செய்தார் (*4.65:8*)

*என்ற திருநேரிசைப் பகுதியும்* கண்ணப்பரைப்பற்றியவை.

கல்லினால் எறிந்து கஞ்சி
தாமுணும் சாக்கி யனார்
நெல்லினார் சோறு ணாமே
நீள்விசும் பாள வைத்தார். (*4.49:6*)

*என்ற குறுக்கை வீரட்டனாரைப் பற்றிய திருநேரிசைப்* பகுதி சாக்கிய நாயனாரைப் *பற்றியது. இவர்கள் யாவரும் வாகீசருக்கு முன்தோன்றிய பெருமக்கள்.*

*அப்பர் காலத்தவர்* அப்பூதியடிகள் *என்பதை நாம் அறி* வோம்.

அஞ்சிப்போய்க் கலிமெலிய
அழலோம்பும் அப்பூதி (*4.12:10*)

*என்ற பாடற் பகுதி இவ்வடியாரைப் பற்றியது.*

ஆரூர் நறுமலர் நாதன்
அடித்தொண்டன் நம்பிநந்தி (*4.102:2*)

*என்ற பாடற் பகுதியும்,*

பொடிக்கொண்டு பூசிப் புகுந்தொண்டர்
பாதம் பொறுத்த பொற்பால்
அடித்தொண்டன் நந்தியென் பான் (*4.102:4*)

*என்ற பாடற் பகுதியும் உடன் வாழ்ந்த* நமிநந்தியடிகள் *பற்றியவை.*

திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தார் (5.50:8)

என்ற திருக்குறுந்தொகைப் பகுதி காழிப் பிள்ளையாரைப் பற்றியது.

(6) சொல்வேந்தர் தாம் அருளிய திருப்பதிகப் பாடல்களில் பொருள் விளக்கத்திற்காக உவமை, உருவகம் முதலிய அணிகளைச் சிறப்பாகக் கையாள்வர். மூன்று காட்டுகள் தருவேன்.

முதலாவது : ஐம்பொறிகளும் உயிரைச்சூழ்ந்து நின்று தத்தம் பொருள்கள்மேல் செலுத்துவதனால் உயிர் அவற்றால் ஈர்க்கப்பட்டு அலைகின்றது. அப் பொறிகளால் தனக்கு நேரவிருக்கும் அழிவினைச் சிந்திக்க நேரமின்றி ஐம்பொறிகளால் பெறும் இன்பத்திலேயே அழுந்திக் கிடக்கின்றது. இந்த உயிரின் நிலையை உலைப்பானை நீரில் இடப்பெற்ற ஆமையின் நிலையை உவமானமாகக் கொண்டு விளக்குகின்றார். உலைப்பானை நீர் சிறிது சூடேறி இள வெந்நீராகிய நிலையில் ஆமை அதிற் குதித்து மகிழ்ந்து ஆடுகின்றது. ஐம்பொறிகளால் ஈர்க்கப்பெற்ற ஆன்மா பின் விளைவறியாது சிறிது பொழுது மகிழும் மயக்க அவல நிலைக்கு உலையேற்றிய இளவெந்நீரில் குதித்தாடும் ஆமையின் தெளிவற்ற மகிழ்ச்சியினை உவமையாகக் குறித்த நயம் உணர்ந்து மகிழத் தக்கது. (4.79:10)

இரண்டாவது : சிறியதோர் குடிசையினை அமைப்பதில் முதலில் கால்களை நடுகின்றோம்; இரு பக்கமும் பக்க வாரைகளாகிய கைகளை ஏற்றுகின்றோம். அவற்றின் மீது சார்த்துக் கழிகளை வரிந்து கட்டி அவற்றின்மீது ஓலை முதலியவற்றை வேய்கின்றோம். ஓரங்களில் மண்ணைக் குழைத்துச் சுவரெடுக்கின்றோம். இந்தச் சுவர்களின் முன் பக்கத்தில் நுழைவாயிலும் பின்பக்கத்தில் புழைக்கடை

வாயிலும் அமைக்கின்றோம். பக்கச் சுவர்களில் காற்றோட்டம் இருப்பதற்காகப் பலகணிகளை அமைத்துக், கண்டோர் யாவரும் விரும்பிக் குடியேறுவதற்கேற்பக் கவர்ச்சியுடையதாய்ச் செய்து முடிக்கின்றோம். இங்ஙனமே அருளாளனாகிய இறைவனும் உயிர்களாகிய நாம் விரும்பித் தங்குதற்கேற்ற கவர்ச்சியுடையதாக மக்கள் யாக்கையாகிய இந்த உடம்பை நமக்குப் படைத்து வழங்கியுள்ளான். இதனைக் 'கால்கொடுத்திருகை' (4.33: 1) என்ற திருநேரிசையில் சுவை பொருந்தக் காட்டுவர் நாவுக்கரசர். இங்ஙனம் ஆருயிர்களுக்கென ஆண்டவன் அமைத்த யாக்கையாகிய இந்த இல்லம், உயிர் மட்டுமே நிலையாய்த் தங்குவதற்கேற்ற சொந்த வீடாக அமையாமல், ஐம்பொறிகள் தங்குதற்குரிய உரிமையிடமாகவும், அவ்வைம் பொறிகளுக்கிடையே உயிர் ஒதுக்குக் குடியிருக்க வேண்டிய துச்சிலாகவும் அமைந்து, உயிர் வாழ்வுக்குப் பலவகைத் துன்பங்களையும் விளைப்பதாயினும், இக்குடிசையிற் புகுந்த உயிர் இதனை விட்டு மீள விரும்பாததொரு கவர்ச்சியினை இதற்கு உண்டாக்கி இக் குடிசையில் உயிர்களை இறைவன் குடியேற்றினான் என்பார், "மால் கொடுத்து ஆவி வைத்தார் மாமறைக் காடனாரே' என்று கூறுவார்.

மூன்றாவது : நாவுக்கரசர் தொண்டு செய்வதில் சிறந்த உழவராகத் திகழ்ந்தவர்; உழவாரப்படையைத் தாங்கிக் கொண்டிருப்பவர். சிவகதியாகிய நற்பயிர் விளைவதற்கு உலக மக்கள் கடைப்பிடிக்க வேண்டும் முறைகளை,

மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற்
சிவகதி விளையு மன்றே. (4.72: 2)

என வரும் திருநேரிசையில் உருவகமாக விரித்துக் கூறிய முறை நம் உள்ளத்தை ஈர்ப்பதாகும்.

(7) இறைவன் இயல்பைப் பல இடங்களில் விளக்கி யுள்ளார். இறைவனின் இயல்பை சொரூப நிலை, தடத்த நிலை என்று பிரித்துப் பேசும் சைவ சித்தாந்தம். ஐந்து தொழில்களைப் புரியும்போது-தடத்த நிலையில்-இறைவன் அவற்றிற்கேற்ப வடிவும் பெயரும் கொண்டு வரையறைப் பட்டுப் பலவாகி நிற்பான். அத்தொழில்களைப் புரியாமல் அவன் வாளா இருக்கும்போது-சொரூப நிலை-வடிவு பெயர் முதலியன ஒன்றும் இன்றி எல்லையற்ற பொருளாக நிற்பான்.

சொரூப நிலையில் உள்ள இறைவன் உயிர்களால் அறியப்படுபவன் அல்லன்; அறியப்படாதவனும் அல்லன். 'உயிர்களால் அறியப்படாதவன் இறைவன்' என்பதற்கு 'ஏனைய பசு, பாசங்களை அறியும் முறையில் அறியப் படாதவன்' என்பது பொருள். 'அறியப்படுபவன்' என்பதற்கு 'வேறு முறையில் அறியப்படுபவன்' என்பது பொருள். அதாவது, அவனைப் பாச, பசு, ஞானங்களால் அறிய முடியாது. இக்கருத்தினை,

மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னின் அல்லான்;
ஒப்புடையன் அல்லன்; ஒருவன் அல்லன்;
ஓர்ஊரன் அல்லன்; ஓர் உவமன் இல்லி;
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்த இவ்வண் ணத்தன்
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே.
(6.97:10)

என்ற தாண்டகத்தில் காட்டுவர். இந்த நிலையைப் 'பதி ஞானத்தால்தான் அறிய முடியும். இங்குக் காட்டப்பட்ட தாண்டகம் இறைவனின் சொரூப நிலையை விளக்குவதற்கு

நல்லதோர் எடுத்துக்காட்டு. இதிலுள்ள "இப்படியன்... காட்டொணாதே" என்ற பகுதி "இறைவன் பாசஞான பசுஞானங்கட்கு அகப்படாதவன்' என்பது பொருளாதலை அறிய வேண்டும். இங்ஙனம் அப்பர் பெருமானின் திருப் பாடல்களில் பல சித்தாந்த உண்மைகளையும் கண்டு தெளி யலாம்.

**பதிகங்களின் சிறப்பியல்புகள்:** அப்பர் பெருமான் அருளி யுள்ள ஏனைய இருவர் (சம்பந்தர், சுந்தரர்) பதிகங்களி லும் காணப்பெறாத திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந் தொகை, திருத்தாண்டகம் என்னும் யாப்பு விகற்பங்கள் சிறப்பாக அமைந்துள்ளன. நமக்குக் கிடைத்துள்ள 312 பதிகங்களுள் நான்காம் திருமுறையில் 1-21 பதிகங்கள் காழிப் பிள்ளையார், நம்பியாரூரர் ஆகிய இருவர் பாடிய பதிகங்களையொத்து அமைந்துள்ளன. ஏனைய 291 பதிகங்களும் மேற்குறிப்பிட்ட யாப்பு விகற்பங்களாய், அப்பர் பெருமானுக்கே யுரிய சொல் நடையின் சிறப்பியல் பினை விளக்கும் நிலையில் அமைந்துள்ளன.

நாவுக்கரசர் பெருமான் அருளிய பதிகங்களில் 'சொற் றுணை வேதியன்' (4.11) என்னும் பதிகம் 'நமச்வாய' என்னும் ஐந்தெழுத்தின் சிறப்பினை விளக்குவதாதலின் அது 'நமச்சிவாயத் திருப்பதிகம்' என்ற திருநாமம் பெறு கின்றது. பொருளமைப்பாற் பெயர் பெற்றவை: திருஅங்க மாலை (4.9), தசபுராணம் (4.14), குறைந்த நேரிசை (4.78:79) கால பாசத் திருக்குறுந்தொகை (5.95), புராணத் திருக்குறுந் தொகை (5.100), இலிங்க புராண ஆதித்திருக் குறுந்தொகை (5.95) பாவநாசத் திருக் குறுத்தொகை (5.99) பெரிய திருத்தாண்டகம் (6.1), மறுமாற்றத் திருத்தாண்டகம், அடைவுத் திருத்தாண் டகம் (6.71), வினாவிடைத் திருத்தாண்டகம் (6.97), அடையாளத் திருத்தாண்டகம் என்பன. பாடல்

தோறும் பயின்ற சொற் பொருளமைப்பால் பெயர் பெற்றவை. கொப்பளித்த திருநேரிசை, நினைந்த திருநேரிசை (4.74) ஆருயிர்த் திருவிருத்தம் (4.84), சரக்கறை திருவிருத்தம்(4.111), பசுபதி திருவிருத்தம் (4.110), நின்ற திருத்தாண்டகம் (6.94), திருவடித் திருத்தாண்டகம், புக்க திருத்தாண்டகம், காப்புத் திருத்தாண்டகம், ஏழைத் திருத்தாண்டகம் போற்றித் திருத்தாண்டகம் (6.55, 56, 57) என்பனவாகும். முதற் குறிப்பாற் பெயர் பெற்றது 'சிவனெனும் ஓசை' (4.8) என்ற பதிகம். ஈற்றுத் தொடரால் பெயர் பெற்றது. பாவநாசத் திருப்பதிகம் (4.15). பொருள் தொகையால் பெயர் பெற்றவை; மனத்தொகைத் திருக்குறுந்தொகை (5.96), சித்தத் தொகைத் திருக்குறுந் தொகை (5.97), உள்ளத் தொகைத் திருக்குறுந்தொகை (5.98), க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் (6.70) என்ற பதிகங்களாகும். பாடல்களில் பயின்ற ஈற்றுச் சொல்லால் பெயர் பெற்றவை, 'மறக்கிற்பனே' (5.93), 'தொழற்பாலதே' (5.94) என்னும் திருக்குறுந்தொகைப் பதிகங்களாகும். பொது வகையாற் பெற்ற பதிகங்கள்: தனித் திருநேரிசை (4.75, 6.77) தனித் திருக்குறுந்தொகை (5.89, 91), தனித் திருத்தாண்டகம், பலவகைத் திருத்தாண்டகம் (6.93), பரவுந் தனித்தாண்டகம் (6.96) என வரும் திருப்பதிகங்களாகும்.

சம்பந்தரும், சுந்தரரும் தாம் பாடிய பதிகங்களின் இறுதிப் பாடல்களில் பாடினோராகிய தம் பெயரையும், அத்திருப்பதிகங்களைக் காதலாகி ஓதுவோர் பெறும் பயனையும் விரித்துரைத்தமைபோல, அப்பர் பெருமான் தாம் அருளிய திருப்பதிகங்களின் இறுதிப் பாடல்களில் அவற்றைக் குறிப்பிடும் வழக்கத்தை மேற்கொள்ளவில்லை. ஆனால், காலத்தைப் புறச்சமயச் சூழலில் கழித்து, இறைவனைத் தாம் மறந்திருந்த பெருங் குற்றத்தை எண்ணி உருகிய அப்பரடிகள், இங்ஙனம் காலத்தைக் கொன்னே கழித்த தம்மையும் ஒரு பொருளாகக் கொண்டு, ஆட்

கொண்டு உய்வித்த பெருமானது பெருங்கருணைத் திறத்தை உணர்த்தும் பாங்கில் "பிழை செய்த இராவணனை உய்வித்த அருளால் குற்றமுடைய என்னையும் கோது நீக்கி ஆட்கொண்டான்" என உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் முறையில் இராவணனைப்பற்றிய குறிப்பைப் பதிகந்தோறும் விடாது குறித்தருள்கின்றார். இது திருத்தொண்டர் புராணத்தாலும்[1] இனிது புலனாகும். இது திருக்கடைக் காப்புப் போலவும் அமைந்துள்ளது.

1. பெ. பு. திருநாவுக் 75

# பின்னிணைப்பு-(1)
## பயன்பட்ட நூல்கள்


ஆழ்வார்கள் : நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் (கி. வேங்கடசாமி ரெட்டியார் 2-ஆம் பதிப்பு (1981), திருவேங்கடத்தான் திருநெறி மன்றம், 31, பெருமாள் முதலித்தெரு, இராயப்பேட்டை, சென்னை-600 014).

இலக்குவன், அரு. : (பதிப்பு) அப்பர் பெருமான் வாழ்வும் வாக்கும் (பூம்புகார்ப் பேரவைக் கல்லூரி வெளியிடு, மேலையூர், 609 107. முதற்பதிப்பு-1980)

சிவஞான முனிவர் : காஞ்சி புராணம் (கழக வெளியீடு)

சுப்புரெட்டியார், ந. சைவ சமய விளக்கு, பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை-600 108 முதற்பதிப்பு-1984)

சேக்கிழார் : பெரியபுராணம் (திருப்பனந்தாள் மடத்து வெளியீடு-1978)

தாயுமான அடிகள் : தாயுமான சுவாமிகள் பாடல்கள் (தருமையாதீனம், மயிலாடுதுறை, 1965)

பரஞ்சோதியார் : திருவிளையாடற் புராணம் (வேங்கடசாமி நாட்டார் உரை-கழகம்

பாலசுப்பிரமணிய முதலியார் : தேவார அடங்கன் முறை (சமாஜப் பதிப்பு-1953)

மாணிக்கவாசகர் : திருவாசகம் (தண்டபாணி தேசிகர் குறிப்புரை, தருமையாதீன வெளியீடு 1949-முதற்பதிப்பு)

வெள்ளைவாரணன், க. : பன்னிரு திருமுறை வரலாறு-I அண்ணமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்-1962)

வெள்ளைவாரணன், க. : பன்னிரு திருமுறை வரலாறு-II ஷை-ஷை-1969)

# பின்னிணைப்பு-(2)
# நாவுக்கரசர் வழிபட்ட தலங்கள்

| தலம் | பதிகம் | பக்கம் |
|---|---|---|
| அண்ணாமலை | 4.63; 5.4; 5.5; 5.95 | 214 |
| அதிகை வீரட்டாணம் | 4.1; 4.2; 4.10; 4.24; 4.25: 4.26; 4.27; 4.28; 4.63; 4.104; 5.4; 5.5; 5.53; 5.54 5.95; 6.3, 6.4; 6.5; 6.6; 6.7; 6.98 | 17,28 34,46 49,50 52. |
| அம்பர் பெருந்திருக்கோயில் | இல்லை | 158 |
| அரிசிற்கரைப்புத்தூர் | 5.61 | 129 |
| அவளிவணநல்லூர் | 4.59 | 107 |
| அன்பில் ஆலந்துறை | 5.80 | 205 |
| அன்னியூர் | 5.8 | 90 |
| ஆக்கூர் | 6.21 | 161 |
| ஆப்பாடி | 4.48 | 93 |
| ஆமாத்தூர் | 5.44; 6.9 | 55 |
| ஆரூர் | 4.4; 4.5; 4.19; 4.20; 4.21; 4.52; 4.53; 4.101; 4.102, | 131 144 |

| தலம் | பதிகம் | பக்கம் |
|---|---|---|
| | 5.6; 5.7; 6.24: 6.25; 6.26 6.27; 6.28; 6.29; 6.30; 6.31; 6.32; 6.34 | |
| ஆரூர் அரநெறி | 4.17;6.33 | 150 |
| ஆலங்காடு | 4.68;6.78;6.79 | 229 |
| ஆலம்பொழில் | 6.86 | 203 |
| ஆலவாய் | 4.62; 6.19 | 262 |
| ஆவடுதுறை | 6.46; 5.29; 4.56; 4.57; 6.47 | 97, 194 |
| ஆவூர் பசுபதீச்சரம் | இல்லை | 107 |
| ஆனைக்கா | 5.31; 6.62; 6.63 | 205 |
| இடைமருதூர் | 4.35; 5.14; 5.15; 6.16: 6.17 | 100 |
| இராமேச்சுரம் | 4.61 | 265 |
| இன்னம்பர் | 4.72; 4.100; 5.21; 6.89 | 199 |
| எதிர்கொள்பாடி | இல்லை | 89 |
| எறும்பியூர் | 5:74; 6.91 | 207 |
| ஐயாறு | 4.3; 4.13; 4.38; 4.39; 4.91; 492; 498; 527; 528; 540 6.37, 6.38 | 243, 247 |
| ஒற்றியூர் | 4.45; 4.46; 4.86; 5.24; 6. 45 | 225 |
| ஒத்தூர் | இல்லை | 216 |
| ஓமாம்புலியூர் | 6.88 | 93 |
| கச்சி ஏகம்பம் | 4.7; 4.44; 4.99; 5.47; 5.48 5.64; 6.65 | 217, 222 |
| கச்சிமயானம் (வைப்புத்தலம்) | | 219 |
| கச்சிதிருமேற்றளி | 4.43 | 220 |

# பின்னிணைப்பு (3)

(அ) அட்டவீரட்டத் தலங்கள் (சிவபெருமானின் வீரச் செயல் களைக் காட்டுபவை.)

1. திரு அதிக வீரட்டானம் (திருபுரத்தை எரித்தது).
2. திருக்கடவூர் வீரட்டம் (காலனைக் காலால் உதைத்தது)
3. திருக் கண்டியூர் வீரட்டம் (பிரமனின் சிரசைக் கிள்ளியது.)
4. திருக்குறுக்கை வீரட்டம் (மன்மதனை எரித்தது)
5. திருக்கோவலூர் வீரட்டம் (அந்தகாசூரனைச் சங்கரித்தது)
6. திருப்பறியலூர் வீரட்டம் (தக்கன் வேள்வி தகர்த் தது.)
7. திருவிற்குடி வீரட்டம் (சலந்தராசுரனைச் சங்க ரித்தது.)
8. திருவழுவை வீரட்டம் (வைப்புத் தலம்) மாயூரத் தருகே உள்ளது.

(ஆ) சப்தஸ்தானத் தலங்கள் (ஐயாற்று ஏழூர் வலம் வரும் விழாத் தலங்கள்.)

1. திரு ஐயாறு
2. திருக்கண்டியூர் வீரட்டம்
3. திருச்சோற்றுத்துறை
4. திருநெய்த்தானம் (தில்லை ஸ்தானம்)
5. திருப்பழனம்
6. திருப்பூந்துருத்தி
7. திருவேதிக்குடி

(இ) முசுகுந்த சக்கரவர்த்தி வழிபட்ட ஏழுவிடங்க மூர்த்திகள் (தியாகராசத் தலங்கள்)

1. திருவாரூர் வீதிவிடங்கன், அஜபா நடனம்
2. திருக்காறாயில் ஆதிவிடங்கர், குக்குட நடனம்
3. திருக்கோளிலி அவனிவிடங்கர், உன்மத்த நடனம்
4. திருநல்லாறு நகரவிடங்கர், உன்மத்த நடனம்
5. திருநாகை சுந்தரவிடங்கர், பாள வாரா தரங்க நடனம்
6. திருமறைக்காட்டுப் புவனவிடங்கர், ஹம்ஸபாத நடனம்
7. திருவாய்மூர் மூலவிடங்கர், கமல நடனம்

(ஈ) பஞ்சபூதத் தலங்கள்

1. திருஆனைக்கா, காவிரி, கொள்ளிடம் ஆகிய ஆறுகட்கு இடைப்பட்ட தலம். மூலத்தானத்தில் எப்பொருளும் நீர் கசிந்து கொண்டே இருக்கும். (அப்பு—நீர்)
2. திருவண்ணாமலை—அரனார் அழலுருவாய் நின்ற தலம் (தேயு - தேஜஸ் - நெருப்பு)
3. திருக்காளத்தி-மூலத்தானத்துள்ளிருக்கும் விளக்குகள் எப்போதும் காற்றில் அசைந்து கொண்டே இருக்கும். (வாயு—காற்று)
4. கோயில் (சிதம்பரம்) ஆகாயம். இதனை அறிவுறுத்துவதற்குப் பல பொன் வில்வ மாலைகள் தொங்க விடப் பெற்றுள்ளன. (திரை நீக்கித் தரிசிப்பதால் இஃது இரகசியமாகின்றது).
5. திருஆரூர் (பிருதிவி—பூமி)-இதை இவ்வாறு கருதுவதுண்டு. ஆனால் கச்சி ஏகம்பம் மணல் இலிங்கமுள்ள தலமாதலால் இதையே பிருதிவித் தலமாகக் கொள்வர் பெரும்பாலோர்.

(உ) பண்டை நாட்டுப் பிரிவின்படி (சேர, சோழ, பாண்டியர் காலம்)

| | | |
|---|---|---|
| 1. | சோழ நாட்டு சிவத்தலங்கள் | 190 |
| 2. | ஈழநாட்டுத் தலங்கள் | 2 |
| 3. | பாண்டிநாட்டு சிவத்தலங்கள் | 14 |
| 4. | மலைநாட்டுக் சிவத்தலம் | 1 |
| 5. | கொங்கு நாட்டுச் சிவத்தலங்கள் | 7 |
| 6. | நடுநாட்டுச் சிவத்தலங்கள் | 22 |
| 7. | தொண்டை நாட்டுச் சிவத்தலங்கள் | 32 |
| 8. | துளுவ நாட்டுச் சிவத்தலம் | 1 |
| 9. | வடநாட்டுச் சிவத்தலங்கள் | 5 |
| | | 274 |
| | அண்மையில் கண்டறிந்த திருவிடைவாய் (சோழ நாடு) | 1 |
| | ஆக மொத்தம் | 275 |

# பேராசிரியர்
# டாக்டர் ந. சுப்பு ரெட்டியாரின்
# நூல்கள்

**ஆசிரியம் :**

1. தமிழ் பயிற்றும் முறை
2. கவிதை பயிற்றும் முறை
3. அறிவியல் பயிற்றும் முறை
4. கல்வி உளவியல் கோட்பாடுகள்
5. யுனஸ்கோ : அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

**இலக்கியம் :**

6. கவிஞன் உள்ளம்
7. காலமும் கவிஞர்களும்
8. காதல் ஓவியங்கள்
9. அறிவுக்கு விருந்து
10. முத்தொள்ளாயிர விளக்கம் (பதிப்பு)
11. பரணிப் பொழிவுகள்
12. அறிவியல் தமிழ்
13. திருக்குறள் கருத்தரங்கு மலர்—1974 (பதிப்பு)
14. கம்பனில் மக்கள் குரல்
15. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
16. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்

**சமயம், தத்துவம் :**

(அ) விளக்க நூல்கள் :

17. முத்திநெறி (தமிழக அரசு பரிசு பெற்றது)
18. சிலநோக்கில் நாலாயிரம்
19. வைணவமும் தமிழும்
20. சைவசமய விளக்கு
21. ஆன்மிகமும் அறிவியலும்

22. வைணவ உரைவளம் (ஐதிகம், இதிகாசம்,சம்வாதம்)
23. கலியன் குரல்

(ஆ) திருத்தலப் பயண நூல்கள் :

24. மலைநாட்டுத் திருப்பதிகள்
25. தொண்டை நாட்டுத் திருப்பதிகள்
26. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்
27. வடநாட்டுத் திருப்பதிகள்
28. சோழநாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி (த. அ. ப. பெற்றது)
29. சோழநாட்டுத் திருப்பதிகள் - இரண்டாம் பகுதி (ஷை)
30. தம்பிரான் தோழர்
31. நாவுக்கரசர்
32. ஞானசம்பந்தர்
33. மாணிக்கவாசகர்

திறனாய்வு :

34. பாட்டுத் திறன்
35. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
36. அகத்திணைக் கொள்கைகள்
37. புதுக்கவிதை-போக்கும் நோக்கும்
38. கண்ணன்பாட்டுத் திறன்
39. பாஞ்சாலி சபதம்-ஒரு நோக்கு
40. பாரதீயம் (த. அ. ப. பெற்றது)
41. குயில்பாட்டு-ஒரு மதிப்பீடு
42. உயிர்தந்த உத்தமன் (பதிப்பு)
43. ஆழ்வார் அமுது
44. கீதைக்குறள் (பதிப்பு)
45. விட்டு சித்தன் விரித்த தமிழ்

வரலாறு, தன் வரலாறு :

46. நினைவுக் குமிழிகள்-முதற் பகுதி
47. நினைவுக் குமிழிகள் - இரண்டாம் பகுதி
48. நினைவுக் குமிழிகள் - மூன்றாம் பகுதி

49. வேமனர்
50. குரஜாட
51. மேகானி
52. சி. ஆர். ரெட்டி
53. தாயுமான அடிகள்
54. பட்டினத்தடிகள்
55. வடலூரர் வள்ளல்
56. பிரதிவாதி பயங்கரம்

அறிவியல் :

57. மானிட உடல்
58. அணுவின் ஆக்கம்
59. இளைஞர் வானொலி
60. இளைஞர் தொலைக்காட்சி
61. அதிசய மின்னணு
62. தமது உடல் (த. அ. ப. பெற்றது)
63. இராக்கெட்டுகள் (த. அ. ப. பெற்றது)
64. அம்புலிப் பயணம்
65. தொலை உலகச் செலவு
66. அணுக்கரு பௌதிகம் (செ. பல்கலைக் கழகப் பரிசு பெற்றது)
67. இல்லற நெறி
68. வாழையடி வாழை
69. அறிவியல் விருந்து (தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது)
70. வானமண்டலக் காட்சி

ஆராய்ச்சி :

71. கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி
72. Religion and Philosophy of Nalayiram with Special Reference to Nammalvar
73. Studies in Arts and Sciences (61 st Birth Day Commemoration Volume)
74. Collected Papers.




First Paper: என்ன ஆச்சரியம்? "Enna Aacharyam !" [1949]

# ஓர் அறிமுகம்

பேராசிரியர்

# ந சுப்பு ரெட்டியார்




Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

1) **Tamil Payitrum Murai [1957]**
2) **Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
3) **Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
4) **Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21

b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

***Research on Professor's Books***

a) University of Madras - 1993 (leading to PhD)

b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)



பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற
100 நூல்கள் (முழுமையாக)
**http://tinyurl.com/nsr100collections**
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]




# India Book of Records

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**




**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**

*India Book of Records is registered with the Government of India with RNI no. HARENG/2010/32259.*

*India Book of Records is affiliated to Asia Book of Records and follows Asian Protocol of Records (APRs) as per the consensus arrived at the meeting of the Chief Editors of National Record Books, Ho Chi Minh City, Vietnam.*




ISBN 978-81-939502-4-1

